# ஐந்தெழுத்து அருள் நிலை



முனைவர் (திருமதி) எம். தேவகி

பாண்டிமாதேவி பதிப்பகம்

# ஐந்தெழுத்து அருள் நிலை

ஆசிரியர்

'சித்தாந்த கலாநிதி'

முனைவர் (திருமதி) **எம். தேவகி** எம்.ஏ., பிஎட்., எம்.ஃபில், பிஎச்.டி.,

உதவி ஆசிரியர்

சைவ சித்தாந்தத் தத்துவத் துறை

ம.கா. பல்கலைக் கழகம்

மதுரை –21.

வெளியீடு

**பாண்டிமாதேவி பதிப்பகம்,**

W2 B4,3, வடக்குத் தெரு,

அன்னஞ்சி அஞ்சல் (வழி) தேனி - 625 531

தேனி மாவட்டம்

## நூல் விவரக் குறிப்பு

| | |
|---|---|
| நூற்பெயர் | : ஐந்தெழுத்து அருள் நிலை |
| நூலாசிரியர் | : முனைவர் எம். தேவகி |
| வெளியீடு | : பாண்டிமாதேவி பதிப்பகம்,<br>W2 B4,3, வடக்குத் தெரு,<br>அன்னஞ்சி அஞ்சல் (வழி) தேனி – 625 531<br>தேனி மாவட்டம் |
| உரிமை | : ஆசிரியருக்கு. |
| பதிப்பு | : 2007 |
| பக்கம் | : viii + 200 |
| படிகள் | : 1000 |
| அச்சிட்டோர் | : அமுதச்சகம், மதுரை – 625 016.<br>(தொலைபேசி : 2382029) |
| விலை | : ரூ. 90/- |

**AYNDHEZHUTHU ARUL NILAI**

**By**

**Dr. (Mrs.) M.Devaki** M.A., B.Ed., M.Phil., Ph.D.,

This book is published with the Financial Assistance of **TIRUMALA - TIRUPATI DEVASTHANAMS** under their scheme aid to publish religious books. My sincere thanks to T.T.D.

\- Author.

Published by

DR. (Mrs.) M. DEVAKI,
PANDIMADEVI PATHIPPAKAM,
W2B4, Door No.3, North Street,
ANNANJI P.O.(via) Theni - 625 531.
Theni District

# முன்னுரை

தொன்மைமிக்க சைவசமயம் இன்றுவரை மக்களிடம் செல்வாக்குப் பெற்றுத் திகழ்கிறது. பழந்தமிழர் தத்துவ அறிவைச் சங்க இலக்கியங்கள் தெற்றெனக் காட்டுகின்றன. 'சைவசித்தாந்தத் தத்துவம் தமிழர்களின் பேரறிவின் வெளிப்பாடு' என்று மேலைநாட்டு அறிஞர் டாக்டர் ஜி.யு. போப்பையர் கூறுகிறார். சைவசித்தாந்தத் தத்துவத்திற்கு அடிப்படையாகத் திகழ்வன நால்வேதங்களும் ஆகமங்களும் ஆகும். பன்னிரு திருமுறைகளும். 14 சித்தாந்த சாத்திரங்களும் அவற்றின் சாரமாகத் திகழ்கின்றன. இந்நூலில் உள்ள கட்டுரைகள் தமிழ்மாருதம், சித்தாந்தம், சைவநீதி (கனடா), மலேசியா மாநாட்டுமலர் முதலானவற்றில் வெளிவந்தனவாகும். எனவே கூறியது கூறல் தவிர்க்க முடியாததாயிற்று.

இந்நூல் வெளிவரப்பெரிதும் துணைபுரிந்த என் ஆசான் – பேராசிரியர் முனைவர் இரா.மோகன் அவர்களுக்கும், பேராசிரியப் பெருந்தகை முனைவர் ச. சாம்பசிவனார் அவர்களுக்கும், இந்நூலை நன்முறையில் அச்சிட்டுத்தந்த அமுதச்சகத்தார்க்கும் என் நன்றி.

இந்நூல், சைவசித்தாந்தம் பயில்வோர்க்குப் பெரிதும் துணைபுரியும் என்று நம்புகின்றேன்.

மதுரை . முனைவர் (திருமதி) ***எம். தேவகி***

16–7–2007

# பொருளடக்கம்

# 1. ஐந்தெழுத்து அருள்நிலை

## முன்னுரை

'மந்திரம்' என்பது தம்மை உச்சரிப்பவரைக் காப்பது எல்லரச் சமயத்தினர்க்கும் மந்திரங்கள் உள்ளன. அவற்றை உச்சரித்தே இறைவனை வழிபடுகின்றனர். சைவர்கள், தவறாமல் முறையே செபிக்க வேண்டியது. 'நமசிவாய' என்ற ஐந்தெழுத்து மந்திரமாகும். மந்திரத்தை 'மறைமொழி' என்று தொல்காப்பியரும் கூறுவர்.

*"நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த*
*மறைமொழிதானே மந்திரமென்ப"*

என்பது அந்நூற்பா.

உச்சரிப்பவனை இறைவனுடன் தொடர்புபடுத்தும் சிறப்பான சக்தி மந்திரத்துக்கு உள்ளது. எப்படி உச்சரித்தாலும் இறைவனுடைய திருமந்திரம் நன்மையையே செய்கிறது. பக்தி சிரத்தையுடன் செபிக்கும்போது விரைவில் பயன் தருகிறது. ஆதரவுடன் மனமுருகி மந்திரத்தை நினைப்பவன், பிறப்பு இறப்பாகிய பெருங்கடலை எளிதில் கடக்கிறான்.

## வேதத்தில் 'நமசிவாய' மந்திரம்

நால்வேதங்களில் கடைசியில் உள்ள அதர்வண வேதம் 'ரிக், யசுர், சாமம்' என்ற மூன்றுள் அடங்கிவிடுவதால், இவை 'திரயீ' எனப்படுகின்றன. நடுவில் உள்ள 'யசுர்' வேதத்தில் உள்ள ஏழு சம்கிதைகளில் நடுவில் உள்ள நான்காம் சம்கிதையில் 'ஸ்ரீ ருத்திரம்' உள்ளது. அதன் நடுவில் 'நமசிவாயச சிவதராயச' என்று சொல்லப்படும் மந்திரம் உள்ளது. எனவே வடமொழி வேதத்தில் நடுநாயகமாக விளங்குவது திருவைந்தெழுத்து எனலாம்.

## தேவாரத்தில் திருவைந்தெழுத்து

தேவாரம் பாடிய மூவர் முதலிகள் 'பஞ்சாக்கரப் பதிகங்கள்' அருளியுள்ளனர். திருஞானசம்பந்தர் இரண்டும், திருநாவுக்கரசர் ஒன்றும்,

சுந்தரர் ஒன்றுமாக நான்கு பதிகங்கள் பாடியுள்ளனர்.

திருநாவுக்கரசர் தேவாரத்தில் ஐந்தாம் திருமுறையிலுள்ள நூறு பதிகங்களில் 51 வது ஆக அமைந்துள்ள திருப்பாலைத் துறைப்பதிகத்தில் பதினொரு பாடல்களில் நடுவிலுள்ள ஆறாவது பாடலில் 'சிவாய' என்ற சிவமந்திரம் அமைந்துள்ளது.

*"விண்ணினார் பணிந்தேத்த வியப்புறும்*
*மண்ணினார் மறவாது சிவாயவென்*
*றெண்ணினார்க் கிடமா எழில் வானகம்*
*பண்ணினாரவர் பாலைத் துறையதே"*

என்பது அப்பாடல். எனவே வடமொழி வேதத்திலும் தென்தமிழ்த் தேவாரத்திலும் அவற்றின் இதயமாக 'திருவைந்தெழுத்து' விளங்குகிறது எனலாம்.

*"அருள் நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்*
*பொருள்நூல் தெரியப் புகின்"*

என்று திருவருட்பயனும் (81) இதன் பெருமை கூறும். சைவ சமயத்திற்கு ஒப்பற்ற பெருமை தருவது, இவ்வைந்தெழுத்து மந்திரமாகும்.

*"அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்*
*அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும்—அஞ்செழுத்தே*
*ஆனந்தத் தாண்டவமும் ஆறாறுக் கப்பாலாம்*
*மோனந்த மாமுத்தியும்"*

என்ற 'உண்மை விளக்க'ப் பாடலும் (44) இக்கருத்தை விளம்புகிறது.

இறைவன் அருளிய வேதமும், முதன்மை பெற்ற புராணங்கள் அனைத்தும் இறைவனது ஆனந்த நடனமும், முப்பத்தாறு தத்துவங்களுக்கப்பாற்பட்ட பேரின்ப நிலையாகிய முத்தி நிலையும் ஆகிய அனைத்துமே திருவைந்தெழுத்து ஆகும். தத்துவாதீதமாகிய மோன மாமுத்தி நிலையும் அதுவேயாம்!

## முத்திக்குரிய சாதனம்

சைவ சமயத்தில் 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்ற நால்வகை நெறிகளும், திருவைந்தெழுத்தும் வீடுபேற்றுக்குரிய சாதனங்களாகக் கூறப்படுகின்றன.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கித் திருவைந்தெழுத்தை ஓத, நன்னெறியில் செலுத்துவது; நெக்குருகி ஆர்வம் மிகப் பெருகி நினைய, தக்க வானவராக்குவது; எல்லாத் தீங்கையும் நீக்குவது; பந்த பாசமறுத்து, உயிரைப் பேரின்பத்துள் திளைக்கச் செய்வது; நெஞ்சகம் நைந்து நினைய இடர் கெடுப்பது; இம்மையிலும், அம்மையிலும் நமக்குத் துணையாவது, ஓதி நீறணிய வினைப்பகைக்கு அத்திரமாவது; "நஞ்சுண்ட கண்டனின் நலங்கொள் நாமம்" என்று திருவைந்தெழுத்தின் சீர்மையை விளக்குவர் திருஞானசம்பந்தர்!

சோதிவாணன் பொற்றுணையடிகளைப் போற்றுதற்கு நற்றுணையாவதும், நம் நாவினுக்கு அருங்கலமாவதும், நம் நடுக்கத்தைக் கெடுத்துப் பாவத்தை நண்ணி நின்றறுப்பதும், நம் இடுக்கணைத் தீர்த்து நல்லக விளக்காயிருப்பதும், நலமிகக் கொடுப்பதும் 'நமசிவாய மந்திரம்' என்று போற்றுவர் திருநாவுக்கரசர்.

உலகப் பற்றுக்களையறுத்து இறைவன் திருவடிப்பேற்றை விரும்புவோர் மறவாது சொல்லும் நாமம், அரவுதனை அரைக்கசைத்த அடிகளின் நாமமாகும் எனக் கூறுவர் சுந்தரர்.

பெரும்பிறவிக் கடலில் வீழ்ந்து அல்லலுறும் உயிர்களைக் கரைசேர்க்கும் புணையாகும் 'ஐந்தெழுத்து' என்பர் மணிவாசகர்.

## திருவைந்தெழுத்தும் ஓங்காரமும்

ஓங்காரமாகிய 'ஓம்' என்னும் பிரணவம் 'அ,உ,ம' என்ற மூன்று எழுத்துக்கள் அடங்கியதாகும். ஓம் என்ற எழுத்துக்களில் 'நாதம், விந்து, அ,உ,ம' இவை அடங்கும். எனவே ஓங்காரத்துள் அடங்கியிருப்பது திருவைந்தெழுத்தே என்பர் அறிஞர்.

*"உய்ய என்உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா"*

என்பது மணிவாசகர் வாக்கு.

## திருவைந்தெழுத்தின் உட்பொருள்

சைவ சித்தாந்த சாத்திரங்கள், திருவைந்தெழுத்தின் ஒவ்வொரு எழுத்திற்கும் ஒவ்வொரு பொருள் கூறுகின்றன.

ந–திரோதானசத்தி; ம– ஆணவமலம்;

சி—சிவன்; வா—அருள்; ய—உயிர்

*"இறை சத்தி பாசம் எழில் மாயை ஆவி*
*உற நிற்கும் ஓங்காரத்துள்" (திருவருட்பயன்,82)*

என்றும்;

*"சிவன் அருள் ஆவி திரோதமலம் ஐந்தும்*
*அவன் எழுத்து அஞ்சின் அடைவாம்" (உண்மை விளக்கம்,41)*

என்றும் சித்தாந்த சாத்திரங்கள் ஓதுகின்றன. ஐந்தெழுத்தின் ஒவ்வோர் எழுத்தும் ஒவ்வொரு பொருளைக் குறிப்பதால் அவை 'பதம்' எனவும் கூறப்படும்.

*"அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி"*

என்று சுந்தரர் அருள்கின்றார்.

## திருவைந்தெழுத்தும் இறைவன் திருமேனியும்

திருவைந்தெழுத்து இறைவனுடைய திருமேனியையும் குறிக்கும்.

ந— திருவடியையும்; ம—வயிற்றையும்; சி—தோளையும்; வா—முகத்தையும்; ய—திருமுடியையும் குறிக்கும்.

*"ஆடும்படி கேள் நல் அம்பலத்தான் ஐயனே*
*நாடும் திருவடியிலே நகரம்—கூடும்*
*மகரம் உதரம் வளர்தோள் சிகரம்*
*பகரும் முகம் வா முடியப் பார்"*

என்பது 'உண்மை விளக்கம்' (32)! மேலும், சிகரம் நடராசப் பெருமானின் துடியுடைய திருக்கரத்தையும், வகரம் வீசிய திருக்கரத்தையும், யகரம் 'அஞ்சேல்' எனக்காட்டும் அபயகரத்தையும், நகரம் நெருப்பேந்திய திருக்கரத்தையும், மகரம் முயலகன் பொருந்திய திருவடியையும் குறிக்கும் என்று கூறுவதுமுண்டு! (உண்மை விளக்கம்,33)

ஐந்தெழுத்து மந்திரம், தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், காரண பஞ்சாக்கரம், மகாகாரண பஞ்சாக்கரம், முத்திப் பஞ்சாக்கரம் எனப்பல வகைப்படும். இவற்றை ஞானாசிரியர்பால் கேட்டு உணர்தல் வேண்டும். 'நமசிவாய' என்பதிலுள்ள 'ந,ம' என்ற எழுத்துக்கள் மறைப்புச் சக்தியையும், ஆணவ மலத்தையும் குறிப்பதால் உலகப்பயன் வேண்டுவோர் 'ந','ம' வை முன்னிறுத்தி ஓதி வழிபடுவர். 'சி,வ' என்பவை சிவத்தையும் அருளையும்

குறிப்பதால் உலகப் பயன் வேண்டாது, வீடுபேறு வேண்டுவோர் 'சிகர', 'வகர' ங்களை முன்வைத்து ஓதி இறைவனை வழிபடுவர்.

> *"சிவ முதலே ஆமாறு சேருமேல் தீரும்*
> *பவம் இது நீ ஓதும்படி" (திருவருட்பயன், 87)*
> *"நம்முதலா ஓதில் அருள்நாடாது நாடும் அருள்*
> *சிம் முதலா ஓது நீ சென்று" (உண்மை விளக்கம், 142)*

என்பதால் பிறவிப்பிணி நீங்கச் 'சிகர'த்தை முன்வைத்தே ஓத வேண்டும்.

## ஓதுவதன் பயன்

ஐந்தெழுத்தை, நாவின் நுனி உதட்டைத் தீண்டாமல் ஒருமை பொருந்தி மனத்தினாலே செபித்தல் 'மானசம்' ஆகும். இதனால் கோடி மடங்கு பலன் கிடைக்கும். தன் செவிக்கு மட்டும் கேட்குமாறு மெல்லிய குரலில் செபித்தல 'உபாஞ்சு' (மந்தம்) எனப்படும். இதனால் பதினாயிரம் மடங்கு பலன் கிட்டும். அருகிலுள்ள பிறருக்கும் கேட்குமாறு உரக்கச் செபித்தல் 'வாசகம்' (உரை) எனப்படும். இதனால் நூறு மடங்கு பலன் உண்டு. (புலியூர்க்கேசிகன், சித்தியளிக்கும் சிவநெறி, பக்.81,82) எனவே 'மானசமே' மிகுந்த பயன் தருவதாகும்.

## முடிவுரை

'சிவாயநம' என்பதில் நடுவில் நிற்பது 'ய' கரமாகிய உயிர். இது பாசக்கட்டிலிருந்து விடுபட்டு இறைவனையடைய வேண்டுமெனில் ஞானாசிரியர் திருவைந்தெழுத்தை உபதேசிக்க, அதனைப் பெற்று முறைப்படி ஓதிவர வேண்டும்; அந்நிலையில் ஆன்மாவின் தற்போதம் கெடும்; அம்மையப்பராகிய இறைவன் நமது உயிரோடு கூடவே நின்று, துன்பந்துடைத்து எல்லையில்லாப் பேரின்பத்தை வழங்கியருளுவான்.

> *"அஞ்செழுத்துமே அம்மையப்பர் தமைக் காட்டுதலால்*
> *அஞ்செழுத்தை ஆறாகப் பெற்றிருந்தே-அஞ்செழுத்தை*
> *ஓதப்புக்கு உள்ள மதியுங்கெடில் உமைகோன்*
> *கேதமற வந்தளிக்கும் கேள்" (திருக்களிற்றுப்படியார்-25)*

## உ. உள்ளது போகாது இல்லது வாராது!

**முன்னுரை**

சித்தாந்த சைவத்தின் அனைத்துக் கொள்கைகளும், காரணகாரிய வாத அடிப்படையிலேயே அமைக்கப்பட்டுள்ளன. இக்கொள்கை பற்றிச் சிவஞான மாபாடியம் முதற்சூத்திரம் இரண்டாம் அதிகரணம் பின்வருமாறு கூறுகிறது:

"இல்லது தோன்றாது; உள்ளது அழியாது" என்ற விளக்கம், 'சற்காரியவாதம்' என்ற தொடருக்குக் கூறப்படுகிறது. அதாவது இல்லாத பொருள் எதுவும் எக்காலத்தும் தோன்றுவதில்லை; உள்ள பொருள் எக்காலத்தும் அழிவதில்லை; எனவே, "ஏற்கனவே உள்ள பொருளே தோன்றும்" என்னும் கருத்து வலியுறுத்தப்படுகின்றது.

**எல்லாம், 'உள்ள பொருளே'!**

சைவ சித்தாந்தத் தத்துவம், "இல்லாத பொருள் என்று எதுவுமே இல்லை" என்று கூறுகின்றது.

*"ஏகன் அநேகன் இருள்கரும மாயை இரண்டு*
*ஆக இவை ஆறு ஆதியில்" (திருவருட்பயன், 52)*

என்ற உமாபதி சிவத்தின் பாடல் இங்கு எண்ணத்தகும்.

"ஒருவனாகிய இறைவனும், எண்ணற்ற உயிர்களும், உயிர்களின் எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணமாக விளங்கும் ஆணவ மலமும், நல்வினை தீவினைகளாகிய வினைகளும், சுத்தமாயை, அசுத்த மாயை ஆகிய இருவகை மாயைகளும் ஆகிய இந்த ஆறு பொருட்களும் தோற்றம் இல்லாக் காலந்தொட்டு உள்ளன. எனவே இவை என்றும் உள்ள பொருட்கள்; தோற்றம் உள்ள பொருள்கள் 'ஆதி' எனவும், தோற்றமில்லாப் பொருள்கள் 'அனாதி' எனவும் கூறப்படும்!" என்பது இப்பாடலின் கருத்து.

எனவே, பொருட்கள் ஆறு; அவை என்றும் நித்தியப் பொருட்கள் ஆகும் என்று சைவ சித்தாந்தம் கொள்கிறது. எனவே, சைவ சித்தாந்தத்தின் அடிப்படை உண்மைகளை இப்பாடல் உரைக்கிறது எனலாம்.

“எக்காலத்திலும் உள்ள நித்தியப் பொருட்களான அவற்றில், ஒன்றிலிருந்து, மற்றொன்று தோன்றவில்லை” என்று சைவசித்தாந்தம் கூறுகிறது. இக்கொள்கை ‘சற்காரியவாதம்’ எனப்படும்.

### நூலில் புடவையும், மண்ணில் பானையும்

சித்தாந்த சைவத்தைப் போலவே, இந்திய தரிசனங்களுள் ஒன்றான சாங்கியமும் இதனைக் கொள்கிறது.

ஒரு செயலுக்குக் காரணம், காரியம் என்ற இருநிலைகள் உண்டு; ஒவ்வொரு காரியத்திற்கும் காரணம் வேண்டும். ஆனால் சாங்கியர் காரணநிலையிலும் காரியம் உண்டு என்று கூறுகின்றனர். நூலில் புடவை, உற்பத்திக்கு முன்னமே உள்ளது. மண்ணில் பானை, முன்னமே உள்ளது. திடீரென்று தோன்றவில்லை. மண்ணும் நூலும் காரணம்; பானையும் புடவையும் காரியம்!

### சற்காரிய வாதத்துக்கு மறுப்பு!

உற்பத்திக்கு முன்னே, காரணத்திலேயே காரியம் உள்ளது என்ற கொள்கையை, பௌத்தரும் நியாய வைசேடிகரும் ஏற்பதில்லை. இல்லாதது தோன்றும் என்ற ‘அசத் காரிய வாதத்தை’ யே ஏற்கின்றனர்.

‘காரணத்தில் இல்லாதது காரியத்தில் வரும்’ என்று கூறுகின்றனர்.

பானை செய்யப்படுமுன், அதன் காரணமாகிய மண்ணில் இருக்கிறது எனில், உற்பத்தி என்ற தொழிலைக் கூறவேண்டியதில்லை. காரணமும் காரியமும் ஒன்றாகி விடும். மண் என்றும் பானை என்றும் பிரிக்க வேண்டியதில்லை. மண்ணை எடுத்துத், தண்ணீரை ஊற்றி, அடுப்பில் இட்டுச் சமைக்க முடியாது. எனவே, காரணத்தில் இல்லாத ஒன்று, அதாவது வடிவம், காரியத்தில் தோன்றுகிறது. எனவே, காரியம் புதியதாகத் தோன்றுகிறது என்பர் நியாய வைசேடிகர்.

### சாங்கியரின் மறுப்பு

காரியமாகிய பானை, காரணமாகிய மண்ணில் சூக்கும நிலையில் மறைந்துள்ளது; அதனைத் தூல நிலையில் ஆக்குவதுதான் குலாலர் செய்யும் வேலை. காரணத்தில் இல்லாத ஒன்றைக் காரியத்தில் உண்டாக்க முடியாது.

அவ்விதம் முடியுமெனில், பானையைப் பெற மண் வேண்டியதில்லை; புடவையைப் பெற நூல் வேண்டியதில்லை. மண்ணிலிருந்து புடவையைப் பெறலாம் என்றும், ஒன்றுமில்லாத சூனியத்தில் இருந்து ஒன்று உண்டாகிறது என்றும், விபரீத முடிவுகள் தோன்றி விடும் என்று கூறி, சாங்கியர் தமது 'சத்காரிய வாதத்'தை நிலை நிறுத்துகின்றனர் (கி. லட்சுமணன், இந்திய தத்துவ ஞானம், பக்.191–194)

## சைவ சித்தாந்தம் கூறுவது

கன்றுக்குட்டியின் தலையில் சூக்குமநிலையில் மறைந்துள்ள கொம்பு, பின் வளர்ந்து வெளிப்படும். முயலின் தலையில் இல்லாத கொம்பு, எப்படி முயன்றாலும் தோன்றுவது இல்லை. ஆதலால், காரணத்தில் இல்லாதது தோன்றாது; காரணத்தில் நுட்பமாக உள்ளது, செயலினால் வெளிப்பட்டுத் தோன்றும். இக்காரணத்தால், மாயை என்னும் முதற் காரணத்தில், உயிருக்குத் தேவையான உடல், கருவி, உலகம், நுகர்பொருள்கள் அடங்கியுள்ளன என்றும், நுட்பமாக உள்ள இப்பொருள்கள், இறைவனது திருவருளால் உயிருக்கு உளதாகின்றன என்றும் உணரமுடிகின்றது.

## சிவஞான முனிவரது கருத்து

கிணற்றில் முன்பே உள்ள நீர், தோண்டுதல் என்னும் தொழிலால் வெளிப்படுகின்றது. ஒரு காரணத்தில் முன்பே உள்ள காரியம், காரண முயற்சிகளால் வெளிப்படுகின்றது. குடம், மண்ணில் சூக்கும நிலையில் மறைந்து இருந்து, வனைதல் என்ற தொழிலால் தூலநிலையில் உளதாகிறது; இங்குத் தோன்றியது என்னும் உணர்வு உண்டாகிறது.

சத்– உள்பொருள் (பயன்படாத நிலையில் உள்ளது)

காரியம்– காரியப்படுவது (பயன்படும் நிலைக்கு மாறுவது)

வாதம்– எக்காலத்தும் மாறாத இவ்வுண்மையின் அடிப்படையில் பேசப்படும் கொள்கை.

## மாயை

அழிகின்ற எல்லாப் பொருள்களும் உருமாறி, நிலை மாற்றம் அடையுமே தவிர, இல்லாமற் போகாது. மகா சங்கார காலமாகிய முற்றழிப்புக் காலத்தில் உயிருடைய உடல், கருவி, உலகம், நுகர்பொருள் ஆகியன,

மாயையாகிய நுண்பொருள்களில் ஒடுங்கி, இறைவனது திருவடிகளில் அடங்கி நிற்கின்றன. மீண்டும் படைப்புக் காலத்தில், இறைவனுக்கு வைப்பு சத்தியாகப் பயன்படும் மாயையினின்றும் உயிருக்குத் தேவையான உடல், பொருள், உலகங்களை இறைவன் உருவாக்கித் தருகின்றான்.

## முடிவுரை

எனவே, சைவ சித்தாந்தம் கூறும், "உள்ளது போகாது, இல்லது வாராது" எனும் கொள்கையே அறிவுக்குப் பொருத்தமாக உள்ளது எனலாம்.

## 3. சைவ சித்தாந்தத் திறன்

### முன்னுரை

சைவ சித்தாந்தம், "இறை(பதி), உயிர் (பசு), தளை (பாசம்)" எனும் முப்பொருள் உண்மைகளை இனிதாக எடுத்து இயம்பும்! இவண், இறைவனுக்கும் உயிருக்குமுள்ள தொடர்பு குறித்து ஒரு சிறிது ஆராயப்படுகிறது.

### உயிரின் தன்மை

உயிர் பலவகைகளில் இறைவனுக்கு அடிமையானது. கண், புற இருள் நீங்கிடவும், மேலும் பொருட்களைத் தெளிவாகக் காண்பதற்கும் சூரியனின் உதவியை வேண்டி நிற்கிறது. அதுபோல உயிரும், தன் அறிவை மறைக்கின்ற 'ஆணவம்' நீங்கிடவும், அதற்கு மேலும் சுத்தநிலையில் இறைவனை அறிந்து அனுபவித்தற்கும் இறைவனுடைய பேரருளை அவாவுகின்றது. கண், இருளில் இருளாகவும், விளக்கின் ஒளி, சூரிய ஒளி இவற்றுடன் சேர்ந்த பொழுது, அந்தந்த ஒளியாகவும் நின்று சார்ந்ததன் வண்ணமாய்த் திகழ்வது போல, உயிரும் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் தன்மையுடையது. இறைவன் போலத் தனித்து நிற்கும் தன்மை உடையதன்று!

### சங்கரர் கருத்து

இறைவன், உயிரின் "பெத்தநிலை, முத்திநிலை" இரண்டிலும் உயிருக்குத் துணையாக இருக்கின்றான். இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள இந்தத் தொடர்பைப் பிற சமயங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாகக் கூறுகின்றன.

'ஏகமேவ அத்விதீயம் பிரமம்' என்பது வேதவாக்கியம். அத்விதீயம் ந+துவிதம்–இரண்டில்லாதது. 'துவிதம்' என்றால் இரண்டு என்று பொருள். ந+துவிதம் என்பதில் ந–இதற்கு இன்மைப் பொருள் கொண்ட சங்கரர்,

“உள்ளபொருள் ஒன்றே, இரண்டில்லை; ஒரே பிரமமே பல உயிர்களாக மாயையில் பிரதிபலிக்கிறது” என்றார். எனவே அபேதப்பொருள் கொண்ட சங்கரர், கடவுளுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு, பொன்னுக்கும் அணிகலனுக்கும் உள்ள தொடர்பே ஆகும். பொன்னே அணிகலன், அணிகலனே பொன் என்பது தவிர, அவற்றிடையே வேற்றுமையில்லை என்று கூறினார்.

### இராமானுசர் கூறுவது

‘பேதா பேதப் பொருள்’ கொண்ட இராமானுசர், நகரத்துக்கு இன்மைப் பொருள் கொண்டு “பிரமம் ஒன்றே” என்று கூறினார். ஒரு “நாட்டிற்கு அரசன் ஒருவனே, வேறு இல்லை” என்ற பொருளில் கூறினார். “முழுமுதற் கடவுளாகிய பிரமம் ஒன்றே; இரண்டில்லை” என்ற கருத்தை வலியுறுத்தினார். மேலும், “கடவுளும் உயிர்களும் சொல்லும் பொருளும் போல ஒன்றும் தான், வேறும்தான்” என்றார்.

### மத்துவரின் கூற்று

நகரத்துக்கு மறுதலைப் பொருள் (வேதப் பொருள்) கொண்ட மத்துவர், “இறைவனும் உயிர்களும், ஒளியும் இருளும் போல என்றும் வேறானவை”என்றார்.

### மெய்கண்டார் மொழிந்தது!

‘நகரத்’ துக்கு ‘அன்மைப்’ பொருள் கொண்ட மெய்கண்டார் பொருள் இரண்டு என்பதை ஏற்று, “அப்பொருள்கள் கலப்பினால் ஒன்று” என்று கூறுகின்றார். அதாவது, இருபொருள்கள் இரண்டெனாதபடி ஒரு தன்மைப்பட்டு நிற்றல்; ஒற்றுமைப்பட்டு இருத்தல். அப்பிராமணன் என்றவிடத்து, அக்குலத்தில் பிறந்தும் பிராமணத்தன்மை அற்று இருத்தல் போல! அஃதாவது, இங்குப் பொருளின் இருப்பு மறுக்கப்படவில்லை, பொருளின் தன்மைதான் மறுக்கப்படுகிறது. எனவே, இறைவனும் உயிர்களும் ஒரே தன்மையாய் இயைந்து நிற்றலே ‘அத்துவிதம்’ என்று பொருள் கூறினார் மெய்கண்டார்(உம்) உப்பும் நீரும்போல. இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு “அபேதம், பேதா பேதம், பேதம்” என்ற மூன்று தன்மைகளையும் உடையது என்று விளக்குகிறார். . இறைவன்,

உயிர்களிடம் 'ஒன்றாதல் (அபேதம்), வேறாதல் (பேதம்), உடனாதல் (பேதா பேதம்), என்ற மூன்று வகைகளில் தொடர்பு கொள்கிறான்.

### ஒன்றாதல் [அபேதம்-உடலும் உயிரும் போல]

நரம்பு முதலியவற்றால் கட்டப்பட்ட உடம்பினையும், ஐம்பொறி முதலியவற்றையும் தனதாகக் கொண்டு உடம்பிற்கு இட்ட பெயரைச் சொல்லிப் பிறர் அழைத்த போது, அவ்வுடம்பே தானாய் நின்று 'ஏன்' எனக் கேட்பது போல, இறைவன் உயிர்களே தான் எனும்படி பேதமின்றி ஒன்றாகி நிற்கின்றான். இவ்வாறு இறைவன் உயிர்களிடம் கலப்பினால் ஒன்றாயிருப்பது உயிர் நிலை பெறுவதற்காக ஆகும்.

### வேறாதல் [பேதம்-கண்ணொளியும் சூரிய ஒளியும் போல]

கலப்பினால் ஒன்றாயிருந்தாலும் பொருள் தன்மையால் இறைவன் உயிருக்கு வேறாய் இருக்கின்றான்; வேறாய் இருந்து அறிவிக்கின்றான். சூரிய ஒளி கண்ணுக்கு வேறாயிருந்து காட்டுதல் போல்; மேலும் எழுத்துக்களுள் 'அகரம்' தனியாகவும் ஒலிக்கிறது; பிற எழுத்துக்களுடன் கலந்து நின்றும் ஒலிக்கிறது. இதனை 'அங்காத்தல்' என்கிறோம். எனவே அகரம், ஒலிப்பதில் தலைமை பெற்று விளங்குவது போல, உயிர்களின் அறிவு விளங்குதலும், பொருள்களை அறிந்து செயல்படுதலும் இறைவனின் உதவி இல்லையெனில் முடியாது. இறைவனின் இவ்வுதவி, உயிரின் அறிவு விளங்குவதற்காக ஆகும்.

> *"அகர உயிர்போல் அறிவாகி எங்கும்*
> *நிகரில் இறைநிற்கும் நிறைந்து"* *(திருவருட்பயன்,1)*
> *"அக்கரங்கட் கெல்லாம் அகரவுயிர் நின்றாற்போல்*
> *மிக்க உயிர்க்குயிராய் மேவினோம்...." (உண்மை விளக்கம்,29)*

என்று சித்தாந்த சாத்திரங்கள் கூறும்.

### உடனாதல் [பேதாபேதம்-ஆன்மபோதமும்-கண்ணொளியும் போல]

கண், ஒரு பொருளைப் பார்க்கும் போது, கண்ணொளியுடன் உயிரின் அறிவும் இணைந்து சென்றால்தான் உயிர் பொருளை அறிய முடியும். அது போல, இறைவனும் உயிரறிவுடன் இணைந்து, இயைந்து நின்று உயிருடன்

உடனாக நின்று உலகப் பொருள்களை உயிர் அழுந்தி அறிய உதவியாக இருக்கின்றான். இந்த உதவி, உயிரின் செயற்பாட்டிற்காகவே!

இறைவன் தன் சத்தியினால், உயிரிடத்துக் கலப்பினால் ஒன்றாகவும், பொருள் தன்மையால் வேறாகவும், உடனிருந்து இயக்கும் தன்மையினால் உடனாகவும் இருப்பதற்கு, மெய்கண்டார் கூறும் உதாரணம் பின்வருமாறு:

*“அரக்கொடு சேர்த்தி யணைத்த அக்ககற்போல்*
*உருக்கி உடங்கியைந்து நின்று – பிரிப்பின்றித்*
*தானே உலகாம் தமியேன் உளம்புகுதல்*
*யானே உலகென்பன் இன்று” (சிவஞானபோதம், 2 : 1 : 9)*

அரக்குடன் உருக்கி ஒன்றாக்கப்பட்ட கற்பொடி, அதனுடன் ஒன்றாகவும் இருக்கிறது; அரக்குக்கு வேறாகவும் இருக்கிறது; உடனாகவும் இருக்கிறது. அதுபோல, இறைவனும் உயிரிடத்து ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும் இருந்து உயிர்களை இயக்குகின்றான். மெய்கண்டார் கூறும் இந்த எடுத்துக்காட்டு இம்மூன்று தன்மைகளுக்கும் பொருந்தும்.

## சைவ சித்தாந்தத் திறன்

சிவஞானபோதத்தின் வழிநூலான சித்தியார், இறை–உயிர்களின் இக்கலப்பை, “உலகெலாமாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி...” என்று எடுத்துரைக்கின்றது. சிவஞானபோதத்தின் சார்பு நூலாகிய கன்மத்தாணையின்

*“உலகெலாமாகி வேறாய் உடனுமாய் ஒளியாய்ஓங்கி*
*அலகிலா உயிர்கள் கன்மத்தாணையின் அமர்ந்துசெல்ல*
*தலைவனாய் இவற்றின்தன்மை தனக்கு எய்தலின்றித்தானே*
*நிலவுசீர் அமலனாகி நின்றனன் நீங்காதுஎங்கும்”*
*(சுபக்கம், இரண்டாம் சூத்திரம்,1)*

என்று எடுத்துரைக்கும்.

சிவப்பிரகாசம்,

*“புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப்*
*புகலளவைக் களவாகிப் பொற்புணிபோ லபேதப்*
*பிறப்பிலதாய் இருள்வெளிபோல் பேதமும் சொற்பொருள்போல்*

*பேதாபேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன*
*அறத்திறனால் விளைவதாய் உடல்உயிர்கண் அருக்கன்*
*அறிவொளிபோல் பிறிவரும் அத்துவித மாகும்*
*சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ*
*சித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்க லுற்றாம்" (7)*

என்று இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள அத்துவிதத் தொடர்பைச் சிறப்பித்துக் கூறுகிறது.

**முடிவுரை**

இறைவனுக்கும் உயிருக்குமுள்ள இத்தகைய தொடர்பு குறித்துச் சைவசித்தாந்த சாத்திர நூல்கள் மிக விரிவாகப் பேசும். இங்கே அவற்றின் சுருக்கம் மட்டுமே தரப்பட்டது!

## 4. சைவசித்தாந்தம் கூறும் 'மாயை'க் கோட்பாடு

**முன்னுரை**

உயிரைப் பந்திக்கும் மும்மலங்கள் ஆணவம், கன்மம், மாயை என்பன. 'மூவகையெனுந்தளையுற்றிடும் ஆவிகள் உலப்பில' என்பது கந்தபுராணம். "இவ்வுலகங்களுக்கெல்லாம் முதற்பொருளான மாயையின் இருப்பைப் பேரறிவுடையார் எவரேனும் மறுக்க முந்துவரோ" என்று மாயையின் இயல்பை மறைமலையடிகள் புலப்படுத்துகின்றார். (சிவஞானபோத ஆராய்ச்சி, ப.109)

பாசம்–கட்டுவது; மாயை, உயிரின் அறிவை விளக்குவதாயினும் ஆணவத்தோடு சேர்ந்து உயிரறிவைத் திரிந்த அறிவாகச் செய்வதால், அது பாசத்துடன் சேர்த்துச் சொல்லப்படுகிறது.

**மாயை-சொற்பொருள் விளக்கம்:**

'மாயை' என்ற சொல்லின் விளக்கத்தை ர.ராமானுஜாசாரி பின்வருமாறு கூறுகிறார்:

"உலகின் அடிப்படை மாயை; அதுவே அதன் பொருட்காரணம்; 'மாயை' எனும் சொல், உலகம் தோன்றுவதற்கும் அது மீண்டும் ஒடுங்குதற்கும் அடிப்படையான தத்துவத்தை விளக்கும். 'மா' – ஒடுங்குதல்; 'யா' – வருதல்; தனது அறிந்துணரும் திறமையைச் செயல்படுத்த, ஆன்மாவுக்குச் சக்தியை அளிப்பது மாயை; அத்துடன் அச்சக்தியைப் பயன்படுத்தும் கருவிகளையும் அளிக்கிறது. மாயையின் கைவேலையானது, தனு (தேகம்), கரணம் (கருவிகள்), புவனம் (உலகங்கள்), போகம் (அனுபவிக்கும் பொருட்கள்) ஆகியவற்றை அளிக்கிறது; அதுவே அண்டம்; அதுவே பிண்டம்" (சைவ சித்தாந்தம், ப.75)

**மாயை முதற்காரணம்**

குடத்துக்கு 'மண்'–முதற்காரணம்; 'திரிகை சக்கரம்'–

துணைக்காரணம்; குயவன்—நிமித்த காரணம் போல, உலகத் தோற்றத்துக்கு முதற்காரணம்—மாயை; துணைக் காரணம் – சத்தி, உயிர்களின் வினை; நிமித்த காரணம்—இறைவன்.

*"காரிய காரணங்கள் முதல்துணை நிமித்தம் கண்டாம்*
*பாரின் மண்திரிகை பண்ணுமவன் முதல்துணை நிமித்தம்*
*தேரின் மண்மாயை ஆகத் திரிகைதன் சத்தி ஆக*
*ஆரியன் குலாலனாய் நின்று ஆக்குவன் அகிலமெல்லாம்"*
*(சிவஞான சித்தியார் 38)*

உலகம் "தோன்றுதல், நிலைத்தல், அழிதல்" ஆகிய முத்தொழில்களும் மாயையின் விளைவே ஆம்.

**விளக்கு**

ஆணவத்தில் அழுந்தித் துன்புறும் உயிருக்கு இறைவன் மாயையிலிருந்து உயிர் உய்தி பெறும் பொருட்டு, அவற்றின் வினைக்கு ஏற்றவாறு, தனுவாதிகளைப் படைத்துக் கொடுப்பன். இவை, உயிரின் இயல்பான அறிவை மறைத்திருக்கும் ஆணவ இருள் நீங்கித் திருவருள் ஒளியாகிய விடிவு வருமளவும் விளக்கினைப் போல் உதவுகின்றன.

*"விடிவாம் அளவும் விளக்கனைய மாயை*
*வடிவாதி கன்மத்து வந்து" (திருவருட்பயன் 30)*

என்பர் உமாபதி சிவாச்சாரியார்.

**குருடர்க்கு ஓர் ஊன்றுகோல்**

பிறவிக் குருடர் கையில் கொடுத்த ஊன்று கோலைப் போல மாயை, உயிரின் அறிவு விளக்கத்திற்கு வழிகாட்டுகிறது.

*"கட்புலனாற் காணார்தம் கைக்கொடுத்த கோலேபோல்*
*பொற்புடைய மாயை......"*

என்று போற்றிப் பஃறொடை (11) கூறும்.

**மாயை உள்பொருள்**

பிற சமயங்கள் மாயை உயிருக்குத் தீங்கு விளைவிக்கிறது என்று கூறுகின்றன. ஆனால், சைவ சித்தாந்தமோ, மாயை உயிருக்கு நன்மை

விளைவிக்கும் எனக் கூறுகிறது. சங்கரர், மாயை என்பது 'அநிர்வசனீயம்' அதாவது "சொல்லொணாதது" என்று கூறுவர். ஆனால் சைவரோ, "மாயை உள்ளபொருள்" என்று கூறுவர்.

### உயிரறிவை விளக்குவது மாயை

உயிரின் அறிவு, இச்சை செயல்களைத் தடுத்து நிற்பது ஆணவமே; மாயை, உயிரின் அறிவு இச்சை செயல்களை விளங்கச் செய்கிறது. இருளாகிய ஆணவத்தின் பிடியில் இருக்கின்ற உயிர், மாயையின் காரியமாகிய உடலை விளக்காகக் கொண்டு, உலகப் பொருள்களை அறிகிறது.

### மாயையின் சொரூப-தடத்த இயல்பு

உயிரறிவை விளக்கி நிற்றல், மாயையின் 'சொரூப இயல்பு' எனப்படும்.

'தடத்த வியல்பு' இன்னொரு பொருளின் சேர்க்கையால் வருகிறது. மாயை, ஆணவத்தின் சேர்க்கையால் உயிருக்குத் திரிந்த அறிவைத் தரும்; அதாவது, நிலையற்ற உலகப் பொருள்களை நிலையென்று எண்ணுவதாகும். உயிருக்குள் இருக்கும் சிவத்தை உயிர் அறியவிடாமல், ;
பின்னர்த் தெளிவிக்கும், இக்காரணம் பற்றியே மாயை, 'மலம்' எனப்படுகிறது. உயிரின் வியாபக அறிவை மாயாகருவிகள் தடை செய்கின்றன. முத்தியில் கருவிகளினின்றும் நீங்கியதும் வியாபக அறிவு விளங்கும்.

### உவர்மண் போல!

துணியைப் பற்றியுள்ள அழுக்கினைப் போக்குவதற்காகச் சேர்க்கப்படுகின்ற உவர்மண் முதலிய அழுக்கினைப் போன்றது மாயை. உயிரைப் பற்றியுள்ள ஆணவம், வினைகளை நீக்கும் பொருட்டு, இறைவன், பின்னால் வந்த அழுக்காகிய மாயையினின்றும் உடல்கருவிகளைப் படைத்து அளிக்கின்றான். (சித்தியார், சுபக்கம் 142)

"ஆணவமும் மாயையும் இருளும் ஒளியும் போல் தம்முள் மாறுபட்டவையாகும்" என்பர் அருள்நந்தி சிவம் (சித்தியார், சுபக்கம் 174)

**மாயையும் அதன் வகைகளும்**

ஆணவ மல பரிபாகம் பொருட்டுத் தோன்றுகின்ற உலகம், மாயாமலம் பரிபாகம் அடையும் பொருட்டு நிலைக்கும்.

"ஆணவம், கன்மம்" போலவே, மாயையும் அநாதியாகும். இம்மாயையானது, "சுத்தமாயை, அசுத்தமாயை" என இரு வகைப்படும்.

**சுத்த மாயை**

ஆணவத்தின் பிடியில் துன்புற்றிருக்கும் உயிருக்குத் தொடர்பு நால்வகை வாக்குகளாகும். அவை, "சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி" என்பன. இவை சுத்தமாயையிலிருந்து தோன்றுகின்றன. உயிருக்கு இவற்றால் சிறிது உணர்வு தோன்றும். 'சுத்தமாயை; மலகன்மங்களோடு விரவாமல், சுத்தமாய் இன்பம் ஒன்றே தருவது; இதனை இறைவனே காரியப்படுத்துவதால் இச் சுத்தமாயையிலிருந்து தோன்றும். தத்துவங்களைச் 'சிவதத்துவங்கள்'என்பர். 'சுத்தமாயை' உயிரை மயக்காமல், பேராற்றல் பேரறிவு தருவது.

**அசுத்த மாயை**

இது சுத்த மாயைக்குள் அடங்கியிருப்பது; மலகன்மங்களுடன் விரவியிருப்பது; அசுத்தமாயிருப்பது. உயிர்களை மயக்கி இன்பதுன்ப மயக்கம் தருவது. இதனைச் சிவனது அருள்வழி நிற்கும் வித்தியேசுரராகிய 'அனந்த தேவர்' என்பவர் காரியப்படுத்துகிறார்! எனவே அவற்றிலிருந்து தோன்றும் தத்துவங்கள் 'வித்தியாதத்துவங்கள்' எனப்படுகின்றன. (சித்தியார், சுபக்கம் 143)

வித்தியாதத்துவங்களாகிய ஏழு தத்துவங்களால்தான், உயிர், ஆணவத்தால் உண்டான சடத்தன்மை நீங்கி, அறிவு இச்சை செயல்கள் சிறிதே விளங்கப் பெற்று வினையை ஈட்டவும் நுகரவும் உரியதாகிறது. வித்தியாதத்துவங்களுள் 'கலை' என்பதிலிருந்து 'பிரகிருதி' தோன்றும். சைவம் தவிரப் பிற வேத சமயங்கள் யாவும் பிரகிருதியை மட்டுமே ஏற்கின்றன. பிரகிருதியிலிருந்து 24 தத்துவங்கள் தோன்றும்.

அந்தக் கரணங்கள் 4 – மனம், புத்தி, அகங்காரம், சித்தம்

ஞானேந்திரியங்கள் 5 – மெய், வாய், கண், மூக்கு, செவி

கன்மேந்திரியங்கள் 5 – வாய், கை, கால், எருவாய், கருவாய்

தன்மாத்திரை 5 – ஓசை, பரிசம், உருவம், சுவை, நாற்றம்

தூலபூதம் 5 – நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம்

பிரகிருதி மாயையைத் தொழிற்படுத்துபவர் 'சீகண்ட உருத்திரர்!' இவை 'ஆன்ம தத்துவங்கள்' எனப்படும். பிற சமயங்கள், ஆன்ம தத்துவத்துடனேயே நிற்கின்றன. சிவதத்துவமும், வித்யாதத்துவமும் சைவத்திற்கே உரிய தத்துவங்களாகும். சிவாகமங்களில் இவை கூறப்படுகின்றன. அசுத்தமாயையும் பிரகிருதிமாயையும் விதையும் முளையும் போல்வன ஆகும்! 'சிவம்' முதல் 'சுத்த வித்தை' ஈறாக–5; 'காலம்' முதல் 'மாயை' முடிய–7; மேற்கூறிய ஆன்ம தத்துவம்–24. எனவே சைவ சித்தாந்தம் கூறும் தத்துவம் 36 ஆகும்!

**முடிவுரை**

உயிரின் உள்ளிருக்கும் இறைவன், ஞானாசிரியர் வடிவில் வந்து மெய்ஞ்ஞானத்தை உயிருக்கு உணர்த்த, உயிர் தன்னைக் கருவிகளின் வேறாக உணர்ந்து, திருவருளில் அழுந்தி நிற்கும். உடலோடு கூடி இருக்கும் சீவன்முத்தி நிலையில், உயிர் கருவிகளினின்றும் நீங்கி நிற்கும். அந்நிலை இராப்பகலற்ற இடம் எனப்படும். இரவு–உயிரை ஆணவமலம் மூடியிருக்கும் இருள்நிலை; பகல்–மாயா கருவிகளோடு கூடிய சகல நிலை; இவ்விரண்டு நிலையில் இருந்தும் நீங்கிய நிலையே 'சுத்தநிலை'யாகும்.

*"இரவு பகலில்லா இன்ப வெளியூடே*
*விரவிவிரவி நின்று உந்தீபற*
*விரைய விரைய நின்று உந்தீபற"* *(திருவுந்தியார் 20)*

என்று அந்த உயர்ந்த நிலையை அடையத் திருவுந்தியார் நம்மை விரைவுபடுத்துகிறது.

மெய்கண்டார், தமது 'சிவஞான போத' நூலுக்கு அதிகாரி யார் என்று கூறும் போது "ஆணவமாகிய ஒரு மலமுடைய விஞ்ஞான கலருக்கு இறைவன் உள்நின்று அருளுவான்; ஆணவம், கன்மமாகிய இருமல

முடையார்க்குத் (பிரளயாகலர்) தன் உருவில் முன்தோன்றி அருளுவான்; எனவே இவ்விருவர்க்கும் இந்நூல் தேவையில்லை; இவ்வுலகத்தில், அனுபவமுடைய சற்குருவால் எடுத்துப் போதிக்கப்படும் இந்த ஞானநூல், ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலம் உடைய சகலர்க்கே தேவை" என்று உரைக்கின்றார். எனவே "சிவஞானபோத நூல் சகலருக்கே உரியது" என்பதால் மாயையின் வலிமையை நம்மால் ஒருவாறு உணர்ந்து கொள்ள முடிகிறது. (ஆ. ஆனந்தராசன், சிவஞானபோத வழித்துணை விளக்கவுரை, ப.312)

## 5. முடிவிலாப் பேரின்ப நிலை

### முன்னுரை

சைவ சமயத்தின் தொன்மைக்குச் சிந்து சமவெளியின் மொகஞ்சதாரோ, ஹரப்பா போன்ற இடங்களில் கிடைத்த வரலாற்றுச் சின்னங்களும், முத்திரைகளும் சிறந்த சான்றுகளாகும். இவை, அக்கால மக்கள் சிவ வழிபாட்டில் சிறந்து விளங்கினர் என்பதைத் தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. அத்தகைய சைவ சமயம் கூறும் தத்துவக் கருத்துக்கள், வெளிநாட்டு அறிஞர்களும் விரும்பி ஏற்கும் அளவுக்குச் சிறப்புற்றுத் திகழ்கின்றன.

### முடிவிலாப்

'அநாதியான நித்தியப் பொருள்' என்று கூறப்படும் உயிர், 'புல்லாகிப் பூடாகிப் புழுவாகி மரமாகி' எண்ணற்ற பிறப்பு இறப்புக்கள் அடைந்து, சலிப்புற்று இன்பதுன்ப உவர்ப்பு அடைந்து திருவருளாகிய தூநிழலில் இளைப்பாற வேட்கை கொள்கிறது. மனித்தப் பிறவியின் உயர்ந்த பயனும்அதுவே! இறைவன், உயிரின் வினைக்கேற்றவாறு தந்த உடல் கருவிகளைப் பயன்படுத்தி, மும்மல நீக்கமடைந்து இறுதியில் இறைவனுடைய திருவடிகளை உயிர் அடைகிறது. உயிர்களின் எண்ணற்ற துன்பங்களுக்கு மூல காரணமான மூலமலமாகிய 'ஆணவமலம்' அகலுதல் மட்டுமே வீடுபேறு அன்று! இன்பகனமாகிய முதல்வனின் பேரின்பத்தை நுகர்ந்து அவனுடன் இரண்டறக் கலந்திருப்பதே முடிவான 'முத்தி நிலை' என்று முத்தியின் இலக்கணத்தை இயம்புவது சைவ சித்தாந்தம்.

### புறச் சமயத்தார் கூறும் முத்தி நிலை

புலன்வழிச் சென்று ஐம்புல இன்பங்களைக் குறைவில்லாமல் நுகர்வதே 'முத்தி' என்று உலகாயதரும், ஐந்து கந்தங்களாகிய கூட்டுப் பொருள்கள் நீங்குவதே 'முத்தி' என்று பௌத்தருள் ஒரு சாராரும், ஞானாவரணீயம்

முதலிய எண்வகைக் குற்றங்கள் நீங்கப் பெற்று, அருகக் கடவுளின் எண்வகை நற்குணங்களைப் பெறுவதே 'முத்தி' என்று சமணரில் ஒரு சாராரும், உயிர், மனத்தின் தொடர்பினின்றும் நீங்கிக் கல்போல் கிடப்பதே 'முத்தி' என்று, நியாய வைசேடிகரும், வேள்விகளைச் செய்வதே 'முத்தி' என்று மீமாம்சையினரும் கூறுவர்!

### சைவ சித்தாந்த முத்தி

'ஞானம்' பெற்ற உயிர், சிவத்தோடு அத்துவிதமாய்க் கலந்து சிவனது பேரின்பத்தில் திளைத்து, இன்புற்றிருத்தலே சித்தாந்த சைவம் கூறும் 'முத்தி' ஆகும். குருஞானசம்பந்தர்,

*"உள்ள மலநீக்கி ஓங்கு சிவானந்த*
*வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே—கள்ளவிழ்பூங்*
*கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்தில்*
*சித்தாந்த முத்தியெனத் தேறு"*

எனச் சித்தாந்த சைவம் கூறும் முத்தியின் இலக்கணத்தை விளக்குகிறார்.

### முத்தியில் உயிரின் நிலை

முத்தியில் சிவமும் உயிரும் ஆகிய இரு பொருள்களும் கலப்பினால் ஒன்றாக இருக்கின்றன. ஒரு தன்மைப்பட்டு ஒற்றுமைப்பட்டு இருக்கின்றன. உயிர், தான் ஒரு பொருள் உண்டு என்பதையே உணராமல், சிவத்தையே உணர்ந்து சிவத்தினுள் அடங்கியிருக்கிறது. உயிரின் சார்ந்ததன் வண்ணமாகும் தன்மைக்கு ஏற்ப பெத்த நிலையில் (சகலநிலை) மாயையில் அழுந்தி நின்றது போலவே, முத்திநிலையில் சிவத்தில் அழுந்தி நிற்கும்; சிவமும் உயிரும் ஒன்றாக இயைந்திருந்தாலும், உயிரின் தன்மை வெளித்தோன்றாமல், சிவத்தினுள் அடங்கி விடுகிறது. 'அவனேதானேயாகிய அந்நெறி'யில் நிற்கிறது. உயிரின் சகல நிலையில், உயிரும் சிவமும் சேர்ந்திருந்தாலும் சிவம் சிறிதும் தோன்றாமல், உயிர் மட்டுமே இருப்பதாகத் தோன்றுகிறது. அதுபோலவே, வீட்டுநிலையில் சிவம் மட்டுமே இருப்பதாகத் தோன்றும். உயிரின் இருள்நிலையிலும் ஆணவம்தான் தெரியும்; உயிரின் இருப்புத் தோன்றாது. தாயுமானவர், இந்நிலையை,

*"ஆணவத்தோடு அத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்*

*தாணுவினோடு அத்துவிதம் சாரும்நாள் எந்நாளோ?'*

என்று குறிப்பிடுவர்.

**அத்துவிதம்**

வீட்டுநிலையில் உயிரின் இருப்பு விளங்கித் தோன்றாது, சிவமே விளங்கித் தோன்றுவதை மெய்கண்டார் ஓர் உவமை மூலம் விளக்குகிறார்:

உப்பு, நீரில் கலந்து ஒன்றாய், அந்நீராகவே நிற்கிறது. நீரும் உப்பும் சேர்ந்திருக்கும் பொழுது, உப்பின் கடினத்தன்மை நீரில் கரைந்து உப்பின் இருப்பே தெரியாது, நீர் ஒன்றே தெரியும். அதுபோல், உயிரானது தான் கெடாது ஆணவம் தன் தன்மை கெட்டு நிற்கும். அப்போது உயிர், சிவத்தோடு அத்துவிதமாய் நிற்கும்.

உப்பு, கண்ணுக்குத் தோன்றாது; நீர் மட்டுமே தெரிகிறது. அதுபோல உயிர், சிவத்துள் அழுந்தி நிற்கச் சிவபரம்பொருள் ஒன்றே முனைத்துத் தோன்றும். உப்பும் நீரும் கலந்த இந்நிலையில், ஒரு பொருள் என்பதா, அல்லது இருபொருள் என்பதா எனில் ஒன்று எனவும் கூறலாகாது; இரண்டு எனவும் கூறலாகாது. அது போல, உயிரும் சிவமும் இயைந்துள்ள அத்துவித நிலை ஒன்று அல்லது இரண்டு எனக் கூற இயலாத நிலையாகும்.

*"நசித்(து) ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா*
*நசித்திலதேல் ஒன்றாவ தில்லை – நசித்துமலம்*
*அப்(பு) அணைந்த உப்பின் உளம் அணைந்து சேடமாம்*
*கப்பு இன்றாம் ஈசன் கழல்"* *(சிவஞான போதம், வெண்பா,72)*

என மெய்கண்டார் கூறுகின்றார்.

இருபொருட்கள் இரணடெனாதபடி ஒரே தன்மையாய் இயைந்து நி ற்றல் 'அத்துவிதம்'. முத்தியில் உயிரும் சிவமும் ஒரே தன்மையாய் இயைந்து நிற்றலே 'அத்துவிதம்' எனப்படும். இந்நிலையை,

*"ஒன்றானும் ஒன்றாது; இரண்டாலும் ஓசைஎழாது*
*என்றால் ஒன்றன்று இரண்டும் இல்" (திருவருட்பயன், 75)*
*"ஒன்றாகாமல் இரண்டாகாமல்*
*ஒன்றும் இரண்டும் இன்றாகாமல்" (இருபா இருபஃது,20)*

என்று சித்தாந்த சாத்திரங்கள் உரைக்கின்றன.

### தாடலைபோல் உயிரும் சிவமும்

'தாள்+தலை' என்ற இரு சொற்களும் இணையும்போது, 'தாடலை' என்றாகிறது. இதனை 'ஒரே சொல்' எனவும் கூறமுடியாது. அதுபோலவே முத்தியில் உயிரும் சிவமும் சேர்ந்துள்ளது.

*"தாடலைபோற்கூடி அவைதான் நிகழா வேற்றின்பக்*
*கூடலைநீ ஏகம்எனக் கொள்" (திருவருட்பயன்,74)*

என்பது திருவருட்பயன். 'அவை, தான் நிகழாவேற்றின்பக் கூடல்' என்பது, உயிரும் சிவமும் வேறாகப் பிரித்தறியப்படாத நிலையாகும். இந்நிலை, சிவத்தின் திருவடிகளில் ஆன்மா தன் தலையைப் பொருத்தி நிற்றலாகும். இறைவனது திருவடிகள் ஞான, கிரியா சத்திகளாகும்; உயிர் இறைவனது திருவடியைத் தலையில் சூட்டிக் கொள்ளுதல் என்பது, திருவருள் வழி உயிர் நிற்றலாகும்.

### திரிபுடி ஞானம்

அவ்வாறு உயிரும் சிவமும் சேர்ந்திருக்கும் நிலையானது 'அறிபவன் (ஆன்மா), அறியப்படும் பொருள் (சிவம்), அறிவு (ஞானம்)' என்ற மூன்று தன்மைகளும் அற்றதாக இருக்கும். உமாபதிசிவாசாரியார் இந்நிலையை,

*"மூன்றாய தன்மை அவர்தம்மின் மிகமுயங்கித்*
*தோன்றாத இன்பம் அது என்? சொல்" (திருவருட்பயன்,79)*

என்பர்.

ஒவ்வொரு நுகர்ச்சிக்கும், 'நுகருவோன், நுகரப்படும் பொருள், நுகர்வதாகிய அறிவு' என்ற மூன்று பகுதிகள் உண்டு. இதனைத் 'திரிபுடி' என்று வடமொழியில் கூறுவர். இம்மூன்று நிலைகளும் உணரப்படாமல், நுகரப்படும் பொருளாகிய சிவப்பேரின்பம் ஒன்றே விளங்கித் தோன்றும். உமாபதி சிவாசாரியார்,

"காண்பானுங் காட்டுவதும் காண்பதுவும்" எனும் 'வினாவெண்பா' பாடல் (11) மூலம் சுத்தாத்துவித சித்தாந்த முத்தியின் இயல்பை இனிது விளக்குகிறார்.

முத்தியில் சிவமும் உயிரும் இயைந்திருக்கும் தன்மையைப் பல

உவமைகள் வாயிலாகத் தமது 'உண்மை விளக்க' நூலில் விளக்குகிறார் மனவாசகங் கடந்தார்!

### மலரும் மணமும்போல!

முத்திநிலையில் உயிர், "கனியில் சுவை போலவும், மலரின் மணம் போலவும், தீயில் சூடுபோலவும், வீணையின் இன்னிசை போலவும் 'முதல்வனுடன் அத்துவிதமாய்க்' கலந்திருக்கும்; அவ்வாறு கலந்து தன் முனைப்பற்று இருக்கும்போது அங்குச் சீவபோதமாகிய உயிரறிவு அடங்கிச் சிவபோதமாகிய 'பதிஞானம்' ஒன்றே மேலோங்கி நிற்கும்" என்று அருளாளர்கள் கூறுவர்.

### தத்துவமும் உயிரும் போல!

உயிரறிவு சிறிது விளங்குகின்ற பெத்த நிலையில் (சகல நிலை), உயிர் தான் வேறு, கருவிகள் வேறு என்று வேறுபடுத்தி அறியாமல் கருவிகளுடன் அழுந்தி நிற்பது போல, தூய ஆன்மா, முத்திநிலையில் சிவத்துடன் கலந்து, சிவத்தில் அழுந்தியிருக்கும்.

சகலநிலையில், மாயையின் முக்குணத்தில் அழுந்தியிருந்த உயிர், சுத்த நிலையில் இறைவனுடைய எண்குணங்களில் அழுந்தி நிற்கும்.

### ஞாயிறும் திங்களும் போல!

நிலவின் ஒளி, சூரியன் முன் முனைத்துத் தோன்றாது, சூரிய ஒளியினுள் அடங்கி நிற்கும். அது போலவே, ஆன்மாவும் முத்தியில் இறைவனுடைய பேரின்பத்தில் அழுந்தித் தற்போதமற்று இருக்கும். மெய்கண்டாரும்,

> *"வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது*
> *வெய்யோனையாகாத மீன்போல"....*
>
> *(சிவஞானபோதம், 5 : 2 : உதாரண வெண்பா,32)*

என்பர்!

சூரிய ஒளியில் விண்மீன்கள் விளங்கித் தோன்றா!; இருப்பினும் விண்மீன்கள் இல்லையெனக் கூறல் இயலாது. அதுபோலச் சிவானுபவத்தில் ஆன்மாவைச் சிவத்தினின்றும் பிரித்துக் காண முடியாது.

## முத்திக்கு வழி

பெறற்கரிய இந்த சுத்தாத்துவித முத்திக்கு வழி, ஒப்பற்ற முத்திற வழிபாடாகிய, 'குரு, லிங்க, சங்கம (அடியார்)' வழிபாடுகளாகும். அறுபத்துமூன்று நாயன்மார்களும் 'குரு லிங்க சங்கம'வழிபாடு செய்து முத்தி பெற்றவர்கள் ஆவர்!

> *"குருலிங்க வேடம் எனக்கூறில் இவை கொண்டார்*
> *கருவொன்றி நில்லார்கள் காண்"*

என்பது 'உண்மை விளக்கம்' (51)

## முடிவுரை

தாய்ப் பசுவானது கன்றினிடத்தே அன்பைப் பொழிவது போல, நாமும் 'குருலிங்க சங்கம' வழிபாட்டில் பற்றுக் கொண்டு, மனமுருகிநின்று அவ்வழிபாட்டில் உறுதி கொண்டு நின்றால் உயிர்களைத் தீராத துன்பத்தில் ஆழ்த்துகின்ற சகசமலமாகிய 'ஆணவத்' தை நீக்கி, இறையருளைப் பெற்று இன்புற்றிருக்கலாம்!

> *"கற்றா மனம்போல் கசிந்து கசிந்தேயுருகி*
> *உற்றுஆசான் லிங்கம் உயர்வேடம்—பற்றாக*
> *முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்*
> *பத்திதனில் நின்றிடுவர் பார்" (52)*

என்பர் உண்மை விளக்க ஆசிரியர்! மாணிக்க வாசகரும்,

> *"கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே"*

என்பர்!

## 6. மெய்கண்ட சாத்திரங்களில் மனித மேம்பாட்டுச் சிந்தனைகள்

### முன்னுரை

"இறைவன்–ஆன்மா–உலகு இவற்றோடு மிக நெருங்கிய தொடர்பு உடையது மனிதனுடைய ஒழுக்கம். இறைவன், ஆன்மா இவைகளைப் பற்றி ஒருவன் எத்தகைய கருத்துக்களை உடையவனாகின்றானோ, அதற்கேற்பவே அவனுடைய ஒழுக்கமும் அமையும்... எந்தவித ஆராய்ச்சியும் ஒழுக்கத்தைப் பற்றி அறிவுக்கு நேரடியாகவோ, மறைமுகமாகவோ துணை செய்வனவாதல் வேண்டும்" என்பர் அறிஞர் (கி. லட்சுமணன், இந்திய தத்துவஞானம் பக்.30.31) தனி மனித மேம்பாட்டுக்கு "இறைவன்–ஆன்மா–உலகு" பற்றிய சிந்தனைகள் பெருந்துணை புரியும். மெய்கண்ட சாத்திரங்கள், 'திருவுந்தியார் முதல் சங்கற்பநிராகரணம்' ஈறாகப் பதினான்காகும். இவற்றில் இத்தகைய மனித மேம்பாட்டுச் சிந்தனைகள் எவ்வாறு இடம்பெற்றுள்ளன என ஒரு சிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

### சமயக் கருத்துக்கள்

"ஒவ்வொரு சமயத்தையும் ஆராய்ச்சி செய்தால் அதனதன் முடிவு, 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் திருமொழிக்கு அரண் புரிந்தே நிற்கும்" என்பது திரு.வி.க. வின் கூற்று (என் கடன் பணி செய்து கிடப்பதே ப.7) சமயம் மனிதனைப் புன்னெறிகளினின்றும் தெய்வீக நெறிக்கு அழைத்துச் செல்கிறது. விவேகானந்தர்,

> *"பாமரனைப் பண்புள்ளவனாகவும், பண்புள்ளவனைத்*
> *தெய்வமாகவும் உயர்த்தும் கருத்தே மதம் எனப்படும்.*
> *....என்றைக்கு ஆன்மீகம் தனது செல்வாக்கை இழந்து*
> *உலகாயதம் தலையெடுக்க ஆரம்பிக்கின்றதோ, அன்று*

*முதல் அந்தச் சமுதாயத்திற்கு அழிவும் ஆரம்பித்து விடுகிறது"*

என்று கூறுகின்றார். (விவேகானந்தரின் சிந்தனைத் துளிகள், பக்.7,8,13).

இன்றைய மக்களிடையே பெரும் ஒழுக்கக்கேடு இருப்பதற்கும், சான்றோர் வழிவழியாகக் கூறிவந்துள்ள அறநெறிக் கருத்துக்கள் ஒதுக்கப்பட்டு வருவதற்கும் காரணம், மாணவப் பருவத்திலேயே சமயக்கல்வியும், அறநெறிக் கல்வியும் கற்றுத்தரப்படாமையே ஆகும்.

**சைவசித்தாந்தமும் மனித மேம்பாடும்**

சமயம்–சமைத்தல்; மனிதனைப் பக்குவப்படுத்தி மேனிலைக்குச் செலுத்துதல்; ஆன்மீகம், மனித வாழ்க்கைக்கு அரண் செய்து, ஒழுக்கமாக வாழும் மனப்பக்குவத்தைத் தந்து, இறைவனை நாடச் செய்கிறது. மனிதனை மேம்படுத்த உலகில் பல சமயங்கள் தோன்றின. தோற்றம் கூற முடியாத 'சைவ சமயம்' கூறும் கொள்கைகள் மன்பதைக்கு உய்வு காட்டுவன. 'கடவுள் உண்டு' எனப் பல்வேறு சான்றுகளால் நிலைநிறுத்துவது 'சைவ சித்தாந்தம்'. கடவுள் உணர்வு உள்ளவன், பிறர்க்குத் தீங்கு செய்ய மனம் துணியான்; ஆன்மீக வாழ்வில் கடவுள் உணர்வு உள்ளவர்களே, மனித இனம் வாழப் பலவிதமான தொண்டுகளைப் புரிந்துள்ளனர் என்பது தெளிவு!

*"அறஇயல் தனித்து நில்லாது, ஆன்மஇயலைச் சேர்ந்து இருக்க வேண்டும் என்று சித்தாந்தத்தில் வற்புறுத்தப் பெறுகிறது"*

என்பர் வ.ஆ. தேவ சேனாபதி (சைவசித்தாந்த அடிப்படைகள், ப.71).

கடவுள் நம்பிக்கை உள்ளவன் தன்னைத் தீமையினின்றும் காத்துக் கொண்டு, பிற உயிர்களையும் காக்கின்றான். இறைவன் எல்லா உயிரிடத்தும், பொருள்களிடத்தும் கலந்து இயக்குகின்றான் என்ற எண்ணம் உடையவனே இறைவனுக்கு உண்மையுள்ளவனாக நடந்து அவனுக்குத் தொண்டனாகிறான். சைவ சித்தாந்தத் தத்துவ நூல்களாகிய 'மெய்கண்ட சாத்திரங்கள்' மனிதன் வாழ்வாங்கு வாழ்ந்து உய்வதற்கும், கடவுள்நிலையை அடைவதற்கும் சிறந்த வழியைக் காட்டுகின்றன.

### கடவுட் கொள்கையும் மனித மேம்பாடும்

மெய்கண்ட சாத்திரங்கள், உலகப் பொருள்களை 'இறைவன், உயிர்கள், தளை' என்ற முப்பொருள்களுள் அடக்கி விடுகின்றன. மெய்கண்ட சாத்திரங்களில் தலைமணி நூலாம் 'சிவஞானபோதம்' இறைவனின் இருப்பைத் தகுந்த சான்றுகளுடன் விளக்குகிறது.

*"அவன் அவள் அதுவெனும் அவைமூ வினைமையின்*
*தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்*
*அந்தம் ஆதி என்மனார் புலவர்" (சிவஞானபோதம்1)*

என்பர் மெய்கண்டார். இதற்கு விரிவான விளக்கங்களைத் தருவர் அறிஞர். (ஆ.ஆனந்தராசன், சிவஞானபோத வழித்துணை விளக்கவுள்ளது. பக்.14–35)

கண்ணால் காணப்பட்ட இவ்வுலகைக் கொண்டு, கண்ணால் காணப்படாத இறையுண்மையை நிறுவுகிறது சித்தாந்தம். குடம், ஆடை முதலிய பொருட்கள் பல பகுதிகளாகப் பிரிக்கக்கூடிய அவயவப் பகுப்பு உடையதாய், சுட்டியறியக் கூடியதாய், தோன்றி நின்று அழிந்து போகக் கூடியதாய் உள்ளன. இவற்றைச் செய்தவன் ஒருவன் உளன் என்பதை நாம் அறிவோம். அதுபோல, இப்போது கூறப்பட்ட மூன்று தன்மைகளையும் உடைய இவ்வுலகமும் ஒருவனால் படைக்கப்பட்டு, காக்கப்பட்டு, அழிக்கப்படுகிறது. அவனே இறைவன்; முழுமுதற்பொருள். (சித்தியார் சுபக்கம்,21; திருக்களிற்றுபடியார்,1) எனவே, கடவுள் உண்மையைத் தெளிவித்து மனிதனை நல்வழிப்படுத்துவன மெய்கண்ட சாத்திரங்கள் எனலாம்.

### பசுக் கொள்கையும் மனித மேம்பாடும்

'உயிர்' என்ற ஒரு பொருள் உண்டு என்பதையே அறியாத மனிதர்கள், தம்மை அடிமையாக உடைய இறைவனையும் உணரமாட்டார்கள். அதனால் தமது அறியாமையினால் தமக்கும் தம்மைச் சேர்ந்தவர்க்கும் கேடு சூழ்வர். 'உயிர் உண்டு' என்ற கருத்தை மெய்கண்டார் பல சான்றுகள் மூலம் தமது சிவஞான போதத்தில் நிறுவுகிறார் (சிவபோதம் 3) உயிர்கள் பல என்றும், அவை அநாதி என்றும், ஆணவ மலத்தால் அவற்றின் அறிவு மறைக்கப்பட்டுள்ளது என்றும், தம் இருவினையின் பயனாய் 'உடல்' பெற்று

நுகர்ச்சி உடையன என்றும், சாத்திரங்கள் கூறுகின்றன.

*"எண்ணரிதாய் நித்தமா யிருள்மலத்தி னழுந்தி*
*இருவினையின் தன்மைகளுக் கீடான யாக்கை*
*அண்ணல் அருளால்நண்ணி அவையவராய் அதனால்*
*அலகில் போகங்கள் அருந்துமாற்றால்*
*புண்ணியபாவம் புரிந்து போக்குவரவுடைத்தாய்ப்*
*புணரும் இருமலபாகம் பொருந்தியாக்கால்*
*உள்நிலவும் ஒளியதனால் இருளகற்றிப்பாதம்*
*உற்றிடும் நற்பசுவர்க்கம்"*

என்பது சிவப்பிரகாசம் (19). இறைவன் உள்ள அன்றே உயிர் உள்ளது என்கிறது, 'நெஞ்சு விடுதூது'. "....... சுடர் ஒளியான், என்றும் உளன் அன்றளவும் யானும் உளனாகி" (நெஞ்சுவிடு தூது 8–10).

## பாசக் கொள்கையும் மனித மேம்பாடும்

'பாசம்' எனப்படுபவை "ஆணவம், கன்மம், மாயை" என்பன. 'ஆணவம்' மும்மலங்களுள் முதன்மையாய் நின்று, அநாதியாகவே உயிரிடத்துப் பொருந்தி நெல்லிடத்து உமி போலவும், செம்பினிற் களிம்பு போலவும் உள்ளது. உயிரின் எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணமாய் இருப்பதால் 'மூலமலம்' எனப்பட்டது. உயிரின் அறிவை மறைப்பதால் 'உயிர்' எண்ணற்ற வினைகளை ஈட்டிப் "பிறப்பு இறப்பு இன்பதுன்பம்" இவற்றையடையும். உயிரானது 'யான் எனது' என்ற செருக்குற்றுத் தன் முனைப்புக் கொண்டு, உண்மைத் தலைவனையறியாது, தாம் பொய்த்தலைமை பூண்டு தம்மைச் சுற்றியுள்ள இறைத் திருவருளையறியாது, கீழான உலக இன்பங்களுக்கு ஆசைப்பட்டு, நீங்காத் துன்பத்தில் தம்மைத் தாமே ஆழ்த்திக் கொள்ளும்! (திருவருட்பயன் 34,37,38,39) ஆணவத்தின் காரியங்களாக "விகற்பம், கற்பம், குரோதம், மோகம், கொலை, அஞர், மதம், நகை" எனும் எட்டு இயல்புகளை இருபா இருபஃது பின்வருமாறு கூறுகின்றது:

*".......விகற்பங் கற்பங்*
*குரோதம் மோகங் கொலையஞர் மதநகை*
*விராயெண் குணனுமா ணவமென விளம்பினை"*

*(இருபா இருபஃது 4:2–4)*

ஆணவத்தின் விளைவுகளான இவ் எட்டுத் தீக்குணங்களால் உயிர்கள் அடையும் துன்பங்கள் எண்ணிலடங்கா. சித்தாந்த சாத்திரங்கள், ஆணவத்தின் பிடியினின்றும் உயிர் நீங்கி, இறைத்திருவடியை அடைய வழிகாட்டுகின்றன. உயிர் அறியாது, உயிருக்குள்ளிருக்கும் இறைவனே குருவாக அருளும் தன்மையை எடுத்து விளக்கி, உலக மக்களை அறிவு நெறியில் செலுத்துகின்றன (திருவருட்பயன் 41).

## வினைக் கொள்கையும் மனித மேம்பாடும்

'கன்மம்' என்பது அவரவர் செய்யும் வினையைக் குறிக்கும். இது 'நல்வினை தீவினை' என இருவகைப்படும். உயிர்கள் செய்யும் இரு வினையின் பயன்களை அந்தந்த உயிரிடத்து நியதி தத்துவத்தின் மூலமும், அந்தந்தக் கால எல்லைக்குள் கால தத்துவத்தின் மூலமும் உயிர்கள் நுகருமாறு செய்விப்பவன் இறைவனே!

> *"செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்*
> *உய்வா னுளன்என் றுணர்" (திருவருட்பயன் 53)*

என்று வினை செய்பவனையும், வினையையும், அதன் பயனையும், அதனை உயிரிடத்துச் சேர்க்கும் இறைவனையும் பற்றிச் 'சைவ சித்தாந்தம்' எடுத்துரைக்கின்றது. அரசன், நல்லவரைக் காத்தலும், தீயோரை ஒறுத்தலும் ஆகிய செயல்களைத் தானே நேரே செய்யாது, தனது ஆணையை ஊர்க்காவலர் மூலம் செய்வது போல, இறைவனும் தனது ஆணையை இருவினைகளின் மேல் வைத்து அவற்றைக் கொண்டு செய்கிறான். (சிவஞானபோதம் நூற்பா :2:அதிகரணம்:2, மேற்கோள்; ஏது)

'வினை', சடமாதலால், அதுதானே உயிரைச் சென்றடையாது; உயிர் அறிவுப் பொருள் என்றாலும், அறியாமை வசப்பட்டு உள்ளது. மேலும் இன்பத்தையே விரும்பும் தன்மையுடையது; எனவே தீவினைப்பயனை விரும்பாது; ஆதலின், இறைவன் ஒருவனே வினைப்பயனைச் செய்தவரிடத்துக் கூட்டுவிப்பான். (சிவஞானபோதம் உதாரண வெண்பா:11) இவ்வகையால், உயிர்க்கும் வினைக்குமிடையே இறைவன் இருந்து ஒன்றுவித்தாலன்றி உயிர் அவ்வினையை நுகருமாறில்லை என்பது போதரும் (வினா வெண்பா:போற்றிப் பஃறொடை, 53,54).

'கன்ம'த்தின் காரியங்களாக "இருத்தல், கிடத்தல், இருவினை இயற்றல்,

விடுத்தல், பரநிந்தை, மேவல்" என்ற ஆறு குணங்களை அருணந்தி சிவாசாரியார் கூறுகிறார் (இருபா இருபஃது 4:8:10).

எனவே, அவரவர் வினைக்கேற்ப நன்மை தீமைகளை இறைவன் கூட்டுவிக்கின்றான் என்பதையறியாமல், நன்மை வரும்போது, 'இது தம்மால் வந்தது' என்று தம்மையே வியந்து கொள்வதும்; தீமை வரும்போது 'இது பிறரால் வந்தது' என்று பிறரைச் சினந்து கொள்வதுமான தவறுகளையே செய்து, மேலும் மேலும் வினைகளை ஈட்டிக் கொள்வது மனிதர்கட்கு இயல்பாகி விட்டது!

எனவே, வாழ்வில் பெருந்துன்பம் வரும்போது, மெய்கண்ட சாத்திரங்கள் கூறும் வினைத் தத்துவத்தை மனத்தில் கொள்வார்களானால், "தாம் செய்த வினையின் பயனாகத்தான், தமக்கு இத்துன்பம் வருகிறது" என்ற உணர்வு மேலோங்கும்; அதனால் பிறர்மாட்டுச் சினம் பிறவாது; தம்மைத் தாமே திருத்திக் கொண்டு வினைத் துன்பங்களின் பிடியினின்றும் விலகுவதற்கு முயற்சிக்க வாய்ப்புண்டு!

துன்பம் வரும்போது மனங்கலங்காமலும், இன்பம் வரும்போது அளவு கடந்த மகிழ்ச்சியில் திளைக்காமலும் இரண்டையும் சமமாகப் பாவிக்கும் மனநிலையே 'இருவினை ஒப்பு' எனப்படும். இந்த மனநிலையை ஒவ்வொருவரும் மேற்கொள்வார்களானால் பெருந்துன்பம்வரினும் அது, மனத்தைப் பாதிக்காமல் விலகி ஓடிவிடும்.

*"நீடும் இருவினைகள் நேராக நேராதல்*
*கூடும்இறை சத்தி கொளல்" (திருவருட்பயன், 51)*

என்பர் உமாபதி சிவாசாரியார்.

உயிர்கள், இன்பத்தைத் தேடும் முயற்சியில் ஈடுபடுகின்றன; தொடர்ந்து வினைகளை ஈட்டுகின்றன. சங்கிலித் தொடர் போன்ற அவ்வினைகள் உயிர்களைப் பிறவிச் சுழலில் மூழ்கச் செய்கின்றன. 'நல்வினை தீவினை' இரண்டுமே பிறவிக்கு வித்தாவதால், நல்வினையைப் 'பொன் விலங்கு' என்றும்; தீவினையை 'இரும்பு விலங்கு' என்றும் சாத்திரங்கள் கூறுகின்றன. எனவே இருவினைகளும் உயிரை விட்டு நீங்க வேண்டும். உயிரானது, நால்வகை நெறியில் ஈடுபட்டுத் திருவருளை முன்னிறுத்தி நிற்றலே

வீடுபேற்றுக்கு வழியாகும். (சிவஞானபோதம், உதாரண வெண்பா:46)

## அன்பு நெறியும் மனித மேம்பாடும்

உலகில் எல்லாச் சமயங்களும் அன்பு நெறியையே வலியுறுத்துகின்றன. 'அன்பே சிவம்' என்பர் திருமூலர் (திருமந்திரம் 270). அன்பானது படிப்படியாகக் "குடும்பம், சுற்றம், ஊர், உலகம்" என்று விரிய வேண்டும். இன்பங்களுக்கெல்லாம் நிலையானதாகிய 'முத்தி இன்பத்தை' இப்பிறவியிலேயே எய்தவேண்டுமானால் அஃது அன்புநிலையிலேய விளையும் (திருவருட்பயன், 80). பிற உயிரிடத்துக் காட்டப்படும் தன்னலமற்ற அன்பே, அருளாக மாறுகிறது. (குறள்:757) அதற்கு இணை இல்லை! இந்தப் பேரன்பினாலேயே, சிவத்தை அணைந்த ஞானிகள், உலக மக்களின் தீராத் துன்பங்களைத் தீர்த்து, அருள் செய்கின்றனர். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் போன்றோரின் பக்தி இயக்கங்களே இதற்குச் சான்று; தமது கருணையால் மனம் இரங்கிப் பிறவிக் கடலிலிருந்து மக்களை மீட்க முயற்சிப்பர்.

*"கள்ளத் தலைவர் துயர்கருதித் தம்கருணை*
*வெள்ளத்(து) அலைவர் மிக" (திருவருட்பயன் 100)*

என்பது திருவருட்பயன்

"அன்புடைய நெஞ்சம் கொண்டவர்களுக்குச் சிவப் பேரின்பம் இம்மையிலேயே கிடைக்கும்" என்பதனை நக்கீரர் தம் திருமுருகாற்றுப் படையில்,

*"சேவடி படரும் செம்மல் உள்ளமொடு*
*..........................................................................*
*இன்னே பெறுதிநீ முன்னிய வினையே" (திருமுருகு : 62,66)*

என்று கூறுகின்றார்.

## நிலையாமை

உலகில் செல்வம் எவரிடமும் நிலையாக இருப்பதில்லை. இந்நிலையில், செல்வர்கள், தம் செல்வம் சென்று விட்டால், மிக்க விரக்தியுற்று மனவேதனையுறுவர். சிலர் உயிரை விட்டுவிடும் நிலையைக் கூட அடைவர். செல்வத்தின் இயல்பு 'நிலையாமை'யே என்பதை அறிந்தால், அவர்கள்

இந்நிலையைத் தவிர்க்கலாம். மெய்கண்டார்,

*"அசத்து அறியாய், கேள்நீ, அறிவு அறிந்தஎல்லாம்*
*அசத்தாகும் மெய்கண்டான் ஆயின்–அசத்துஅலாய்*
*நீரில் எழுத்தும் நிகழ்வனவும் பேய்த்தேரும்*
*ஓரின் அவை இன்றாமாறு ஒப்பு"*

*(சிவஞானபோதம் உதாரண வெண்பா, 34)*

என்று நிலையாமையைப் பற்றிக் கூறுவர்.

உலகப் பொருட்கள் அசத்துப் பொருள்களாகும். நிலையில்லாதன; நீர்மேல் எழுத்து, எழுதிய பொழுதே விரைந்து மறையும்; அதுபோலத் தோன்றிய காலத்திலேயே மறையும் பொருட்கள் உண்டு. கனவு போலச் சிறிது காலம் இருந்து மறையும் பொருட்களும் உண்டு. எனவே உலகப் பொருட்கள் நிலைமாற்றம் உடையன; அசத்தாவன; இதனை அறிந்தால், இழந்த பொருளைப் பற்றிய துக்கம் பற்றாது!

## அகவழிபாடும் மனிதமேம்பாடும்

'நமச்சிவாய' என்ற அஞ்செழுத்தால் இறைவனை வழிபடும் முறைமையைக் கூறும் மெய்கண்டார், ஆன்மாவிடத்துள்ள மலவாசனை நீங்குவதற்கு "மந்திரம், பாவனை, கிரியை" ஆகிய சாதனங்களையும் விளக்குகின்றார் (சிவஞானபோதம் : 9ஆம் நூற்பா). நெஞ்சக் கமலத்தில் இறைவனை அஞ்செழுத்தால் கொள்ளும் திருமேனியில், "கொல்லாமை, பொறியடக்கம், பொறுமை, இரக்கம், அறிவு, வாய்மை, தவம், அன்பு" என்ற எட்டு மலர்களைத் தூவி வழிபட வேண்டும். (சிவஞானபாடியம் : 9, ச.வே.சு. பதிப்பு)

இவை மனித மேம்பாட்டுக்கு உறுதுணை புரியும் எனல் தெளிவு.

## நற்செயல்களும் மனிதமேம்பாடும்

சிவஞான சித்தியார், மனிதன், தனக்கும், பிற உயிர்களுக்கும் பயன் உடையவனால், வாழ வேண்டியதன் இன்றியமையாமை குறித்துப் பின்வருமாறு கூறும்:

*"ஒழுக்கம் அன்புஅருள் ஆசாரம் உபசாரம் உறவுசீலம்*
*வழுக்கில்லாத்தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை*

*அழுக்கிலாத்துறவு அடக்கம், அறிவொடு அர்ச்சித்தல் ஆதி*
*இழுக்கிலா அறங்களானால் இரங்குவான் பணி அறங்கள்"*
*(சி.சித்தி. சுபக்கம் 113)*

இதற்குரிய விளக்கம் வருமாறு:

"உயர்ந்தாரொடு பொருந்த ஒழுகும் ஒழுக்கம், தொடர்புடையாரிடத்துக் கொள்ளும் அன்பு, தொடர்பில்லாதார் மாட்டும் காட்டும் அருள், தத்தம் குலத்திற்கேற்ப ஒழுகும் ஒழுக்கம், தக்கோரிடத்துச் செய்யும் நன்றாற்றல், யாவரிடத்தும் கொள்ளும் நட்பு, நற்குணம், உற்ற நோய் நோன்றலும் உயிர்க்கு உறுகண் செய்யாமையும் ஆகிய தவம், தக்கார்க்கு வழங்கும் பொருட்கொடை, தன்னின் மூத்தார்க்குச் செய்யும் வழிபாடு, வணக்கம், மெய்ம்மை, பிறர்மனை விழையாமை, வரைவின் மகளிரோடு இயையாத, மனமாசு இல்லாத் துறவு, அடக்கம், அறிவு, தக்காரைப் போற்றும் தகைமை" ஆகிய இவ்வறங்கள், இறைவழிப்பட்ட தூய்மைக் குணங்களாகும். இதனையறிந்து நாளும் இவ் அறவழி நிற்பின் இறைவனும் இவற்றைத் தன் பணி என ஏற்று அருள் வழங்கி நிற்பன். (சித்தி. தெளிவுரை, கு. சுந்தரமூர்த்தி, ப.63)

**முடிவுரை**

சைவ சித்தாந்தத்தைக் கூறும் மெய்கண்ட சாத்திரங்கள் தனிமனித வாழ்க்கைப் பண்பாட்டைப் பிரதிபலிக்கின்றன; பன்னிரு திருமுறைகள் கூறும் அறங்களுக்கு இலக்கணமாகவும் திகழ்கின்றன.

எனவே 'சித்தாந்த சாத்திரங்கள்' மன்பதை வாழவும் மனிதன் மேம்படவும், சிறந்த—உயர்ந்த நெறிகளைக் காட்டுவன எனலாம்!

## முன்னுரை

உலகப் பொருளனைத்தையும், சைவ சித்தாந்தம் 'பதி, பசு, பாசம்' என மூன்றனுள் அடக்கி விடும். 'பதி' – இறைவன்; தானே அறிபவன். 'பசு' – உயிர்; அறிவிக்க அறிவது. 'பாசம்' எனப்படும், இவ்வுலகப் பொருள்கள், அறிவித்தாலும் அறியா! 'இறைவன்', அதிசூக்கும சித்தாகிய அறிவுப் பொருள்; உயிர்கள் தூலசித்தாகிய அறிவுப் பொருள்; பாசமாகிய உலகப் பொருட்கள், அசித்தாகிய சடப்பொருட்கள்.

## சிவனே முழுமுதற் கடவுள்

சைவ சித்தாந்தம் சிவபெருமானையே முழுமுதற்கடவுளாகக் கொள்கின்றது. 'சிவன்' என்பது 'மங்கலத்தைச் செய்பவன்' என்று பொருள்படும். கடவுள், இறைவன், முதல்வன் என்று முழுமுதற் பொருளுக்கு வழங்கி வரும் பெயர்கள் உலக முதற்பொருளின் வேவ்வேறு இயல்பையும் குறிப்பனவாம். 'கடவுள்' எனும் சொல், உயிர்களின் உணர்வையும், செயலையும் கடந்த, எட்டாத நிலையினைக் குறிக்கும். இந்நிலையில் இறைவனை 'வாக்கு மனாதீதன்', 'அசிந்தன்' என்று சித்தாந்த நூல்கள் கூறும். இது 'கடப்பு நிலை' யாகும். 'இறைவன்' என்பது 'எப்பொருளிலும் தங்குபவன்'என அவன் எங்கும் நிறைந்துள்ள நிலையினைக் குறிக்கும். இது 'கலப்பு நிலை' எனப்படும். 'முதல்வன்' என்பது, எல்லாப் பொருள்கட்கும் முற்பட்டு நின்று உலகத்தைத் தொழிற்படுத்துபவன் என அவனுடைய வினைமுதலாம் தன்மையைக் குறிக்கும். உலகிற்கு மேம்பட்டு, அதனைக் கடந்த நிலையிலிருப்பதால், 'விசுவாதிகன்' என்றும், உலகம் தன்பால் தோன்றி ஒடுங்குவதற்குக் காரணமாயிருப்பதால் 'விசுவகாரணன்' என்றும், உயிர்க்குயிராய் விளங்கி அனைத்தையும் உள்நின்று இயக்குவதால் 'விசுவாந்தரியாமி' என்றும், உலகைத் தன் வடிவாகக் கொண்டதால் 'விசுவரூபி' என்றும் கூறுகிறது.

'சிவஞான சித்தியார்' ,

*"உலகினைஇறந்து நின்றது அரனுரு என்பது ஓரார்;*
*உலகு அவன் உருவில் தோன்றி ஒடுங்கிடும் என்றும் ஓரார்;*
*உலகினுக்கு உயிருமாகி உலகுமாய் நின்றது ஓரார்;"*

*(சி.சித்தியார், 68:1–3)*

என்று இறையியல்புகளை வரிசைப்படுத்தும்.

**சிவம்**

'சிவம்' என்னும் சொல், முதற்கடவுள் எத்தகைய மாறுதலும் இல்லாத தூய பேரின்பக் பொருளாய் (சிவசத்து) அனுபவப்படும் தன்மையுடையது என்பதைக் குறிக்கும். செம்பொருள், 'சித்துச் சத்து' எனவும் கூறப்படும்.

இறைவன், உயிர்களின் பாச அறிவுக்கும் பசு அறிவிற்கும் எட்டாத பொருளாயினும், திருவருளாகிய பதியறிவு கொண்டு அறியும்போது தூய பேரின்பப் பொருளாய் வரும். அந்த இன்ப அனுபவத்தை, உயிர் உடலோடு கூடியிருக்கும்போதே எய்திய பெருமக்களும் உளர்! இறையருளால் இவ்வனுபவத்தைப் பெற இயலும் என்பது சைவ சித்தாந்தத்தின் அடிப்படை உண்மை. எனவே இறைவனை ஆராய்ச்சி உணர்வு கொண்டு மட்டும் நோக்காது, உண்மையனுபவம் பற்றி நோக்கினால், அப்பொருள் எக்காலத்தும், எம்மாறுதலுமடையாத தூய பேரின்பப் பொருள் என்பது தெரியவரும். எனவே சிவம், செம்பொருள் எனச் சிறப்பித்துச் சொல்லப்படும்.

*"குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்*
*நிறைமலம் அநாதியின் நீங்கி நிற்றலின்*
*அறைகுவர் சிவன் என அறிவின் மேலவர்"*

என்பது காஞ்சிப் புராணம்

'மங்கலக் குணம்' என்பது "தோற்றக்கேடுகளின்றி நித்தமாய் விகாரமின்றி சத்துப் பொருளாய் நிற்றல்" ஆகும்.

**பதியுண்மை**

சைவ சமயத்தில் புறச்சந்தான குரவருள் முதலாமவராகிய மெய்கண்டார், தாம் இயற்றியருளிய சிவஞான போத நூலில், கண்ணால் காணப்பட்ட இவ்வுலகத்தைக் கொண்டு, கண்ணால் காணப்படாத இறைவனின் உண்மையை நிறுவுகிறார்.

உலகத்தில், ஒரு தன்மையுடைய சாதிப் பொருட்கள் அவற்றுக்குரிய காலங்களில் ஒருங்கே தோன்றி, ஒருங்கே நின்று, ஒருங்கே அழிதலைக் காட்சியால் அறிகிறோம். அதனைக் கொண்டு 'உலகம் ஒரு காலத்தில் முற்றும் தோன்றி ஒரு காலத்தில் முற்றும் நின்று, ஒரு காலத்தில் முற்றும் அழியும்' என்று முடிவு கட்டுகிறோம்.

பகுதிகளுடைய பொருள்களும், சடமாயும் பலவாயும் உள்ள பொருள்களும் சுட்டியறியப்படுவன எல்லாமும் தோன்றி நின்று அழிகின்ற தொழிலையுடையன.

ஆடை, குடம், முதலியன பகுதிகளையுடையன; சடமாயும் பலவாயும் உடையன; சுட்டியறியப்படுவன. இவற்றைக் கண்ணால் காண முடியாத சூக்கும நிலையிலிருந்து, கண்ணால் காணக்கூடிய தூல நிலைக்குக் கொண்டு வந்தவன்– 'செய்தவன்' ஒருவன் உண்டு என அறிகிறோம். இத்தன்மைகளையுடைய இவ்வுலகமும் முத்தொழிலை உடையது. மாயையில் நுண்ணியதாக அடங்கியுள்ள உலகத்தைக் கண்ணுக்குத் தோன்றும்படி படைத்து அளிக்க ஒருவன் வேண்டும், அவனே இறைவன்!

**வினைக் கோட்பாடு**

'உலகாயதம்' தவிர மற்ற அனைத்துச் சமயங்களும், வினையை ஏற்றுக் கொள்கின்றன. ஆனால் அவற்றுட்சில, 'வினைகளால் உண்டாகும் பயன், வினை செய்யப்பட்ட உயிருக்குத் தானே சென்று சேரும்; வினைப்பயனைக் கொண்டு சேர்க்க ஒருவன் தேவையில்லை' என்று கூறும்! சித்தாந்த சைவமோ, அதனை மறுக்கிறது. வினை சடப்பொருள். அது, தானே சென்று செய்தவரைச் சேராது; மேலும் உயிர்கள் இன்பத்தை நாடும் இயல்புடையன. தம்முடைய தீவினைக்குரிய பயனை அடைய விரும்பா! எனவே, அவ்வவ்வுயிர்கள் செய்த வினைப்பயனை, அவ்வவ்வுயிர்களுக்கு அந்தந்தக் காலத்திற்குள் கொண்டு சேர்ப்பவன் ஒருவன் வேண்டும். அவனே இறைவன்! இக்கருத்தைச் 'சிவஞானபோதம்',

*"அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர் தாம் சென்றங்கு*
*அவ்வினையைக் காந்த பாசாசம்போல் – அவ்வினையைப்*
*பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்*
*ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்கு"*

*(சிவஞானபோதம்,2:2: உதாரணம் வெண்பா,11)*

என்று கூறுகிறது. (உதாரண வெண்பா, 11)

## இறைவனின் எண்குணங்கள்

ஒப்பற்ற இறைவனின் குணங்கள் எட்டு. அவை தன்வயத்தன், தூய உடம்பினன், இயற்கை உணர்வினன், முற்றும் உணர்ந்தவன், இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன், பேரருள் உடையவன், முடிவற்ற ஆற்றல் உடையவன், வரம்பற்ற இன்பம் உடையவன் என்பவையாகும். இவற்றைச் சித்தாந்த அட்டகத்தில் ஒன்றாகிய 'திருவருட்பயன்', பதிமுதுநிலை என்ற அதிகாரத்தில் கூறும்.

*"கோளில் பொறியிற் குணமிலவே, எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை" (குறள்,8)*

எனும் குறளும் ஈண்டு நினைவு கூர்தற்குரியது.

## இறைவனின் 'முதன்மை'

உயிர்கள் இறைவனின் அடிமை; உலகம் இறைவனின் உடைமை. முதல்வனாகிய இறைவன், உலகத்திலுள்ள அறிவுடைய பொருள்களிலும், அறிவற்ற பொருள்களிலும் கலந்து இயக்குகின்றான். இதனைத் திருவருட்பயன்,

*"அகர உயிர்போல் அறிவாகி எங்கும்*
*நிகரில் இறைநிற்கும் நிறைந்து" (1)*

என்று கூறும். உயிரெழுத்துக்களிலும், மெய்யெழுத்துக்களிலும் அகரம் பொருந்தி நிற்பது போலத் தனக்கு ஒப்பாரில்லாத இறைவன் உலகுயிர்களில் பொருந்தி நிற்பதுடன் அறிவே ஆகி நிறைந்து நிற்கின்றான்.

*"ஒன்றென்ற தொன்றே காண்; ஒன்றே பதிபசுவாம்*
*ஒன்றென்ற நீ பாசத்தோடு உளைகாண் ஒன்று இன்றால்*
*அக்கரங்கள் இன்றாம் அகர உயிரின்றேல்*
*இக் கிரமத் தென்னும் இருக்கு" (உதாரண வெண்பா, 7)*

என்பது சிவஞானபோதம்

## இறைவனின் இயல்பு

ஒரு பொருளுக்கு, வேறொரு பொருளின் சேர்க்கையின்றி இயல்பாக

அமைந்ததன்மை 'சிறப்பியல்பு' எனப்படும். இறைவன் எல்லாவற்றையும் கடந்து சிவமேயாய் நிற்கும் நிலை, அவனது சிறப்பியல்பாகும். சத்தியைத் தன்னுள் அடக்கித் தொழிற்படாது நிற்கும் நிலை இதுவாகும்.

ஒரு பொருளுக்கு, இன்னொரு பொருளின் சேர்க்கையால் இடையே வந்து இடையே நீங்குவது 'பொது இயல்பு' ஆகும். தண்ணீருக்குத் தண்மை சிறப்பியல்பு; நெருப்பின் சேர்க்கையினால் வெப்பம் வந்து சேர்வது பொதுவியல்பு; இறைவன் தன் சத்தியைச் செயல்படுத்தி ஐந்தொழிலாற்றுவது அவனுடைய பொதுவியல்பு. ஐந்தொழில்களாவன: படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்.

**இறைவனும், சத்தியும்**

ஒரு பொருள், இரு தன்மைப்பட்டு நிற்கும் நிலை 'தாதான்மிய சம்பந்தம்' அல்லது 'ஒன்றன் இருமை' எனப்படும். இறைவன், தானும் தனது சத்தியுமாகப் பிரிந்து நிற்கும் நிலை 'தாதான்மிய சம்பந்தம்' எனப்படும். இறைவன், தனது சத்தியால் உயிர்களின் வினைக்கேற்றவாறு அவற்றுக்கு உலக வாழ்க்கைக்கு வேண்டிய தனு (உடல்), கரணம் (கருவிகள்), புவனம் (உலகப் பொருட்கள்), போகம் (நுகர்ச்சி) இவற்றைப் படைத்தளிக்கின்றான்.

*"நங்கையினால் நாமனைத்தும் செய்தாற் போல் நாடனைத்தும்*
*நங்கையினால் செய்தளிக்கும் நாயகனும்" (78)*

என்னும் திருக்களிற்றுப் படியார் பாடலும்,

*"அருளது சத்தியாகும் அரன்தனக்கு; அருளையின்றித்*
*தெருள் சிவமில்லை; அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை"*

என்னும் சித்தியார் பாடலும் (239) இதனை வலியுறுத்தும்.

சக்தியும் சிவமும் வேறுவேறாகத் தொழப்படாமல் ஒன்றாகவே தொழுதற்குரியனவாகும். எனவே திருவருள் வழியே உயிர்களுக்கு அருள் செய்யும் இறைவன், தனது அருட்சத்தியோடு வேறுபாடின்றி நிற்கும் தன்மையை உமாபதி சிவாச்சாரியார்,

*"தன் நிலைமை மன்னுயிர்கள் சாரத்தரும் சத்தி*
*பின்னமிலான் எங்கள் பிரான்" (திருவருட்பயன், 2)*

என்று கூறுவர்.

*"அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் என்றறிக*
*அம்மையப்பர் அப்பரிசே வந்து அளிப்பர்"*

என்பது திருக்களிற்றுப் படியார் (1).

இறைவன் போக வடிவினனாக, அம்மையப்பராக இருந்து, உயிருக்கு இன்பியல் வாழ்வையும், யோகவடிவினனாக இருந்து உயிருக்கு வீடுபேற்றையும் வழங்குகின்றான். இறைவன் பலவாறாகச் செயல்படினும், தன் தன்மையினின்று வேறுபடான். நடிப்பாற்றலில் வல்ல ஒருவன், இராவணன் முதலிய பல வேடங்களைப் பூண்டு நடித்தாலும் அவன் தன் தன்மையில் சிறிதும் மாறுபடான். பலரால் போற்றப்படும் கதிரவன் தன் நிலையில் நிற்க, இந்நிலவுலகில் சூரியகாந்தக்கல் நெருப்பைக் கக்கும்; தாமரை, மலரும்; நீர் நிலைகள் வற்றும். இவ்வாறே இறைவனும் விகாரப்படான்!

## தன் சத்தியினின்று பிரியாமை

உயிர்கள் போல மாயையினால் ஆகிய உடம்பு இன்றி, திருவருளினால் ஆகிய உடம்பையே இறைவன் உடையவன் ஆவான்.

"காயமோ மாயையன்று; காண்பது சத்திதன்னால்" எனும் தொடர் இதனை வலியுறுத்தும். அச்சத்திதானும், மரமும் வயிரமுமாகிய இரண்டும் ஒன்றோடொன்று இயைந்து பிரிவின்றி இருத்தல் போலச் சிவத்தினோடு இயைந்து பிரிவின்றி இருக்கும்.

## ஒன்பது வடிவங்கள்

சிவபரம்பொருள், ஐந்தொழில் செய்தற் பொருட்டுச் சிவம், அருள் (சத்தி) ஒலி (நாதம்), வட்டம் (விந்து), அருட்சிவம் (சதாசிவம்), பெரு முதல்வன் (மகேசுவரன்), முதல்வன் (உருத்திரன்), மால், அயன் என்னும் ஒன்பது வடிவங்களைக் கொள்வான். சிவசத்தியும் அதற்கேற்றவாறு சிவம், சத்தி, ஒலி (நாதம்), வட்டம் (விந்து), மனோன்மணி, மகேசை, உமை, திருமகள், நாமகள் என்ற ஒன்பது வடிவங்கள் கொண்டு, இறைவன் செய்யும் செயல்களுக்கேற்ப இயங்கி அருளுவான்.

*"சத்தியாய், விந்துசத்தியாய் மனோன்மணிதானாகி*
*ஒத்துறும் மகேசை ஆகி, உமை, திருவாணியாகி*

*வைத்துறும் சிவாதிக்கு இங்ஙன் வருஞ் சத்தி ஒருத்தியாகும்*
*எத்திறம் நின்றான் ஈசன், அத்திறம் அவளும் நிற்பள்!"*

என்பது சித்தியார் பாடல் (165).

**முடிவுரை**

இருட்டில் நடந்து செல்பவர்கள், பாதை தெரிந்து நடப்பதற்குத் தம்முடன் ஒரு விளக்கினைக் கொண்டு செல்வர். அப்போது விளக்கை ஏந்திய கை, முன் நீண்டு, விளக்கின் வெளிச்சம் பாதையைக் காட்டத் தாம் வெளிச்சத்தைப் பின் தொடர்ந்து செல்வர். அதுபோல, நிலையான பேரின்பத்தைத் தரக்கூடிய இறைவனை அடைய, அவனது திருவருளை முன்னிட்டு அது தரும் ஒளியை வழிகாட்டியாகக் கொண்டு அதைப் பின்பற்றிச் செல்வதே ஆன்மசுத்தி (உயிர் விளக்கம்) பெறுவதற்குரிய நெறியாகும். இதனால் சிவபோகத்தில் அழுந்தி இன்புறலாம்.

*"உற்கை தரும் பொற்கை உடையவர் போல்*
*நிற்கை அருளார் நிலை"*

என்பது 'திருவருட்பயன்' (68).

## 8. உயர் சிவஞானபோதம்

### முன்னுரை

சைவ சமயம் தென்னிந்தியாவில் பழங்காலந்தொட்டே சிறப்புற்றிருந்தாலும், கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில்தான் அதற்கொரு தத்துவ வடிவம் கிடைத்தது. அக்காலத்தில் தோன்றிய மெய்கண்டார், சைவ சமயத்திருமுறைகள் பன்னிரண்டிலும் உள்ள சைவ சித்தாந்தக் கொள்கைகளை வரையறுத்துத் தந்தார். மெய்கண்டாருடைய சிவஞான போத நூலைப் பின்பற்றியே பிற சாத்திர நூல்கள் உருவாயின. எனவே இவை மெய்கண்ட சாத்திரங்கள் என அழைக்கப்பட்டன.

### தலைமையும் சிறப்பும்

சிவஞான போதத்துக்கு முன்தோன்றிய ஞானாமிர்தம், திரு உந்தியார், திருக்களிற்றுப் படியார் போன்ற நூல்களில், அவற்றின் ஆசிரியர்கள் தங்களின் அருள் அனுபவங்களைக் கூறியுள்ளனர். இவற்றிற்குக் காலத்தால் பிற்பட்ட சிவஞானபோதம் அளவை அடிப்படையில் சைவ சித்தாந்தத்தை அமைத்துக் கொடுத்தது. பிரம்மசூத்திரம் வடமொழியில், உபநிடதங்களின் கருத்துக்களைத் திரட்டிக் கொடுத்தது போலச் சைவத்திருமுறைகளின் கருத்துக்களைத் திரட்டி முறைப்படுத்தி, அவற்றின் பிழிவாகச் சிவஞானபோத நூலை மெய்கண்டார் தந்தார். போதத்திற்குப் பின்னால் வந்த பதினொரு சாத்திர நூல்களும், அதன் கருத்தைச் சிரத்திற் கொண்டு விவரித்தன.

*"உந்திகளிறு உயர்போதம் சித்தியார்*
*பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்தவருட்*
*பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு*
*உண்மைநெறி சங்கற்பம் உற்று"*

இந்தப் பாடல், சித்தாந்த சாத்திரங்களை வரிசைப்படுத்துகிறது. இதில், 'உயர் போதம்' எனச் சிவஞான போத நூலுக்கு அடைமொழி

கொடுத்திருப்பது, அந்நூலின் தலைமையையும், சிறப்பையும் எடுத்துரைப்பதாக உள்ளது. சிவஞானபோதத்தின் சார்பு நூலாகிய சிவப்பிரகாசமும் 'உயர்சிவஞானபோதம்' என்றே உரைக்கிறது.

### அருள்நந்தி சிவாச்சாரியாரின் கூற்று

சிவஞானபோதத்தின் வழி நூலாகிய சிவஞானசித்தியாரில் (சுபக்கம்) அருள்நந்தி சிவம், தம் குருவாகிய மெய்கண்டாருக்கு வணக்கம் செலுத்தும் போது,

> *"மெய்கண்டான்நூல் சென்னியிற் கொண்டு சைவத்*
> *திறத்தினைத் தெரிக்கலுற்றாம்" (பாயிரம்,3)*

என்கின்றார். இவ்வாறு நூல்வழி கூறும்போது, மெய்கண்டாரால் அருளிச் செய்யப்பட்ட ஞானநூல், மற்றப் பிரமாண நூல்களுக்கு முன்னோடி ஆக, முதன்மையாக உள்ளது என்று சிறப்பித்துக் கூறுகிறார்.

### மெய்கண்டார் இவ்வுலகில் தோன்றியதன் காரணம்

மெய்கண்டார் இவ்வுலகில் தோன்றியதற்குச் சந்தானாசாரியார் புராணச் செய்யுள் பின்வரும் காரணம் கூறுகிறது:

> *"எல்லோரும் அத்துவித சுத்தநிலை*
> *இனிதெய்திச் சோகமேயப்*
> *பொல்லாத சமயிகளும் அதிசயிப்பப்*
> *புவனமிசைப் போதம் ஏற"*

மெய்கண்டார், மெய்ஞ்ஞான சூரியனாக விளங்கிச் சைவ சமயக் கொள்கைகளைத் தெளிவாக விளக்கிப் பிற சமயங்களின் நிலையையும் அளவிட்டு, உலக மக்கள் அதனை அறிதற்குக் கருவியாகச் 'சிவஞானபோதம்' என்னும் உயர்ஞான நூலை அருளிச் செய்தார். அதுமட்டுமன்றி, அந்நூலுக்குக் கருத்துரை, வார்த்திகம் எனப்படும் மொழிப்புரையும் இயற்றினார். "தென்முகக் கடவுள் திருக்கரத்தில் உள்ள நூல் சிவஞான போதமே" என்று சான்றோர் கூறுவர்.

### சிறப்புப் பாயிரம்

சிவஞானபோதச் சிறப்புப் பாயிரம், சிவஞானபோத நூலைச் சூரியனுக்கு ஒப்பிடுகிறது. சூரியன் தோன்றும்பொழுது, கண்ணானது இருள்நீங்கி,

உலகப் பொருள்களைக் காணும். அதுபோல, சிவஞானபோத நூல், மக்களின் அறியாமையை நீக்கி, உலகப் பொருள்களின் இயல்புகளை உள்ளவாறு அவர்கள் உணரச் செய்கிறது. எனவே, இந்நூலைக் கேட்டுணர்ந்தோர், அறியாமையினின்றும் நீங்கி மெய்யுணர்வு பெறுவர்.

*"மலர்தலை உலகின் மாயிருள் துமியப்*
*பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்*
*காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய*
*பெரும்பெயர்க் கடவுளிற் கண்டு கண்ணிருள் தீர்ந்து*
*அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி*
*மயர்வற நந்தி முனிகணத் தளித்த*
*உயர்சிவ ஞான போதம்..."*

சரியை கிரியை யோகம் முதலிய பாதங்களை ஆராயும் நூல்கட்கு மேம்பட்டதாகிய ஞானபாதத்தை ஆராயும் உயர்ந்த நூல் இது!

**அளவிற் சிறியது; பொருளிற் பெரியது!**

மெய்கண்டார் அருளிச் செய்த சிவஞான போதம் அளவிற் சிறியதானாலும் பொருளிற் பெரியது.

"சிறுநூல், பெரிய உலகையும், எண்ணிறந்த உயிர்களையும், எல்லையற்ற இறையையும் காட்டுதல் வியப்பன்றோ? சிவஞானபோதம் சுருங்கிய சொல்லும், பெருகிய பொருளும் உடையது; சிவஞானபோதச் சொல், ஆலின் விதை போன்றது; அதன் பொருள், மரம் போன்றது" என்பர் திரு.வி.க. (அணிந்துரை, பாடியம்)

**புதிய எழுச்சி**

சைவ சித்தாந்தக் கொள்கை, சித்தாந்த சமயம் ஆகியவை பற்றிய தெளிவான அமைப்பைச் சிவஞானபோதம் நூல்வாயிலாக அளித்து, மெய்கண்டார் சைவசித்தாந்தக் கொள்கைக்கு ஒரு புதிய எழுச்சியை அளித்தார் என்பர் ர. ராமானுஜாச்சாரி (சைவ சித்தாந்தம்).

**மாட்சி மிக்கது**

அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப் பொருள்களை அடைவதற்குரிய உயிர்களின் இயல்பும், அவ்வுயிர்கள் அவ்வுறுதிப்

பொருள்களைப் பெறவிடாது, உயிரறிவைத் தடைசெய்யும் ஆணவ மலத்தின் இயல்பும், உயிர்களுக்கு அறிவு, முயற்சி இவற்றை எழுப்புதற்குரிய மாயை, மூவினைகளின் இயல்பும், உயிர்களுக்கு அவற்றின் வினைக்கீடான மாயையைக் கூட்டி, அதன் மூலம் உயிர்களின் அறிவு முயற்சிகளைச் செயல்படுத்தி, உயிர்களைத் தூய்மைப்படுத்தித் தனது பேரின்ப நிலையை உயிர்களுக்கு அருளுபவனாகிய இறைவனின் இயல்பும், அவ் இறைவனை அடைதற்குரிய ஞானமாகிய சாதனத்தையும், வீடுபேற்றின் தன்மையையும் வினாவிடை வடிவில் விளக்கும், மாட்சி மிக்க நூலாய் விளங்குவது இது!

**ஆராவமுது**

வேற்றவர் வருகையாலும், பிற பாதிப்புக்களாலும், தமிழ்ப்பற்றும் சைவப் பற்றும் குறைந்து, சைவசித்தாந்த நூற்பயிற்சி குறைந்த காலத்தில் மெய்கண்டார் என்னும் அருள்ஞானச் செம்மல் தோன்றி, முன்னைச் சைவ சித்தாந்தப் பேரொளி எங்கும் பரவும் வண்ணம் 'சிவஞானபோதம்' என்னும் ஆராவமுதத்தை அளித்தருளினார். (கா.சுப்பிரமணிய பிள்ளை 'முன்னுரை' சிவஞானமாபாடியம்—ஆதாரம்— ச.வே. சுப்பிரமணியம், ப.ஆ.1)

சைவத் திருமுறைகளில் சம்பந்தர் தேவாரம் முதலாவதாக வைத்து பேசப்படுவது போலச் சித்தாந்த சாத்திரங்களில் சிவஞானபோதம் முதன்மையானதாகப் பேசப்படுகிறது.

**'சிறிய ஆடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்கு'**

சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை வரையறை செய்த உயர்ந்த எழுந்த முதல் நூலாகிய சிவஞானபோதம், 'சிறிய ஆடியிற் பெரிய மால்வரைப் பொருள் செறிந்தாங்கு' அறிவு நூற்பொருள் அனைத்தையும் தன்கண் அடக்கிக் கொண்டு, அரிதின் உணர்தற்குரிய இயல்பினதாய் விளங்குவது. (முனைவர் ஆ. ஆனந்தராசன்—சிவஞான முனிவரின் உரைநெறிகள்)

**அருட்கதிரோன்**

அருணந்தி சிவம், தம் குருநாதரைக் 'காசினிமேல் வந்த அருட்கதிரோன்' என்று போற்றுகிறார். எனவே, மெய்கண்டாரின் சிவஞானபோதம், உயிர்களின் அறிவை மறைக்கும் ஆணவத்தை நீக்கித் தன்னையும், தன்னுள் மறைந்து இருக்கும் இறைவனையும் உணரச் செய்து

திருவருள் ஒளிபெருக்கும் அருள் நூலாகும். இந்நூல் மெய்கண்டாரின் அருட்கொடை என்பதில் எள்ளளவும் கருத்து வேறுபாடில்லை. மேலும், மெய்கண்டாருடைய நாற்பத்தொன்பது மாணவர்களுள் ஒருவரான திருவதிகை மனவாசகங் கடந்தார், தம் குருநாதரைப்,

*"பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதானந்தப் பொருளாம்*
*மெய்காட்டும் மெய்கண்டாய்"*

என்றே விளிக்கின்றார்.

**சிவஞானபோத நூலின் பெருமையைக் குறிக்கும் வெண்பா**

*"வேதம் பசு அதன்பால் மெய்யாகமம் நால்வர்*
*ஓதும் தமிழ் அதனின் உள்ளுறுநெய்-போதமிகு*
*நெய்யின் உறுசுவையாம் நீள் வெண்ணெய் மெய்கண்டான்*
*செய்த தமிழ்நூலின் திறம்"*

இப்பாடல், நால் வேதங்களைப் பசுவாகவும், ஆகமங்களை அப்பசுவின் பாலாகவும், சைவ சமயாச்சாரியார் நால்வர் பாடிய தேவாரத் திருவாசகங்களை அதன் உள்ளிருக்கும் நெய்யாகவும், சிவஞானபோத நூலை, நெய்யின் இனிய சுவையாகவும் உருவகித்துப் போற்றுகிறது.

**நூல் நுவலும் பொருள்**

நூலின் பன்னிரண்டு நூற்பாக்களில் முதல்பாதி ஆராய்ச்சி நிலையாகவும், பிற்பாதி அனுபூதி நிலையாகவும் அமைத்துள்ளார் மெய்கண்டார். இறை, தளை, உயிர் இவற்றின் பொதுவியல்புகளையும், சிறப்பியல்புகளையும் கூறி, உயிருக்குள் உள்ள இறைவனே குருவாக எழுந்தருளி வந்து அருள்செய்யும் தன்மையையும் கூறி, உயிர் ஐம்புலன்களை வென்று ஞானத்தால் இறைவனை அடையலாம் என்று கூறி, அந்த ஞானத்தை அடைய குரு, இலிங்க, சங்கம வழிபாடுகளையும் சிறப்புறக் கூறுகிறது நூல். சிவஞானபோதத்தின் பன்னிரு நூற்பாக்களையும், பன்னிரு திருமுறைகளுக்கும் பொருத்திக் காட்டுவர் அறிஞர். எடுத்துக்காட்டாகப் பன்னிரண்டாம் நூற்பா, ஞானம் பெற, அடியார் வழிபாட்டை வற்புறுத்துகிறது. பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரியபுராணமும், இறைவனுடைய அடியார் வழிபாட்டைச் சிறப்பித்துக் கூறுகிறது.

மேலும் சைவ சமயத் தத்துவக் கருத்துக்களை விரித்துக் கூறிக் கொண்டே, அக்கால இந்தியாவில் பரவியிருந்த பிறசமயக் கருத்துக்களையும் மறுக்கிறார் ஆசிரியர். எனவே, சிவஞான போதத்தின் வழிநூலாகச் சிவஞான சித்தியாரை அமைத்த அருணந்தியார், மெய்கண்டார் கூறிய சைவ சமயக் கருத்துக்களைத் தம் நூலில் சுபக்கமாகவும், மெய்கண்டாரின் புறச்சமய மறுப்புக்களைப் பரபக்கமாகவும் ஆக இருபெரும் பிரிவுகளாக அமைத்துள்ளார்.

**முடிவுரை**

தாயுமானவசுவாமிகள், மெய்கண்டாரைப்,

*"பொய்கண்டார் காணாப் புனிதமென்னும் அத்துவித*
*மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ"*
*(எந்நாட்கண்ணி—குருமரபு வணக்கம்)*

என்று போற்றுகிறார். இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பை ஏனையோர் சரியாகச் சொல்ல முடியாத நிலையில், மெய்கண்டாரே இறைவன் உயிர்களோடு கலப்பினால் ஒன்றாகவும் பொருட்தன்மையினால் வேறாகவும், உயிர்களின் உள்ளிருந்து இயக்கும் தன்மையினால் உடனாகவும் உள்ளான் என்ற உண்மையை அறுதியிட்டுத் தமது சிவஞானபோத நூலில் கூறுகிறார். எனவேதான் தாயுமானவர் "மெய்கண்டநாதன்" என்று போற்றுகின்றார். இவ்வகையில் இந்நூல், 'உயர்சிவஞான போதம்' என்று அனைவராலும் போற்றப்படுகிறது.

## 9. இறைவனும் திருவருளும்

### முன்னுரை

இவ்வுலகைப் படைத்துக் காத்தளிக்கின்ற இறைவன், அதற்காகத் தன் ஆற்றலையே (சத்தியையே) கருவியாகப் பயன்படுத்துகிறான். அவனது திருவருளே 'சத்தி' எனப்படுகிறது.

### சத்தியும் சிவமும்

சத்தியின் வெளிப்பாடாகவே இவ்வுலகம் விளங்குகின்றது. இறைவன் சத்தி சிவமாய் விளங்குவதாலேயே உயிர்கள் உலக இன்பங்களை நுகர்கின்றன. இறைவன் தன் சத்தியுடன் இணைபிரியாது இருக்கும் தன்மையைத் திருஞானசம்பந்தர்,

*"தோடுடைய செவியன்"*

என்றும்,

திருநாவுக்கரசர்,

*"காதன் மடப்பிடியோடும் களிறுவருவன கண்டேன்"*

என்றும் கூறுகின்றனர். இறைவன், தன் சத்தியுடன் அருள்புரியும் தன்மையைத் திருஞானசம்பந்தர்,

*"ஆணும் பெண்ணுமாய் அடியார்க்கு அருள்நல்கி"*

என்றும் குறிப்பிடுகின்றார்.

இறைவனின் இரு நிலைகளில் தன்னுடைய சொரூப இயல்பு எனப்படும் தன்னியல்பில் இறைவன், எல்லாவற்றையும் கடந்து, சிவம் தானேயாய் நிற்கும் நிலையில், சத்தியை உள்ளடக்கி நிற்பான். 'தடத்த இயல்பு' எனப்படும் பொதுவியல்பில், சிவம் தன்னுடைய ஆற்றலை வெளிப்படுத்தித் திருவருளால் 'அரு, அருவுரு, உரு' ஆகிய உருவங்களைக் கொண்டு "படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்" ஆகிய ஐந்தொழில்களை இயற்றுவான்.

### தாதான்மிய சம்பந்தம்

ஒரே பொருள் இரு தன்மைப்பட்டு நிற்கும் நிலையே 'தாதான்மிய சம்பந்தம்' எனப்படும். இதனை, 'ஒன்றன் இருமை' என்பர். இறைவன் தன் சக்தியோடு ஒரு தன்மைப்பட்டு நிற்கும் இந்நிலைமையைப்

*"பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே!"*

என்று திருஞானசம்பந்தர் குறிப்பிடுவர்!

### படைத்தல்

ஆணவமாகிய இருள்நிலையில் சிக்கித் துன்புற்றுத் தடுமாறும் உயிர்களுக்குத் தன் திருவருளினால், உயிர்களின் வினைக்கேற்றவாறு, தனுகரணபுவன போகங்களைப் படைத்தளிக்கிறான்.

நாம் நம்முடைய கைகளினால் அனைத்துச் செயல்களையும் செய்வது போல, இறைவனும் தன்னுடைய சத்தியாகிய நங்கையினால் ஐந்தொழில்களையும் புரிகின்றான். திருவருளைக் கொண்டே இறைவன் ஐந்தொழில் புரிவதால் திருவருளின்றி உயிருக்கு இருள்நிலையினின்று விடுதலையில்லை; மாயையோடு கூடிய சகல நிலையில் உலக நுகர்ச்சியும் இல்லை; சிவத்தோடு கூடிய சுத்த நிலையில் பேரின்ப நிலையாகிய முத்தியும் இல்லை!

எனவே ஒருவனேயாகிய இறைவன், தானும் தன் சத்தியுமென நிற்பதால், 'சத்தி' எனும் கருவியால், எண்ணற்ற பொருள்களில் நிறைந்து, எல்லையிலாப் பெருமை வாய்ந்த செயல்களைச் செய்கிறான்.

### திருவருளின் சிறப்பு

நம் உடல் சடப்பொருள் ஆகையால் அதற்கு அறிவில்லை; எதனையும் அறியாது! 'உயிர்' அறிவுப் பொருளானாலும் கருவியின்றி எதனையும் அறியாது; அதாவது உடம்பில்லாமல் அறியாது; இவை இரண்டையும் அறிந்து கூட்டுவித்து அருள் செய்வது திருவருளே! இக்கருத்தை,

*"ஊன் அறியாது என்றும் உயிர் அறியாது ஒன்றும் இவை*
*தான் அறியாது ஆர் அறிவார்தான்" (திருவருட்பயன், 33)*

என்று உமாபதிசிவம் கூறுகின்றார்.

மேலும் இவர், திருவருளின் சிறப்பை – அதன் இன்றியமையாத் தன்மையை நாம் அறியும் வண்ணமாகத் 'திருவருட்பயன்' என்னும் நூலை ஆக்கியுள்ளார். இந்நூலில் இறைவனோடு பிரிப்பின்றி இருக்கும் திருவருளின் தன்மையும், உயிரின் குற்றங்களாகிய மும்மலங்களையும் நீக்கித் திருவருள் உயிருக்கு அருளும் தன்மையும், உயிருக்குள் உள்ள திருவருளே, மலம் நீங்கிய காலத்து, வெளிப்பட்டுக் குருவாகத் திருமேனி தாங்கி வந்து உயிருக்கு அருள் செய்யும் தன்மையும், திருவருளால் உயிரின் ஏகதேச அறிவு நீங்கி, வியாபக அறிவு பெறும் முறைமையும், திருவருளிலே திளைத்து இன்புறும் சீவன்முத்தரின் இயல்பும், அப்பேரின்பம் என்றும் நிலைத்து நிற்கும் வகையில் ஐந்தெழுத்து ஓதும் முறைமையும் ஆகிய செய்திகள் கூறப்படுகின்றன.

எனவே உயிரின் எந்நிலையிலும் திருவருளே ஆதாரம் என்பதை விளக்கி, உயிர்கள் அதனை அடைய முயற்சிக்க வேண்டும் என்றும் விளக்குகிறார்.

*"அருளிற் பெரியது அகிலத்தில்; வேண்டும்*
*பொருளிற் தலையிலது போல்" (31)*

என்ற திருவருட்பயன் பாடல், திருவருளின் சிறப்பை விளக்கும்.

**சூரியனும் அதன் ஒளியும் போல**

சூரியனின் கிரணங்களால் தான் நாம் சூரியனை அறிகிறோம். அது போல,இறைவனுடைய பேராற்றல் ஆகிய சத்தியால்தான் நாம் இறைவனை அறிகிறோம். சத்தி காட்டவே நாம் சிவத்தை அறிய முடியும். சூரியன், தானும் தன் ஒளியாகவும் இருப்பது போல, இறைவன் தானும் தன் சத்தியாகவும் இருக்கிறான். "சத்தியின்றி இறைவன் செயல்படுதல் இல்லை" என்ற கருத்தைக் கீழ்க்கண்ட சிவஞானபோத உதாரண வெண்பாவால் அறியலாம்.

*"அருளுண்டாம் ஈசற்கது சத்தி; அன்றே*
*அருளும் அவனன்றி யில்லை–அருளின்று*
*அவனன்றே இல்லை; அருட்கண்ணார் கண்ணுக்(கு)*
*இரவிபோல் நிற்குமரன் ஏய்ந்து"*

*(சிவஞானபோதம் , உதாரண வெண்பா)*

"இரவிபோல் நிற்கும் அரன் ஏய்ந்து" என்ற தொடரும், "பொன்னொளிபோல் ஈசன்" என்ற சிவஞானபோத மற்றோர் உதாரண வெண்பாத் தொடரும் இறைவன் தாதான்மியமாய் விளங்கும் தன்மையை விளக்குகின்றன. சூரியனின் செயல்பாட்டினால்தான் இவ்வுலக வாழ்க்கை உயிர்களுக்கு அமைகிறது; அதுபோல உயிர்கள் வினைகளைச் செய்தற்கும் அதன் பயன்களை நுகர்தற்கும் துணையாக உயிருக்குள் மறைந்து எங்கும் பரந்திருக்கின்றது இறைவனின் திருவருள்!

*"பெருக்க நுகர்வினை பேரொளியாய் எங்கும்*
*அருக்கன்என நிற்கும் அருள்"*

என்பது திருவருட்பயன் (32)

மேலும் 'அருளே உலகெலாம் ஆள்விப்பது' என்பர் காரைக்கால் அம்மையார்!

### இறைவனோடு வேறுபாடின்றி இருப்பது!

இறைவனும் திருவருளும் வேறுபாடின்றி எங்கும் நிறைந்திருப்பதை "அம்மையோடு அப்பனாகிச் செறிவொழியாது நின்ற சிவனடி" என்று 'சிவஞான சித்தியார்' கூறும்.

### மறைத்தற்சத்தி

'திரோதானசத்தி' எனப்படும் இது, உயிரினுள் மறைந்திருந்து, உயிர் தன்னுடைய நல்வினை, தீவினைகளுக்குரிய பயன்களை நுகரச் செய்யும். உயிர் இன்பதுன்பங்களை நுகர்வதால், அவற்றில் உவர்ப்பு ஏற்படும்; 'இருவினை ஒப்பு' ஏற்பட்ட காலத்து, உயிரினுள் மறைந்திருந்த திருவருள் அருட்சத்தியாய் வெளிப்பட்டு நிற்கும்!

### அருட்சத்தி

உயிரின் சகலநிலையில் உயிரில் மறைந்து நின்று அருள் செய்த அருட்சத்தி, முத்திக் காலத்திலும் உயிர் இறைவனோடு கலந்து நின்று பேரின்பம் நுகரத் துணை செய்யும்.

### திருவருளை அறியாத உயிர்

ஆணவமல மறைப்பால் தன்னுள் உள்ள திருவருளை உயிர்கள்

அறிவதில்லை. தன்முனைப்பால் வினைகள் செய்து, மேலும் மேலும் துன்பத்துள் ஆழ்கின்றன. தன்னைச் சுற்றியுள்ள திருவருளை அறியாது மருள் நிலையில் மயங்கி நிற்கும் உயிருக்கு, உமாபதி சிவம், பாற்கடலில் உள்ள மீன்கள் இனிய பாலை அருந்தாது, வேறு கீழான உணவுகளை உண்ணும் செயலுக்கு ஒப்பிடுகின்றார்.

*"பாலாழி மீனாளும் பான்மைத்து அருள்உயிர்கள்*
*மால்ஆழி ஆளும் மறித்து"*        *(திருவருட்பயன்,34)*

நிலைத்த இன்பமாகிய திருவருளில் திளைப்பதை விடும்போது, நிலையில்லாத உலக இன்பங்களை விரும்பி, உயிர் மேன்மேலும் இருவினைகளைச் செய்து, பிறவித் தளையில் வீழ்கின்றன. தம்மைச் செலுத்துகின்ற உயிரை அறியாத ஐம்பொறிகளைப் போல, உயிரும் தன்னைச் செலுத்தும் திருவருளை அறியாது இருக்கின்றது.

இறைவன் தன் திருவருளால் உயிர்களிடத்து "ஒன்றாய் வேறாய் உடனாய்" இருந்து அருளுவன். உயிர்கள் நிலை பெறுதற்காக அவற்றிடத்து ஒன்றாகவும், உயிர்களுக்கு அறிவிக்க அவற்றின் வேறாகவும், அவற்றைத் தொழிற்படுத்துதற்கு உடனாயும் நிற்பன். உயிர்களின் அறியாமை நீங்கும் வண்ணம், பல பிறப்புக்களை எடுக்கச் செய்து, அவற்றால் உயிர் பக்குவம் பெற்ற பொழுது குருவாக வந்தருளுவான். எனவே இறைவன், தனது கருணைப் பேற்றினால் உயிர்களைப் பக்குவப்படுத்தி ஆட்கொள்கிறான்.

**முடிவுரை**

இறைவனது பேராற்றலாகிய கருணையே, இருளில் வீழ்ந்து கிடக்கும் உயிரை மீட்டு, இறைவனின் திருவடியை அடைய உயிருக்கு வழிகாட்டும். ஒளியாகிய திருவருள், உயிருக்கு நிலையான பேரின்பப் பொருளாகிய இறைவனைக் காட்டி, அதனால் பிறவிக் கடலினின்றும் ஈடேற வழி செய்யும்! எனவே, தன்முனைப்பை நீக்கித், திருவருளை முன்னிறுத்தி, அதன் பின்னே நிற்பது உயிரின் கடமையாகும்!

# 10. சிற்சத்தி ஒன்றே பிரமாணம்

## முன்னுரை

'இந்தியத் தத்துவக் கொள்கைகள், தாம் கொள்ளும் முடிபுகளை மட்டும் மல், எம்முறைகளில் அவை விளைந்தன என்பதையும் காட்டுகின்றன. இவை, தாம் எடுத்துக் கொண்ட பொருளை ஆராய்வதற்கு முன் அறிவு ஆய்வு இயல் என்று கருதக் கூடியதைத் தருகின்றன. வேறு வகையாகச் சொன்னால், இந்த நிலையில் இந்தியத் தத்துவ ஞானம் தன்னையே ஆராயத் தொடங்குகிறது. அதன் முக்கியப் பிரிவாக 'அளவை இயல்' எழுகிறது" என்கின்றார் டாக்டர் ஹிரியண்ணா. (outlines of Indian Philosophy)

## இன்றியமையாமை

தத்துவ உலகில் முப்பொருள்களாகிய 'பதி, பசு, பாசத்'தை அளந்தறியப் பயன்படுத்துவது 'அளவை' யாகும். உலகத்துப் பொருள்களை "எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல்" முதலிய அளவுகளினால் அளந்து அறிகிறோம். தத்துவ உலகில் "இறைவன், உயிர்கள், உலகம்" முதலிய பொருள்களை அளந்து அறிய அளவைப் பிரமாணங்களைப் பயன்படுத்துகிறோம்.

## அளவை வகைகள்

. அருள்நந்தி சிவாசாரியார், தம் சிவஞான சித்தியார் நூலில் (சுபக்கம்) பத்துவகை அளவைகளைக் கூறி விளக்குகின்றார்:

1. காட்சி

உலகப்பொருள்களைக் கண்முதலிய ஐம்பொறிகளால் கண்டறிதல்

2. கருதல்

ஐம்பொறிகளால் உய்த்துணர்தல்–மறைந்துள்ள பொருள்களை அதனைவிட்டு நீங்காத ஏதுவைக் கொண்டு அறிதல்.

3. உரை

இறைவன், அவன் வழி வந்த அருளாளர்களால் கூறப்பட்ட அருள் மொழிகள்.

4. இன்மை (அபாவம்)

இதற்கு முன்பு இவ்வாறு நடக்கவில்லை, எனவே இப்போதும் இவ்வாறு நடக்கக் காரணமில்லை எனக் கூறுதல்

5. பொருள் (அருத்தாபத்தி)

இங்ஙனம் அன்றாயின் இது கூடாது என்று உணர்வது; "பகல் உண்ணான் பருத்திருப்பான்" எனில் "இரவு உண்பான்" என உணர்தல்

6. உவமை

காட்டுப் பசுவைக் காணாதவர்க்கு "அது வீட்டுப் பசுவைப் போலிருக்கும்" என்று கூறி விளக்குதல்.

7. ஒழிபு (எஞ்சியது – பாரி சேடம்)

ஆயிரம் யானைகளின் பலமுடையவர்கள் சல்லியன், சராசந்தன், கீசகன், பீமசேனன் போன்றோர். இவர்களில் கீசகன் இறக்கும்போது, அங்கு சல்லியனும், சராசந்தனும் இல்லை. அப்படியானால் கீசகனை வதைத்தவன் பீமசேனன் தான் என்று அறிதல்.

8. ஐதிகம்

வழிவழியாகக் கூறப்படும் உண்மை கொண்டு அறிவது.

9. இயல்பு

வழக்கு, செய்யுள் என்ற இருவகையிலும் வரும் சொற்களுக்கு, அந்தந்தக் காலமும் இடமும் அறிந்து பொருள் கொள்வது.

10. சம்பவம் (உண்மை)

முழுமையிலிருந்து அதன் பகுதியைப் பெறுதல்.

இவ்வாறு பத்துவகை அளவைகளைக் கூறினாலும், அவற்றையெல்லாம் "காட்சி, கருதல், உரை" என்ற மூன்றில் அடக்கலாம். எனினும் இம்மூன்றும்

ஆன்ம சிற்சக்திக்கு உதவுபவை. எனவே, ஆன்ம சிற்சத்தியே முடிவான பிரமாணம்; பிரமாணத்திற்குப் பிரமாணம் ஆகும். எனவே ஆன்ம சிற்சத்தியே, பிரமாணம் என்ற சொல்லுக்கு உண்மையான பொருள். பொருள்களைக் கண் அளக்கிறது. அந்த கண்ணையளப்பது ஆன்ம சிற்சக்தியாகிய உயிரறிவு ஆகும்.

### நையாயிகர் கூறும் பிரமாணம்

நையாயிகர், உயிரின் சிற்சத்தியை ஏற்காமல், ஐம்பொறிகளையும், புகை போன்ற அடையாளங்களையும் பிரமாணமாகக் கொள்கின்றனர். ஆனால் இவற்றை அளந்தறிகின்ற கருவியாகிய உயிரின் அறிவாற்றல் செயல்படவில்லையென்றால் ஐம்பொறிகளும் செயல்படா! உயிருக்குக் கருவியாகச் செயல்படுவது அதன் அறிவாற்றலாகும். எனவே நையாயிகர் கூறுவது முடிவான பிரமாணமாகாது. ஆன்ம அறிவாற்றலுக்கு நூல், ஐம்பொறிகள் முதலியன பயன்படுவதால் இவற்றையும் பிரமாணமென்று கூறலாம்.

### சைவசித்தாந்தம் கூறும் பிரமாணம்

மற்ற எல்லாவற்றையும் அளந்து, பிறவற்றால் அளக்கப்படாததாய் உள்ள உயிரறிவே முடிவான பிரமாணமாகும். 'உயிரின் ஒடு உணர்வு' என்று அருள் நந்தி சிவம் இதனைக் கூறுவார். "தன்னை நோக்கி நிற்கும் அறிவாகிய ஆன்மாவினின்றும் விடயங்களை நோக்கி ஒடும் அறிவாகிய சிற்சத்தி" என்பர் சிவஞான முனிவர்.

### ஆன்மாவின் வியஞ்சகம்

உயிரின் அறிவு, உலகப் பொருள்களை அறிவதற்கும் கண், ஐம்பொறிகள், புகை, மனம், வித்தை எனும் தத்துவம் போன்றவற்றைத் துணையாகக் கொள்ளும். தானே நேரே அறியாது. எனவே கண் முதலிய பொருள்களுக்கு வியஞ்சகம் அல்லது காட்டு என்று பெயர். எனவே இப்பொருள்களையும் உபசாரமாக அளவை என்றே குறிக்கின்றோம். உயிரறிவு உதவிபெறும் பிரமாணமாகவும், வியஞ்சகம் உதவி தரும் பிரமாணமாகவும் அமைகின்றன.

வேறுபாடு காணாமல், ஐயமும், விபரீதவுணர்வுமின்றி உலகப்

பொருள்களை நேரே அறிவதாகிய உயிரின் ஞானசக்தி, 'காட்சியளவை' எனப்படும்.

நேரே அறியாமல், அனுமானித்துப் பெறுவதாய், மறைந்துள்ள பொருளை அதனைவிட்டு நீங்காது உடனாய் நிகழும் ஏதுவைக் கொண்டு உணரும் உயிரின் ஞானசக்தி 'கருதலளவை' எனப்படும். இவ்விரண்டு அளவையாலும் அறியப்படாத பொருள்களைச் சான்றோர் மொழிகளைக் கொண்டு உணரும் உயிரின் ஞானசத்தி 'உரையளவை' எனப்படும்.

### ஆன்ம சிற்சத்திக்கு உதவும் வியஞ்சகங்கள்

ஆன்மா, மாயையோடு கூடிய சகல நிலையில், காட்சியளவை, வாயிற்காட்சி, மானதக் காட்சி, தன் வேதனைக் காட்சி, யோகக் காட்சி முதலியன வியஞ்சகங்களாகின்றன. யோகக்காட்சி, முனிவர்கள் தம் யோக சித்தியினால் முக்காலத்தையும் உணரக்கூடிய தன்மையுடையதாகும்.

ஐயக்காட்சி, இதுவோ, அதுவோ எனத் தடுமாறவும், திரிபுக்காட்சி ஒன்றை மற்றொன்றாகத் திரித்துக் காணவும் ஏதுவாகின்றது; எனவே இவை குற்றமுடைய காட்சிகளாகும்.

கருதலளவை, தன்பொருட்டு, பிறர் பொருட்டு, முதலிய பல வகைகளில் உயிரறிவுக்குத் துணையாகின்றன. உரையளவை, வேதங்கள் தந்திரக்கலை, மந்திரக்கலை, உபதேசக்கலை என மூன்றாகப் பிரிந்து உயிரறிவுக்குத் துணை செய்கின்றன.

### சுத்தநிலையில் ஆன்ம சிற்சத்திக்கு வியஞ்சகம்

சுத்தநிலையில், உயிருக்குயிராய் உள்நின்று, இயக்கி, உயிருக்கு ஆதாரமாய் நிற்கும் சிவஞானமாகிய திருவருளே வியஞ்சகமாயிற்று. உயிர், திருவருளின் வழியே இறைவனையறிந்து அழுந்துவதால், திருவருளே வியஞ்சகம் எனப்பட்டது. அதுபற்றித் திருவருளும் பிரமாணமென்று உபசாரமாக கூறப்படுகிறது.

### முடிவுரை

சுத்தநிலையில் சிவஞானத்தைக் கொண்டு இறைவனையறிந்த ஆன்மா, முத்தியில், இறைவனுடைய எண் குணங்களில் அழுந்தி இன்புறும்.

## 11. தருபவன் ஒருவன் வேண்டும்!

**முன்னுரை**

சைவசமயச் சந்தான குரவருள் முதலாமவராகிய மெய்கண்டார், தமது சிவஞானபோத நூலில், கண்ணால் காணப்பட்ட உலகத்தை வைத்துக் காணப்படாத இறைவனுடைய இருப்பை நிறுவுகின்றார். அது குறித்து விளக்குவது இக்கட்டுரை.

**உலகம், மூன்று தொழில்களை உடையது!**

"உலகம், இன்று காண்பதைப் போலவே, என்றும் இருக்கும்; 'தோன்றுதலும் நிற்றலும் அழிதலும்' ஆகிய மூன்று தொழில்களை உடையதன்று" என்று கூறுபவர்கள் உலகாயதரும், மீமாம்சகரும் ஆவர்! உலகாயதர், காட்சியளவையை மட்டுமே ஏற்பவர்கள்; "கண்ணால் காணக்கூடிய பொருள்கள் மட்டுமே உள்பொருள்கள்" என்பது அவர்களுடைய வாதம். ஒருவர் கொள்கையை மறுக்கும்போது, அவருக்கு உடன்பாடான வழியிலேயே மறுக்க வேண்டுமென்பதால் மெய்கண்டார் உலகாயதருக்கு உடன்பாடான காட்சி அளவையில் வைத்தே மறுப்புக் கூறுகிறார்.

*"அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையிற்*
*தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்*
*அந்தம் ஆதி என்மனார் புலவர்"*

என்பது சிவஞானபோதம் முதல் நூற்பா.

*"அவன் அவள் அது என்று பகுத்தும், பலவாகச் சுட்டியும் உணரப்படுகின்ற உலகம், தோன்றி நின்று அழிவதாகி, ஒருவனால் தோற்றுவிக்கப்பட்ட உள்பொருளாகும்; உயிர்களுடைய ஆணவமலம் நீங்குதற் பொருட்டு, மறுபடியும் தோன்றும். அவ்வாறு தோன்றும்போது, முன்பு, தான் ஒடுங்குவதற்கு இடமாக*

*நின்றவனிடத்திருந்தே தோன்றும். எனவே உலகிற்கு இறுதியைத் தருபவனே முதல்வன்"*

என்பது இதன் கருத்து.

இந்நூற்பாக் கருத்தை வழிமொழிகின்ற சிவஞானசித்தியார்ப் பாடல் பின்வருமாறு :

*"ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று உரைத்திடும் உலகமெல்லாம்*
*வருமுறை வந்துநின்று போவதும் ஆதலாலே*
*தருபவன் ஒருவன் வேண்டும்; தான் முதல் ஈறுமாகி*
*மருவிடும் அநாதிமுத்த சித்துரு மன்னிநின்றே" (21)*

*"ஒருவன் என்றும் ஒருத்தி என்றும் ஒன்று என்றும் கூறப்படும் அறிவுடையதும் அறிவற்றதுமாகிய உலகமெல்லாம், தோன்றும் முறைக்கண் தோன்றிநிலைபெற்றுப் பின் ஒடுங்குதலும் உடைமையால் அவ்வாறு படைத்தும் காத்தும் அழித்தும் வரும் செயலுக்கு ஒரு முதல்வன் வேண்டப்படும்; அவனே சிவபெருமான் ஆவன்; அவன், கால எல்லைக்கு அப்பாற்பட்டவன். அவன் இயல்பாகவே வினையின் நீங்கி விளங்கிய அறிவினன். உயிரின்கண் பொருந்தி நின்று அவற்றைச் செயற்படுத்தும் இயல்பினன் ஆவன்"*

என்பது இதன் பொருளாகும். (கு. சுந்தரமூர்த்தி, சிவஞான சித்தியார் தெளிவுரை)

இவ்வுலகில், ஒரே இயல்பினை உடைய பொருட்கள், அவ்வவற்றிற்குரிய காலங்களில் ஒருங்கே தோன்றி, ஒருங்கே நின்று, ஒருங்கே அழிந்து போவதை நேரே காண்கிறோம். இச்செயல்களால், நிற்பதாகிய இவ்வுலகமும், ஒரு காலத்தில் முற்றும் நின்று, ஒரு காலத்தில் முற்றும் அழியும் என்று அறிய முடிகிறது!

இக்கருத்தை வலியுறுத்துகின்ற மேற்கோளும் ஏதுவும்:

*"ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று*
*சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி*
*நாசமுடைத்து"*

*"தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே*
*கிடத்தலின்" (சிவஞானபோதம் நூற்பா1)*

என்பன.

எனவே, உலகத்தில் நிற்பனவாய் உள்ள பொருள்கள் யாவும் முன்னே தோற்றத்தையும், பின்னே அழிவையும் உடையன என்று வலியுறுத்துகின்றார் மெய்கண்டார். பகுதி பகுதியாய் பிரிக்கப்படக் கூடிய பொருட்கள், சடமாயும் பலவாயும் உள்ள பொருட்கள், சுட்டியறியக்கூடிய பொருட்கள் நம் கண் முன்னே தோன்றி நின்று அழிகின்றன.

குடம், ஆடை முதலிய பொருட்கள் பல பகுதிகளை உடையன; சடமாகவும் பலவாகவும் உள்ளன. இவற்றைச் சூக்கும நிலையிலிருந்து கண்களால் காணக்கூடிய தூல நிலைக்குக் கொண்டு வந்தவன்; இப்பொருள்களைச் செய்தவன் இருக்கிறான் என்பதை அறிவோம். அதுபோல, அவயவப் பகுப்பு, சடத்தன்மை, பலவாகும் தன்மை, சுட்டியறியப்படும் தன்மை ஆகிய தன்மைகளையுடைய இவ்வுலகமும் முத்தொழிலை உடையதாகிறது; ஆகவே செய்வோனையும் உடையது. மாயையில் நுண்மையாக அடங்கியுள்ள உலகத்தை நம் கண்ணுக்குத் தோன்றும்படி தோற்றுவிக்க, படைத்தளிக்க ஒருவன் வேண்டும்; அவனே இறைவன்!

புறச்சமயவாதிகளாகிய சாங்கியர், "உலகைத் தோற்றுவிக்கச் செய்வோன் ஒருவன் வேண்டியதில்லை. மாயையே தன்காரியமாகிய உலகைத் தோற்றுவிக்கும்" என்பர்.

உலகம் இல்பொருள், சூனியம் எனப்படாது உள்பொருளாக உள்ளது; மாயையாகிய முதற்பொருளில் இவ்வுலகம் அடங்கியுள்ளது. மாயை, வித்தாக உள்ளதால், வித்திலிருந்து முளையைத் தோற்றுவிக்க, நிலம் தேவையுள்ளது போல், மாயையும் உலகைத் தோற்றுவிக்க முதற்கடவுளைத் தனக்கு நிலைக்களமாக வேண்டி நிற்கிறது. எனவே சாங்கியர் கூறுவது பொருந்தாது.

"உள்ளதே தோன்றும்; இல்லது தோன்றாது' என்னும் சற்காரியவாதக் கொள்கையின்படி, இறைவன் முழுமையாக அழித்தல் தொழில் செய்யும் போது, உலகம் எங்கு சென்று ஒடுங்குகின்றதோ, அங்கிருந்தே மீண்டும் தோன்றும். முன்பு, தான் ஒடுங்குவதற்கு இடமாயிருந்த சங்கார

காரணனிடமிருந்தே மீண்டும் தோன்றும். உயிர்களின் வினை பரிபக்குவமடைதற் பொருட்டு ஒடுங்கிய உலகம், ஆணவம் பக்குவமடைதற் பொருட்டு மீளத் தோன்றும். ஒடுங்கும்போது, எத்தன்மையிலிருந்ததோ, அத்தன்மை உடையதாகவே மறுபடியும் தோன்றும்.

விதைதான் முளையைத் தோற்றுவிக்கிறது எனினும், அது நிலத்தில் பொருந்தி அந்நிலம் குளிர்ச்சியடைந்தபொழுது முளையைத் தோற்றுவிக்குமே தவிர, தானே தனியாக நின்று முளையைத் தோற்றுவிக்க இயலாது. அது போலவே மாயையே உலகங்களைத் தோற்றுவிக்குமாயினும், அது இறைச் சத்தியில் அடங்கி நின்று அச்சத்தி சங்கற்பித்தபொழுது மட்டும் தோற்றுவிக்குமே தவிர, தானே தனியாக நின்று உலகைத் தோற்றுவிக்காது.

**இறைவன் மாற்றமில்லாதவன்**

முதற்கடவுள், தான் செய்யும் ஐந்தொழில்களால் மாற்றமடைந்து, அதனால் பிறழ்படுவான்; எனவே இவ்வுலகிற்குச் செய்தவன் ஒருவன் இல்லை என்று கூறுபவர்கள் நிரீச்சுரவாதிகள்.

இக்கருத்தை மறுக்கும் மெய்கண்டார், காலதத்துவம், தொழில் இயல்பு நோக்கி, 'இறப்பு, நிகழ்வு, எதிர்வு' போன்ற மூன்று காலங்களாக வேறுபட்டும், உண்மையில் வேறுபடாதிருப்பதைப் போல, இறைவன் 'படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்' போன்ற தொழில்களைச் செய்து பல்வேறு வகையில் வேறுபட்டாலும், உண்மையில் தன்னியல்பில் சிறிதும் வேறுபடாது நிற்பான் என்று விளக்குகிறார்.

ஒருவன், கற்ற நூலின் சொல்லும் பொருளும் மீண்டும் அவன் நினைவுக்கு வரும்போது, அவன் உள்ளம் அந்நினைவினால் வேறுபட்டும் படாது நிற்றல் போலவும், நனவு நிலையில், தான் கண்ட கனவை நன்கு உணர்ந்தவன் அப்பொழுது அக்கனவுகளால் யாதும் மாற்றமடையாதது போலவும் இறைவன் உலகைப் படையாமல் படைத்து, காவாமல் காத்து, அழிக்காமல் அழித்து, அதனால் விகாரமடையாமல் உண்மையில் இல்லாத கட்டினை உடையவனாய் நிற்பதும் அச்செயல்களைப் போலவே ஆகும்.

கதிரவன் ஆகாயத்தில் ஒளிவீசி நிற்க, புவியில் தாமரைமலர் மலரும்; சூரியகாந்தக்கல் தீயை உமிழும். நீர் நிலை வற்றும்; இருப்பினும் கதிரவன்

தன் நிலையில் மாற்றமின்றி நிற்கும். அதுபோல் இறைவன் தன் செயல்களால் மாற்றமடையான்.

நடிப்பாற்றலில் வல்லவனாகிய ஒரு மனிதன் 'இராவணன்' முதலிய பல வேடங்களை ஏற்றுத் திறம்பட நடிக்கிறான்; இருப்பினும் அவன் தன் தன்மையினின்றும் சிறிதும் மாறுபடாது நிற்பதைப் போல, இறைவனும் ஐந்தொழில்கள் செய்வதன் காரணமாக 'அருவம் உருவம் அருவுருவம்' முதலிய பல வடிவங்களை ஏற்றாலும், அவன் தன் தன்மையினின்றும் சிறிதும் மாறுபட மாட்டான்.

### முதற்கடவுள்

முதற்கடவுள் எனப்படுபவன், எல்லா அறிவும் எல்லா முதன்மையும் உடையவன்; எனவே அப்படிப்பட்டவன் ஒருவனே இருத்தல் வேண்டும்.

தேர் முதலிய பொருள்களைப் பலர் கூடிச் செய்வர்; இருப்பினும் அவரவர் மனம் போனபடி செய்யாது, தலைவன் ஆணைப்படியே செய்வர். அதுபோல, ஐந்தொழில்களுக்கும் அதிதெய்வங்கள் இருப்பினும், அழித்தல் தொழிலைச் செய்கின்ற சங்காரகாரணனே முதல்வனாவான்; அவனே தலைவனாக, மற்றவர் அவன் ஆணைவழிநின்றே இயங்கும் அதிகாரிகள் ஆவர்.

### முடிவுரை

இவ்வாறு, இறையுண்மையைத் தருக்க முறையில் மெய்கண்டார் நிலைநிறுத்துகிறார்.

# 12. உயிரும் ஆணவமும்

## முன்னுரை

சைவசித்தாந்தத்தில் சொல்லப்படும் 'உயிரும் ஆணவமும்' குறித்து விளக்குவது இக்கட்டுரை.

## முப்பொருள்

சைவ சித்தாந்தம் 'திரிபதார்த்தங்கள்' எனப்படும் முப்பொருள்களை ஏற்றுக் கொள்கிறது. 'பதி, பசு பாசமா'கிய இம்முப்பொருள்களும் தோற்றமும் அழிவுமில்லாத 'அனாதி நித்தியம்' எனப்படுவன ஆகும். சிவாகமங்கள், வேதங்கள், பிறமெய்க்கலை நூல்கள் ஆகியவற்றின் கருத்தும் 'பதி, பசு, பாசம்' ஆகிய முப்பொருள்களை விளக்குவதே ஆகும் என்று சிவப்பிரகாசம் கூறும்.

> *"பலகலையா கமவேதம் யாவையினும் கருத்துப்*
> *பதிபசு பாசம் தெரித்தல்" (13)*

என்பது அப்பாடல்.

## உயிரறிவில் தளை

உயிர்களின் உடம்புகள் தோறும் இன்பதுன்ப நுகர்வுகள் பலவகையாக இருக்கின்றமையால் உயிர்கள் எண்ணில்லாதவை என அறிகிறோம். இயல்பாகவே அறியாமையுட்பட்டுக் கிடக்கின்ற உயிர்களை, அவ் அறியாமையினின்றும் காக்கும் பொருட்டுக் கருணையுள்ளம் கொண்ட இறைவன், அக் கருணையின் பொருட்டு உயிர்களுக்கு எண்ணற்ற உடல்களையும், உலகங்களையும் படைத்தளிக்கின்றான்; உயிரறிவை மறைத்துள்ள ஆணவமும், அம்மறைப்பின் விளைவால் உயிர்கள் செய்யும் வினைகளின் தொகுதியும், உயிரறிவை விளக்கும் மாயையும் 'பாசம்' என்ற சொல்லில் அடங்கும். உயிரறிவில் தளை (விலங்கு) இடப்பட்டு, உயிர்களின் அறிவு ஆற்றல் விழைவு முதலியன தடை செய்யப்படுவதால், பாசம் 'தளை' என்ற சொல்லால் குறிப்பிடப்படும்.

### உயிரை 'அணுத்தன்மை' செய்விப்பது

மும்மலங்களிலும் 'ஆணவம்' மிகக் கொடியதாகும். ஆணவமல உண்மையைச் சைவசித்தாந்தத்தைத் தவிரப் பிற சமயத்தினர் ஏற்பதில்லை.

இவ் ஆணவம், வியாபக அறிவை உடைய ஆன்மாவின் அறிவை மறைத்து அணுத்தன்மை செய்விக்கிறது. அதாவது, உயிரைச் சிற்றறிவும், சிறுதொழிலும் உடையதாக்கிச் சிறுமைப்படுத்துகிறது. உயிர்களை அறியாமை இருளில் மூழ்கடித்து உயிர்களின் அனைத்துத் துன்பங்களுக்கும் மூலகாரணமாய் இருப்பதால், 'மூலமலம்' எனப்படுவதாயிற்று; உயிருடன் இயல்பாய் தோன்றி உடனிருப்பதால், 'சகச மலம்' எனவும் கூறப்படும். உயிரறிவை மறைக்கும் ஆணவமலத்தின் செயல் 'ஆவாரகசத்தி' எனப்படும். உயிரை உள்முகமாக நோக்கவிடாமல் புறப்பொருளை நோக்கச் செய்வது 'அதோநியாமிகாசத்தி' எனப்படும்.

நாம் நோயுற்றபொழுது, இனிப்புச் சுவையுள்ள பாலும் நம் நாவிற்குக் கசப்பாகத் தோன்றுவதுபோல, உயிர், ஆணவத்தின் பாற்பட்டு இருக்கும்போது பேரின்பப் பொருளாகிய மெய்ப்பொருள் அதற்குத் துன்பத்தையே தருவதாக நினைத்துக் கொள்கிறது. இக்காரணத்தினாலேயே உயிர்கள் இறைவனை நாடாது உலகியலில் வீழ்ந்து துன்புறுகின்றன.

### பொல்லா ஆணவம்

அருள்நந்திசிவம் ஆணவத்தைப் பற்றி விளக்கும்போது, 'பொல்லா ஆணவம்' என்று அடைமொழி கொடுத்துக் கூறியிருப்பதே இதன் கொடுமையை விளக்கும்.

ஆணவம், உயிரின் அறிவு, செயல், விழைவு ஆற்றல்களைக் கெடுத்து, நற்சிந்தனை நிகழவிடாது தடுக்கும்.

நெல்லில் உமிபோலவும், செம்பில் களிம்பு போலவும் உயிருடன் உள்ள 'ஆணவம்' ஒன்றேயாயினும் சத்தி அளப்பரிது.

*"ஒன்றதாய் அநேக சத்தி உடையதாய் உடனாய் ஆதி*
*அன்றதாய் ஆன்மாவின்தன் அறிவொடு தொழிலை ஆர்த்து*

*நின்றுபோத்திருத்துவத்தை நிகழ்த்திச் செம்பினில் களிம்பு ஏய்ந்து*
*என்றும் அஞ்ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே"*
*(சிவஞான சித்தியார், சுபக்கம்.170)*

## ஆணவத்தின் காரியங்கள் ஏழு

### 1. மோகம்

ஞானாசிரியராலும், ஞான நூல்களினாலும் தீயவை என்று அறிந்த பொருள்களைவிட்டு நீங்காமல் நிற்கும் மயக்க நிலை; 'மோகம்' என்ற இக்காரியமே, மற்ற ஆறு காரியங்களையும் தோற்றுவிக்கும்.

### 2. மதம்

தன்னைப் போல் எவரும் இல்லை என்று தருக்கி நிற்றல்.

### 3. இராகம்

கிடைக்காத பொருளிடத்து ஆசை கொள்ளுதல்.

### 4. கவலை

கிடைத்தபிறகு, பிரிந்தபொழுது வருந்துதல்.

### 5. தாபம்

சுற்றத்தை விட்டுப் பிரிந்ததற்கும், பிரிவதற்கும் ஆற்றாமை

### 6. வாட்டம்

அவ் ஆற்றாமையால் மலர்ச்சியின்றி வாடுதல்.

### 7. விசித்திரம்

எச்செயலும் வினைவழி நிகழ்வது என எண்ணாது, தான் செய்ததாகவும் பிறர் செய்ததாகவும் எண்ணுதல்.

உயிர் ஆணவத்தோடு மட்டும் உள்ள நிலையில், நெருப்பைத் தன்னுள் மறைத்து வைத்திருக்கும் விறகுபோல், ஆணவம் அதன் அறிவை முற்றிலும் மறைத்து நிற்பதால், அறிவு சிறிதுமின்றித் தான் ஒரு பொருள் உண்டு என்பதையும் அறியாது அறியாமையிருளில் மூழ்கிக் கிடக்கும்.

இந்நிலையில், உயிரின் அவலநிலையைச் சித்தியார் பின்வருமாறு

விளக்குகிறது:

*"அறிவு இலன் அமூர்த்தன் நித்தன் அராகாதி குணங்களோடும்*
*செறிவு இலன் கலாதியோடும் சேர்வுஇலன் செயல்கள் இல்லான்*
*குறியிலன் கருத்தா அல்லன், போகத்தில் கொள்கை இல்லான்,*
*பிறிவு இலன் மலத்தினோடும் வியாபி கேவலத்தில் ஆன்மா"*
*(சுபக்கம்,228)*

காரிட்ட ஆணவக் கருவறையில் துன்புறும் கண்ணில்லாக் குழவிபோல வாடும் உயிருக்கு உய்தி கொடுக்க இறைவன் 'மாயை, கன்மம்' என்ற இரு கைப் பாசத்தைச் சேர்க்கிறான். துணியிலுள்ள அழுக்கை நீக்க, உவர் மண்ணைச் சேர்ப்பதுபோல் உயிரில் உற்ற அழுக்கை நீக்க இறைவன் 'மாயை, கன்மம்' இவற்றைச் சேர்க்கின்றான். 'மாயை, கன்மம்' இடையில் வந்து உயிரைச் சேர்ந்தமையால் 'செயற்கை' என்ற பொருள்பட 'ஆகந்துகம்' என்றும் வழங்குவர்.

## ஆணவத்தின் சிறப்பு, பொது இயல்பு

மாயை, கன்மங்களுடன் சேராமல், ஆணவம் உயிரின் அறிவை முழுவதுமாக மறைத்து நிற்றல் ஆணவத்தின் சிறப்பியல்பாகும். ஆணவம், மாயாகன்மங்களோடு சேரும்போது உயிரறிவைத் திரிபுடுத்தி, நிலையில்லாத உலகப் பொருள்களை உயர்வாக மதிக்கும்படியாக அறிவை வேறுபடுத்தி நிற்கும். அதாவது, குறையிருட்டில், 'கயிறு' பாம்புபோல் தெரிவதாகிய விபரீத உணர்வைத் தரும். இது ஆணவத்தின் பொதுவியல்பாகும்.

## உயிரின் குற்றம்

ஆணவம் உயிரின் குணமன்று; உயிரில் பற்றியுள்ள குற்றமாக நிற்றலால் வீடு பேற்று நிலையில் வறுத்த வித்துப் போல், தன் சத்தி, கெட்டு நிற்கும்.

'ஆணவம்' உயிருக்குப் பந்தம்; ஆணவத்தின் வழியாக வரும் 'கன்மம்' அநுபந்தம்; மாயை, ஆன்மாவின் முற்றறிவைத் தடுத்து திரிபுணர்வைத் தருவது; எனவே இதனைச் 'சம்பந்தம்' என்பர்.

இவ்விதம் தோற்றமில்லாக் காலந்தொட்டே, உயிரின் அறிவைப் பிணித்து, சொல்லொணாத் துன்பங்களுக்குக் காரணமாகின்ற ஆணவம் கணக்கற்ற பிறவிகளால் உயிர், அலுத்துச் சலிப்புற்று, இறைச்

சிந்தனையிலும் நால்வகை நெறிகளிலும் தலைப்படும்போது, தன் ஆற்றல் தேய்ந்து, வலிகுன்றி விடுகிறது. இதனால் 'மலபரிபாகம்' உற்ற உயிர், 'இருவினை ஒப்பு', 'சத்திநிபாதம்' நிகழப் பெறுகிறது. உயிரில் அருளாற்றல் பதியப்பதிய, வளர்பிறைக் காலத்தில் நிலவு வளரவளர இருள் சிறிது சிறிதாக நீங்கி, முழுநிலவு நாளன்று முழுவதும் தண்ணொளிவீசி நிற்பது போல, இறைவனும் தன் திருவருளால் உயிரின் குற்றத்தை முழுவதுமாக நீக்கித் தன் வண்ணமாகச் செய்து கொள்வான்.

### அருட் கேவலம்

இரவில், ஆகாயம் இருளோடு கூடி இருளாகவே காட்சியளிப்பது போல, உயிர் ஆணவத்தோடு கூடியிருந்தபோது ஆணவத்துள் மூழ்கி அதுவாகவே இருக்கும். ஆணவமும், கன்மமும், மாயாதத்துவங்களும் நீங்கிய சுத்தநிலையில், அருளோடு அருளாகவே இருக்கும். இந்நிலை 'அருட்கேவலம்' எனப்படும்.

### முடிவுரை

ஆணவம், முத்திநிலையில் தன் சத்தி கெட்டிருப்பதால் உயிர் இறையின்பத்தை நுகரத் தடையில்லை. முத்திநிலையிலும் 'இறை உயிர் தளை' என்று மூன்றும் உள்ளன. இறைவன், முத்தியடைந்த உயிர்களுக்கு முடிவில்லாப் பேரின்பத்தை வழங்குவான். உயிர், அப்பேரின்பத்தை இடைவிடாது நுகர்ந்து கொண்டிருக்கும். 'ஆணவம்' தன் வலிமை கெட்டு நிற்பதால், உயிரானது பேரின்பத்தைத் தடையின்றி நுகரும்!

## 13. சாத்திர மணம் கமழும் முதற்பா

### முன்னுரை

அறிவியல் மிக வளர்ந்துள்ள இக்கால கட்டத்தில் ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையுமே இயந்திரத்தனமாகவும், துன்பங்களும் மனக்கவலைகளும் பெருகியுள்ளதாகவும் காண்கிறோம். இத்தகைய ஒரு கடுமையான சூழ்நிலையில், இறைவழிபாடு ஒன்றே, மனித இனத்திற்கு அல்லல் அகற்றி, நல்வாழ்வு தரும் அருமருந்தாகவும், துன்பக் கடலினின்றும் கரைசேர்க்கும் தோணியாகவும் உள்ளது. இப்பிறப்பில் வேண்டும் இன்பங்கள் நல்கி, அம்மைக்கும் இறைத்திருவருளை வாரி வழங்கவல்லது இதுவே! (சுந்தரர் தேவாரம்)

இறைவனைப் போற்றிப் பரவச் சிறந்த வழிபாட்டு நூலாகத் திகழும் பெருமை பெற்றது, குமரகுருபரர் இயற்றிய 'கந்தர் கலிவெண்பா' ஆகும். வழிபாட்டு நூலாகத் திகழ்ந்தாலும், சைவ சித்தாந்த சாத்திர மணம் கமழும் பெற்றியையும் நாம் மறுக்க இயலாது. அது குறித்து ஒரு சிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

### அடிகள் போற்றும் சைவ சமயம்

சிவபரம் பொருளே முதற்பொருள் என்று சிவனைத் தலைவனாகக் கொண்டு செயற்படுவது சைவ நெறி. இந்நெறி காலப் பழமைக்கு எட்டாதது ஆகும்.

*"தொன்மைக் கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"*
*(திருவாசகம், திருக்கோத்தும்பி–18)*

என்று மணிவாசகர் கூறுவதால், இறைவனுடைய கோலம் தொன்மையானது என்று நாமறிவது போல, அவனை அடைவதற்கான சைவ நெறியும் மிகப் பழமையானது என்று உணர்கிறோம்.

"மறை முடிவாம் சைவம், திவ்வியம் பழுத்த சைவம்" என்று சைவ

சித்தாந்தச் செம்பொருளைப் பலவாறு போற்றுகின்றார் குமரகுருபரர் (பண்டார மும்மணிக்கோவை 5). மேலும், "சைவ சித்தாந்தத் தேனமுது" என்று அவர் கூறும் பாங்கு இனியது.

இறைவன் பெருங்கருணையாளன். அவன் அனைவரும் பயன் கொள்ளும் பொருட்டு உழவுத் தொழில் செய்கின்றான். சுத்தமாயை என்ற வயலில் தன் திருவருளையே வித்திட்டு, தன் கருணையை நீராகப் பாய்ச்சி, வேதம் என்னும் பயன்மரத்தை நட்டு வளர்த்தான். அம்மரத்தின் பயன்களும் பலப்பல. அம்மரத்தின் இலைகளைப் பறித்துச் சென்றவர்கள் பலர். தளிர்களை மட்டுமே பறித்து மகிழ்ந்தனர் சிலர். இன்னும் பலர், அரும்பு, மலர்,பிஞ்சு, காய் இவற்றைப் பறித்துச் சென்று தாம் செய்ததே சரியானது என்று கூறி மகிழ்ந்திருந்தனர். அம்மரத்தின் உச்சியில் வேதாந்தம் என்னும் ஓர் அருங்கனி கனிந்தது. அவ் அருங்கனியின் சாற்றைப் பிழிந்து, கோதும் விதையும் நீக்கிச் சாரமாகிய சைவ சித்தாந்தத் தேனமுது அருந்தியவர் ஒரு சிலரே (பண்டரமும்மணிக்கோவை) என்று குமரகுருபரர் விதந்து கூறுகின்றார். மிகச் சிலருக்கே சைவ சித்தாந்தத் தேனமுது அருந்துவதற்கு வாய்த்தது, பலருக்கு வாய்க்கவில்லை என்பது முனிவரின் ஆதங்கம்.

இவ்வளவு உயர்வாக, சைவ சித்தாந்தத்தின் சிறப்பை உறுதிப்பாட்டுடன் எடுத்துரைத்தவர் குமரகுருபரரே ஆவர்.

உலகில் எண்ணற்ற சமயங்களும், பல்வேறு சாத்திர நூல்களும் உள்ளன. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் உயிர்களின் படிநிலை வளர்ச்சிக்கு உதவுவன ஆகும். சைவ சித்தாந்தம், மற்ற சமயத் தத்துவங்களிலிருந்து ஏற்புடையவற்றை எடுத்துக் கொண்டு பொருத்தமில்லாதவற்றைத் தள்ளி, சிறந்து விளங்கும் நெறியாகும். புறச்சமய நெறிகளில் ஒழுகியும், அகச்சமய வழிச் சென்றும், மனுநூல், மறைகள் வகுத்தபடி ஒழுகியும், அரிய தவங்கள், பல கலைகள், மறைகள் , சிறந்த புராணங்கள், உபநிடதங்கள் இவற்றை ஆராய்ந்து தெளிந்து படிப்படியாக மேலேறிச் சென்றால், சைவ சித்தாந்தச் செந்நெறியினை மக்கள் தலைப்படுவர். பின் இந்நெறியில் கூறப்படும் சீலம், நோன்பு, செறிவு, அறிவு வழிபாடுகளைச் செய்து, முதிர்ந்ததன் வாயிலாக, ஞானத்தைப் பெற்று, அதனால் சிவபெருமானின் திருவடிகளை அடைந்து வீடுபேற்றைப் பெறுவர். ஒன்றோடு ஒன்று ஒவ்வாத சமயங்களுக்கும், நூல்களுக்கும்

நடுவே, சைவ சமயமே சமயப்பிணக்கற்ற ஒருமை நெறியாகச் சிறந்து விளங்குகிறது என அருள்நந்தி சிவாசாரியாரும் அறுதியிட்டுக் கூறுவர் (கு. சுந்தரமூர்த்தி, சிவஞான சித்தியார் தெளிவுரை, ப.41)

"வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன்" (சிவப்பிரகாசம்–7) என்றும் உமாபதி சிவாசாரியார் சைவ சித்தாந்தச் செந்நெறியின் சிறப்பைக் கூறுவர்.

**குமரகுருபரர் கூறும் தசாங்கம்**

கந்தர் கலிவெண்பாவில் சிவபெருமானுக்குரிய சிறப்புக்களை முருகனுக்கு ஏற்றிக் கூறுகிறார், குமரகுருபரர். பின் திருவுருவ வருணனை, தசாங்கம் முதலியன கூறப்படுகின்றன.

**தசாங்கம்**

பாட்டுடைத் தலைவனுக்கு அவர்தம் பெருமை குறித்தற்கு ஏதுவாகப் பத்து உறுப்புக்களை அவரவர்தம் இயல்பிற்கும் தகைவிற்கும் ஏற்பக் கூறல் கவிஞர்தம் இயல்பு. அவற்றைத் தசாங்கம் எனப் பாட்டியல் நூல்கள் கூறும். அவையாவன:

மலை, நிதி, நாடு, ஊர், மாலை, குதிரை, யானை, கொடி, முரசு, ஆணை என்பன.

*"மலைநதி நாடுஊர் வனைதார் இவுளிகொலை*
*மதகளிறு கொடிமுரசு ஆணை இவையே*
*தசாங்கம் என்மனார் புலவர்"*

என்னும் இலக்கண விளக்கப் பாட்டியற் சூத்திரத்தால் இப்பத்து உறுப்புக்களையும் அறியலாம்; திருச்செந்தூர் முருகன் அரசாட்சியில் இப்பத்துவகை உறுப்புக்களும் இருப்பதாகப் புலவர்கள் பாராட்டுவதாகக் குமரகுருபரர் கூறி மகிழ்கிறார்.

1. மெய்யன்புடையவர்கள் உள்ளத்தில் தன்னால் வழங்கப் பெறும் இன்பமே அவனது மலை.

2. அம்மலையினின்றும் மேன்மேலும் பெருகிவரும் இன்பப் பெருக்கே பேராறு.

3. அப்பேராறு பாய்வதற்குரிய இடம், 36 தத்துவங்களும் கடந்த மேல் இடம். அதுவே அவனது திருநாடு.

4. உலகியல் இன்பம்அனைத்தையு கடந்த மேலான வீடுபேற்றின் கண் இறப்பும் பிறப்பும் அற்ற உயர்ந்த அழகிய நகரம் (ஊர்).

5. அவ்வின்ப நகரில் உள்ளோர், திருவைந்தெழுத்தை இடையறாது கூறிக் கூறித் தம் உயிர்க்காற்றைச் செலுத்துவர். அதுவே அவனது குதிரை.

6. உயிரின் ஐவகை மலங்களையும் போக்கும் சிவஞானம், அவனது யானை.

7. அன்பர்கள் இறையருளையே மலராகவும், தன் அன்பையே நாராகவும் கொண்டு தொடுக்கும் மாலை.

8. ஐந்தொழிலை இடையறாது நிகழ்த்தி நிமிர்ந்து விளங்கும் திருவருட்சத்தியான கொடி.

9. சுத்த மாயையிலிருந்து தோன்றும் பேரொலியாகிய முரசு.

10. ஐந்தொழில் செய்தும், தான் அதில் தோயாது நினைவு மாத்திரையால் நடத்தும் ஆணை. (கு. சுந்தரமூர்த்தி, கந்தர் கலிவெண்பா மூலமும் உரையும், பக். 54–55)

*"அகலாத பேரன்பு அடைந்தோர் அகத்துள்*

..............................................................................

..............................................................................

*பேசுந் தசாங்கமெனப் பெற்றோனே"*

*(கந்தர் கலிவெண்பா 66–74)*

என்பது குமரகுருபரர் வாக்கு.

புறச்சந்தான குரவருள் நான்காமவராகிய உமாபதி சிவாசாரியாரும் தமது நூலுள் ஞானாசிரியரைச் சிவமாகப் பாவித்துத் தசாங்கம் அமைத்துக் கூறுவதும் ஈண்டு எண்ணத்தகும் (நெஞ்சுவிடு தூது, 38–79).

குமரகுருபரர் முருகனுக்குத் தசாங்கம் கூறும்போது, சைவர்களின் முதன்மை மந்திரமாகிய ஐந்தெழுத்தையும் (நமசிவாய), உயிர்களை

அல்லற்படுத்தி, அறியாமையுட்படுத்தும் ஆணவம், கன்மம், மாயை, திரோதானம், மாயேயம் ஆகிய மலங்களையும் கூறி, அவற்றை நீக்கியருளும் திருவருளையும் குறிக்கின்றார். மேலும், இறைவன் தனது சத்தியைப் பயன்படுத்தி மேற்கொள்ளும் ஐந்தொழில்களாகிய படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகியவற்றையும் குறிக்கின்றார். அன்றியும், சிவன், இவற்றைத் தனது சங்கற்பத்தால் நினைத்த மாத்திரத்திலேயே தனது ஆணையால் முடிக்கின்றான் எனவும் கூறுகின்றார் (கந்தர் கலிவெண்பா 69,70,72,73).

**இறைவன் அட்டமூர்த்தன்**

இறைவன் உயிர்கள் உய்யும் பொருட்டு ஐம்பூதங்கள், சூரிய சந்திரர், உயிர் ஆகியவற்றைத் தன் வடிவமாகக் கொண்டு அட்டமூர்த்தனாகத் திகழ்கிறான் என்பது சைவ சித்தாந்தம் கூறும் கொள்கை. சாத்திர நூல்களான திருவுந்தியாரும், 'எட்டுக் கொண்டார்' (24) என்று கூறும். குமரகுருபரரும்,

*'அட்டமூர்த்தமாம் வாழ்வே'* *(கந்தர் கலி வெண்பா–65)*

என்றும்,

*"இருபெரும் சுடரும் ஒருபெரும் புருடனும்*
*ஐவகைப் பூதமோடு எண்வகை உறுப்பின்*
*மாபெரும் காயம் தாங்கி ஓய்வின்றி*
*அருள் முந்து உறுத்த ஐந்தொழில் நடிக்கும்*
*பரமானந்தக் கூத்த......"* *(சிதம்பர மும்மணிக்கோவை–54)*

என்றும் கூறுகின்றார். மேலும்,

*"மகிவருக்கன் மதிவளியாள் யமானன்தீநீர்*
*மண்எனும் எண்வகை உறுப்பின் வடிவு கொண்ட ஒருவன்"*
*(சிதம்பர மும்மணிக்கோவை–54)*

என்று இறைவனுடைய அட்டமூர்த்தங்களை விளக்குகிறார்.

*"இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி*
*இயமானனாய் எறியுங் காற்றுமாகி*
*அருநிலைய திங்களாய் ஞாயிறாகி*
*ஆகாச மாய் அட்ட மூர்த்தியாகி"*

என்னும் அப்பர் தேவாரமும் ஈண்டு எண்ணத்தக்கது.

மேலும் மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை ஆகிய ஆறு அத்துவாக்களையும் தனது வடிவமாக இறைவன் கொள்கின்றான் என்ற கருத்தை,

*"மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்*
*தொந்தமுறும் வன்னமே தொக்காகப் பந்தனையால்*
*ஒத்த புவனத்து உருவே உரோமமாத்*
*தத்துவங்களே சத்த தாதுவா வைத்த*
*கலையே அவயவமாய்க் காட்டும் அத்துவாவின்*
*நிலையே வடிவமா நின்றோய்!"*

*(கந்தர் கலிவெண்பா, 60–62)*

என்றும் விளக்குகிறார்.

## ஆணவம்

ஐந்து மலங்களையும், மூன்றனுள் அடக்கி, ஆணவம், கன்மம், மாயை என்று கூறுவர். இவற்றுள், ஆணவம், சகசமலம், மூலமலம் என்றும் கூறப்பெறும். கண்ணைப்படலம் மறைத்தாற் போன்று உயிரின் அறிவை மறைத்து, உயிருக்குத் தன்முனைப்பை உண்டாக்கி, உயிரின் அனைத்துத் துன்பங்களுக்கும் காரணமாக விளங்குகிறது. நெல்லிற்கு உமி போலவும், செம்பில் களிம்பு போலவும் இவ்ஆணவம் உயிருடன் சேர்ந்துள்ளது. (சிவஞானபோதம் உதாரண வெண்பா–120) உயிரறிவை மறைப்பதால் உயிரினுள் மறைந்துள்ள இறைவனை அறியாது, தானே எச்செயலுக்கும் தலைவன் என்று தருக்கிக் கொண்டு, கள்ளத் தலைவனாய்ச் செயல்படும். குமரகுருபரரும் ஆணவமலத்தை,

*"ஆணவமான படலம்" (கந்தர் கலிவெண்பா–26)*

என்றும்;

*'அகந்தைக் கிழங்கு'*

*(மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், வருகைப் பருவம்–9)*

என்றும் உரைப்பர்.

## வினை

வினையும், பிறப்பு, இறப்பும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. இவை கடல் அலைகள் போல் தொடர்ந்து வந்து உயிரைப் பந்தத்துள் செலுத்தும்; நிலையாத கொள்ளி வட்டமும், காற்றாடியும் போல, உயிர், பிறப்பு இறப்பில் பட்டு, மூவுலகங்களிலும் சுழன்று திரியும். இதனை மனத்திற் கொண்டே குமரகுருபரரும்,

> *"....................................................... தீர்வரிய*
> *கன்மத்துக்கு ஈடாய்க் கறங்கும் சகடமும் போல்*
> *சென்மித்து உழலத் திரோதித்து......"*
>
> *(கந்தர் கலிவெண்பா–15,16)*

என்று கூறுகின்றார். மேலும் வினையை 'ஊழ்வினை' (கந்தர் கலிவெண்பா 25–43) என்றும் குறிப்பிடுகின்றார்.

## இறைவனே குருவாய் வந்தான்

எண்ணற்ற பல பிறவிகளில் பிறந்து இறந்து சலிப்புற்ற உயிர், இன்பத்தைக் கண்டு மகிழாமலும், துன்பத்தைக் கண்டு துவளாமலும் இரண்டையும் சமமாகப் பாவிக்கும் மனப் பக்குவத்தை அடைகிறது. அந்நிலை, 'இருவினை ஒப்பு' எனப்படும். அந்நிலையில் உயிரறிவை மறைத்த ஆணவமலம், தன் சக்தி தேய்ந்து, மெலிதாகிறது. இது 'மலபரிபாகம்' எனப்படும். இந்நிலையில் உயிரினுள் உள்ள திருவருள் வெளிப்படத் தொடங்குகிறது. உயிரில் சத்தி பதிதல் ஆகிய 'சத்திநிபாதம்' நிகழும். இது நால்வகையாகப் பேசப்படுகிறது. (கந்தர் கலிவெண்பா 20–22; திருவருட்பயன் 51). உயிரின் பக்குவத்திற்கேற்ப மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்ற வகைகளில் சத்திநிபாதம் உயிரினுள் நிகழும்போது, நான்காம் நிலையில் இறைவனே குருவாய்த் தோன்றுகின்றான். அருட்சக்தி பதிந்தவுடன், பக்குவ உயிர்களுக்கு, உலகப் பற்றுக்கள் மீது அச்சம் பிறப்பதால், உலகப் பற்றுக்களினின்றும் விரைவில் விடுபட உயிர் அவாக் கொள்கிறது. இந்நிலையில், 'குருவே சிவமெனக் கூறினன் நந்தி' (திருமந்திரம்) என்பதற்கிணங்க, இறைவன் கண்ணுதலும் கறைக் கண்டமும் கரந்து குருவாய் வருகிறான். இதனை,

*"கருணைத் திருவுருமாய்க் காசினிக்கே தோன்றிக்*
*குருபரன் என்றோர் திருப்பேர் கொண்டு"*

என்று குமரகுருபரர் அருளுகின்றார். மேலும், தம் குருவாகிய மாசிலாமணி தேசிகர், தம் பிறவியறுத்துத் தமக்குப் பேரின்ப வாழ்வு அருளியதாகப் போற்றுகின்றார்.

*"எம்மனோர் போல இனிது எழுந்து அருளிக்*
*கைம்மாறு அற்ற கணக்கில் பேரின்ப*
*மோனவாழ்வு அளிக்கும் ஞான தேசிகன்"*

*(பண்டார மும்மணிக்கோவை)*

என்றும்;

*"விளங்கு எழில் மிடற்று ஓர்*
*களங்கம் கரந்து மாசிலாமணி"*

*(பண்டார மும்மணிக்கோவை)*

என்றும் தம் ஞானாசிரியரைச் சிவமெனக் கருதிப் போற்றித் துதிக்கின்றார்.

**முடிவுரை**

இக்கட்டுரை வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன:

1. சைவ சமயம், சமயப் பிணக்கற்ற ஒருமை நெறியாக விளங்குவது;
2. சிவபெருமானுக்குரிய 'தசாங்கம்' முதலானவற்றை;க குமரகுருபரர் முருகப்பெருமானுக்கு ஏற்றி உரைக்கின்றார்;
3. சைவ சித்தாந்தத்தில் சொல்லப்படும் ஆணவம், வினை, சத்திநிபாதம் முதலானவற்றைக் குமரகுருபரர் தம் கந்தர் கலிவெண்பாவில் எடுத்தோதியுள்ளார்.

## 14. இரண்டலா ஆன்மா

### முன்னுரை

"இறை, உயிர், கட்டு என்ற மூன்றையும் சமய அடிப்படைப் பொருளாக வரையறுத்துக் கொண்டு நிலவும் சிவநெறி வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்தே நம் தமிழகத்தில் இருந்து வருகிறது" என்பர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (ஞானாமிர்த உரை).

### முப்பொருள்களின் தன்மை

சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களாகிய பதி, பசு, பாசம் இவற்றின் தன்மைகளாவன:

பதியாகிய இறைவன் தூய அறிவுப் பொருள்; தானே அறிபவன்; எனவே 'சித்து' எனப்படும்; அதாவது அதிசூக்கும சித்து. (சித்து–அறிவு)

பாசமாகிய உலகம் சடப்பொருள்; அறிவித்தாலும் அறியாது; எனவே 'அசித்து' எனப்படும். (அசித்து–உயிரற்ற சடம்)

பசுவாகிய உயிர் அறிவுப்பொருளானாலும் தானே அறியாது; ஒருவர் அறிவிக்கவே அறியும் தூலசித்து; எனவே 'சிதசித்து' எனப்படும்.

பதியாகிய இறைவன் மாற்றமடையாது என்றும் ஒரே தன்மையாய் உள்ள பொருள்; எனவே 'சத்து' எனப்படும்.

பாசம் தோன்றியழியக் கூடிய மாற்றத்திற்குட்பட்ட பொருள் ஆகையால் 'அசத்து' எனப்படும்.

இவ்விரண்டிற்கும் இடைப்பட்டதாய்ச் சத்தாகிய இறைவனோடு கூடிச் சத்தாகவும், அசத்தாகிய உலகத்துடன் கூடி, மாற்றத்திற்கு உட்பட்டு அசத்தாகவும் விளங்குவதால் 'சதசத்து' என உயிர் அழைக்கப்படும்.

### உயிர்கள் என்றும் உள்ளவை

உயிர்கள் அநாதி; நித்தப் பொருள்கள் ஆகும். உயிர்களுக்குத்

தனுகரணாதிகளை (உடல் கருவிகளை) இறைவன் ஆக்கிக் கொடுத்தல் 'படைத்தல்' எனவும், உயிர்களின் வினைப்போகம் நீங்கும் வரை காத்து, பின்,அவற்றின் தனுகரணாதிகளை அழித்தல் இறைவனின் 'அழித்தல் தொழில்' எனவும் கூறப்படும். எனவே உயிர்கள் என்றும் உள்ளவை; இக்கருத்தை,

*"விளையாத தோர் பரிசில்லா பசுபாச வேதனை ஒண்தளையாயின..."*
*(சம்பந்தர் தேவாரம்)*

*"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்*
*பதியினைப் போல் பசுபாசம் அநாதி"* *(திருமந்திரம்)*

என்று அருள் நூல்கள் குறிப்பிடுகின்றன.

**'பசு' என்ற பெயர்க் காரணம்**

இயல்பாகவே அறிவுப் பொருளாகிய உயிரின் அறிவு, ஆணவம் என்ற அறியாமையால் தடைப்பட்டு இருப்பதால், சுட்டப்பட்டிருப்பதால் 'பசு' எனப்பட்டது.

**உயிர் வியாபக அறிவை உடையது**

உயிர் இயல்பாக வியாபக அறிவை உடையது; இச்சை, ஞானம், கிரியைகளை உடையது. இறைவனுடைய இச்சை, ஞானம், கிரியை முறையே உயிரினுடைய இச்சை, ஞானம், கிரியைகளைச் செலுத்த இவை செயல்படுகின்றன.

**அணு**

உயிரின் வியாபக அறிவை ஆணவம் மூடி, உயிருக்கு அணுத் தன்மையைச் செய்வதால் உயிரை 'அணு' எனவும் அழைப்பர்.

**உயிர்கள் எண்ணற்றவை**

ஒவ்வொரு உயிரிலும் இன்பதுன்ப நுகர்வு வெவ்வேறாக உள்ளது; எனவே உயிர்கள் எண்ணற்றவை. 'ஆருயிர்த் தொகை' என்பது கந்தபுராணம்.

*"பிறந்த நாள் மேலும் பிறக்கும் நாள் போலும்*
*துறந்தோர் துறப்போர் தொகை" (11)*

என்பது திருவருட்பயன்.

## உயிர்கள் என்றும் இறைவனுக்கு அடிமை

உயிர்கள் என்றும் சுதந்திரமானவை அல்ல; என்றும் இறைவனுடைய அடிமைகளாகும். உலகங்கள் இறைவனுக்கு உடைமைப் பொருளாக உள்ளன. சுந்தரர், 'அத்தா உனக்காளாய் இனி அல்லேன்' என்றும், 'மீளா அடிமை' என்றும் தம்மை இறைவனுக்கு அடிமை என்று கூறுகிறார்.

## உயிர்கள் அறியும் முறை

உயிர், அறிவாயினும் தானாக எதையும் அறியாது; வேறொன்றின் துணையாலேயே அறியும்; அதாவது வியஞ்சகம் கொண்டே அறியும்; இதனை,

*"பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு*
*அறிவென்ற பேர் நன்று அற" (15)*

என்று திருவருட்பயன் கூறும். பிற பொருள்களின் துணையின்றி அறிய முடியாத உயிர், 'அறிவு' என்று பெயர் பெற்றிருப்பது வியப்பளிக்கிறது என்கின்றார் உமாபதி சிவம்.

உயிர் சகலநிலையில் மாயையாலாகிய கருவிகளாலும், சுத்தநிலையில் திருவருளாலும், அறியும்.

அறியும்பொழுது ஒவ்வொன்றாக, படிமுறையில் (சோபான முறை) அறியும்.

*"அறிந்தும் அறிவதே யாயும் அறியாது*
*அறிந்ததையும் விட்டங்கு அடங்கி அறிந்த*
*தெதுஅறிவும் அன்றாகும் மெய்கண்டான் ஒன்றின்*
*அதுவதுதான் என்னும் அகம்"*

*(சிவஞானபோதம், உதாரண வெண்பா,21)*

என்று இதனை சிவஞானபோத உதாரண வெண்பா விளக்கும்.

## சார்ந்ததன் வண்ணமாதல்

சார்ந்ததன் வண்ணமாதல் என்பது அறியப்படும் பொருளில் அழுந்தி அதுவேயாதல் ஆகும்.

உயிர் எப்போதும் தனித்திருப்பதில்லை. அறியாமையே உருவாக கேவலநிலையில் ஆணவத்தோடும், அறிவு சிறிதே விளங்கும்

சகலநிலையில் மாயையோடும், கருவிகளினின்றும் நீங்கிய சுத்தநிலையில் திருவருளோடும் கூடியிருக்கும். ஆனாலும், தான் ஒரு தனிப்பொருள் என்றே நினைக்கிறது. இதுவே அறியாமை; சாரப்பட்ட பொருளின் தன்மையை உயிர் தனதாகக் கொள்ளும்.

*"தன்நிறமும் பல்நிறமும் தானாம் கல்தன்மைதரும்*
*பொன்நிறம் போல் மன்நிறம் இப்பூ" (55)*

என்று திருவருட்பயன் பாடல், உயிரின் சார்ந்ததன் வண்ணமாகும் தன்மைக்குப் பளிங்கை உவமையாகக் காட்டுகிறது. பளிங்கு, தன்னையடுத்துள்ள பொருளையே சார்ந்து, அப்பொருளின் நிறத்தைத் தனதாகக் கொள்ளும்; அதாவது, நீலமணியைச் சார்ந்தபொழுது நீலமாகவும், செம்மணியைச் சார்ந்தபொழுது செம்மையாகவும் விளங்கும்; திருவள்ளுவர் இதனை,

*"அடுத்தது காட்டும் பளிங்கு போல்"*

என்றும்; தாயுமானவர்,

*"பளிங்கனைய சித்து"*

என்றும் குறிப்பர்.

உமாபதிசிவம், கண்ணின் சார்ந்ததன் வண்ணமாம் தன்மைக்கு ஆகாயம், கண், பளிங்கு போன்ற பொருள்களை உவமையாகக் காட்டுவார். ஆகாயம், கண் பளிங்கு போன்ற பொருட்கள் சூரியன் தோன்றுகின்ற பகற்பொழுதில் ஒளிபெற்றும், சூரியன் மறைந்திருக்கும் இரவுப் பொழுதில் இருளே ஆகியும் நிற்கும். இவை போலவே உயிரும் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை கொண்டுள்ளது.

*"இருளில் இருளாகி எல் இடத்தில் எல்ஆம்*
*பொருள்கள் இலதோ புவி" (18)*

என்பதே அப்பாடல்.

**உயிரின் தன்னியல்பும், பொதுவியல்பும்**

சார்ந்ததன் வண்ணமாகும் உயிருக்கு, இறுதியில், திருவருளில் அழுந்தி, இறைவனைச் சார்ந்து நின்று, இறையின்பத்தை அனுபவித்தலே தன்னியல்பு எனப்படும் சொரூப இலக்கணம். ஆணவமல மறைப்பால் துன்ப இருளில் அழுந்திக் கிடக்கின்ற உயிரின்மேல் இறைவன் பெருங்கருணை கொண்டு

மாயையின் காரியமாகிய உடல் கருவிகளைப் படைத்தளிக்கிறான். மாயையின் சேர்க்கையினால் உயிர் ஐந்து அவத்தைகளை (ஐந்து நிலைகள்) அடைவது உயிரின் பொதுவியல்பு எனப்படும் தடத்த இலக்கணமாகும்.

நீரின் இயல்பை மறைத்துள்ள பாசிபோல உயிரின் உண்மையியல்பை மறைத்து நிற்பது ஆணவம்; பாசியைச் சிறிது விலக்க, நீர் சிறிது தோன்றுவது போல, மாயாகாரியங்கள் உயிரறிவைச் சிறிது விளக்கி நிற்கும். சூரியன் வரும்வரை, விளக்கு சிறிது இருளை விலக்கி நிற்கும். அதுபோல, இருள்நிலையிலுள்ள உயிருக்கு இறையொளி வரும்வரை, மாயா கருவிகள் விளக்குப் போலப் பயன்படுகின்றன.

இதனை உமாபதிசிவம்,

*“விடிவாமளவும் விளக்கனைய மாயை*
*வடிவாகி கன்மத்து வந்து” (திருவருட்பயன், 30)*

என்பர். உயிரின் வினைகளுக்கீடான உடல் கருவிகளே உயிருக்குக் கிடைப்பதால் ‘வடிவாதி கன்மத்து வந்து’ என்கிறார்.

**சதசத்து**

அநாதி முத்த சித்துருவாகிய இறைவன் என்றும் மாறாது ஒரே தன்மை கொண்ட செம்பொருள்; நிலையான பொருளாகிய இறைவன், நிலையற்ற உலகப் பொருள்களை அறியத் தேவையில்லை; பாசம் அவனுடைய வியாபகத்துள்ளே அடங்கி விடுவதால், அவற்றை அவன் அறிய வேண்டுவதில்லை.

*“சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாது என்றது”*
*“மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்”*
*(சி.போ.7:1: மேற்கோள் ஏது)*

என்ற சிவஞான போதத் தொடர்கள் இக்கருத்தை விளக்கும். பாசம் அறிவற்ற சடப் பொருளாதலால் இறைவனை என்றும் அறியாது. எனவே இவ்விரண்டையும் அறிகின்ற உயிர் சத்து, அசத்து எனச் சொல்லப்படாது, இரண்டிற்கும் இடைப்பட்ட சதசத்து என அழைக்கப்படுகிறது. அதாவது, உயிர் அழிவில்லாததாயினும், மாற்றத்திற்குட்பட்ட அசத்தாகிய பாசத்தோடு கூடித் தானும் மாற்றத்திற்குட்பட்டு அசத்து ஆகவும்; என்றும் ஒரே தன்மையாய் இருக்கக்கூடிய சத்தாகிய இறைவனோடு கூடி, தானும் மாற்றம்

இல்லாது சத்தாக இருப்பதால் சதசத்து எனவும் படும். சத்து + அசத்து – சதசத்து. இக்கருத்தையே மெய்கண்டார், சிவஞானபோதம் ஏழாம் நூற்பாவில்,

> *"யாவையும் சூனியம் சத்து எதிராகலின்*
> *சத்தே அறியாது அசத்திலது அறியாது*
> *இருதிறன் அறிவுளது இரண்டு அலா ஆன்மா"*

என்பர். உமாபதிசிவம், உயிரின் சதசத்தாகும் தன்மையை,

> *"சத்து அசத்தைச் சாராது; அசத்து அறியாது அங்கண் இவை*
> *உய்த்தல் சதசத்தாம் உயிர்" (திருவருட்பயன், 17)*

என்று குறிக்கின்றார். மெய்கண்டாரின் நேர் மாணவரான மனவாசகம் கடந்தார், உயிரின் சதசத்து, சிதசித்தாகும் தன்மையை,

> *"நன்றா உரைக்கக்கேள் நல்ல சித்தின்முன் அசித்து இங்கு*
> *ஒன்றாது சித்து அசித்தை ஓராது–நின்று இவற்றை*
> *அன்றே பகுத்தறிவது ஆன்மாவே என்றுமறை*
> *குன்றாமல் ஓதும் குறித்து"*
>
> *(உண்மை விளக்கம், 24)*

என்று தமது ஆசிரியரின் கருத்தை விதந்து ஓதுகின்றார்.

**முடிவுரை**

எனவே, 'இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா' என்ற தொடருக்கு, "ஆன்மா, அசத்தாகிய உலகப் பொருள்களை, அசத்தாகிய கருவிகளால் அறிந்து, அசத்தாகிய உலகப் பொருள்களின்கண் அழுந்தியிருக்கும்; சத்தாகிய இறைவனை, சத்தாகிய திருவருவளால் அறிந்து, சத்தாகிய இறைவனின்கண் அழுந்திக்கிடக்கும் எனவே சதசத்து என்று அழைக்கப்படுகின்றது. சத்தும் ஆகாமல், அசத்தும் ஆகாமல் இரண்டிற்கும் இடைப்பட்டு 'சதசத்து' ஆக ஆன்மா உள்ளது" என்று பொருள் கொள்ள வேண்டும். முன்னது சகல நிலையாகிய உலக வாழ்க்கைநிலை; பின்னது சுத்த நிலை எனப்படும் இறை நிலை (முத்திநிலை).

## 15. நடராசர் நடன தத்துவம்

### முன்னுரை

விறகில் தீ போலவும், பாலில் நெய் போலவும் நம் கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்திருக்கும் இறைவன், உருவம் கொண்டு வரவில்லையெனில், உயிர்கள் பயனடைய மாட்டா. எனவே உயிர்கள் பயன்பெறும் வகையில் இறைவன் அருளுருக் கொள்கின்றான். அத்தகைய உருவங்களில் 'நடராசர்' உருவம், தனிச் சிறப்புடையது; அது குறித்து ஒரு சிறிது விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

### நடராசர் திருமூர்த்தம்

சிவபெருமானின் 25 திருமூர்த்தங்களுள் மிகவும் சிறப்பு வாய்ந்தது நடராசப் பெருமானின் வடிவமாகும். வேற்றுச் சமயத்தினரும் அதிசயித்துப் போற்றும் வகையில், இத்திருமூர்த்தம் அமைந்துள்ளது. இறைவனின் திருநடனத்தாலேயே அண்டங்கள் முதல் அணுக்கள் வரை இயங்குகின்றன.

நான்கு கைகள், ஆறு கைகள், எட்டுக் கைகள், பத்துக் கைகள், பதினாறு கைகள் கொண்ட நடராச வடிவங்கள், மற்றும் 108 வகைத் தாண்டவங்கள் சைவ நூல்களில் கூறப்படுகின்றன. ஆயிரம் திருக்கைகளையுடைய நடராசர் வடிவத்தையும், உமாபதி சிவாசாரியரின் 'குச்சிதாங்கிரிஸ்தவம்' என்னும் வடமொழி நூல் குறிப்பிடுகின்றது. ஆடல்வல்லானின் தியானசுலோகங்களுள் ஒன்று, இரண்டாயிரம் திருக்கரங்களைப் பற்றிக் கூறுகிறது. ஆடல் வல்லானை வணங்கினால் சிவப்பேரின்பம் பெருகும். இவரது அருட்சத்தி, 'சம்பத்யோகப்ரதாயினி'என்பதாம். (மா.சிவ குருநாதபிள்ளை, சிவ வடிவங்கள், பக். 146,147)

### ஐந்தொழில்கள்

ஆடற்கடவுளின் நடனம், அவன் செய்யும் ஐந்தொழில்களையும்

குறிக்கின்றது. 'ஓம்' என்ற பிரணவம் படைப்புத் தொழிலுக்கு மூலகாரணமாய் விளங்குகின்றது. இறைவன் திருக்கரத்திலுள்ள உடுக்கை 'ஓம் ஓம்' என்று ஒலிக்கின்றது; எனவே உடுக்கையொலி, படைத்தல் தொழிலைக் குறிக்கின்றது; அபயக்கரம், துன்பத்துள் அல்லற்படும் உயிர்களைக் காக்கும் கரமாகும்; நெருப்பேந்திய கை, உயிர்கள் இளைப்பாறுவதற்காக, இறைவன் அழித்தல் தொழிலைச் செய்வதைக் குறிக்கின்றது. இடக்கைகளில் ஒன்று, உயிர்களுக்கு அருளும் திருவடியைக் காட்டுகிறது. இறைவனுடைய ஊன்றிய திருவடி, முயலகன் என்னும் அரக்கனை மிதித்துக் கொண்டு நிற்கும் செயல், உயிர்களின் வினைக்கேற்றவாறு, இறைவனை உயிரறிவை மறைத்து உலக போகத்தில் ஆழ்த்தும் 'மறைத்தல்' தொழிலைக் குறிக்கிறது. தூக்கிய திருவடி, உயிர்களைப் பிறவிக் கடலில் இருந்து எடுத்து வீடுபேறளிக்கும் 'அருளல்' தொழிலைக் குறிக்கிறது.

*"தோற்றம் துடியதனில்; தோயும் திதியமைப்பில்;*
*சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்;–ஊற்றமா*
*ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம்; முத்தி*
*நான்ற மலர்ப்பதத்தே நாடு"*

என்பது உண்மை விளக்கம் (35).

இறைவன் இயற்றும் ஐந்தொழில்களும் உயிர்களைக் கடைத்தேற்ற வேண்டுமென்ற கருணை நோக்கிலேயே செய்யப்படுகின்றன.

இறைவன் நம் சித்தத்தில் நடம்புரிவதாலேயே, நம் உடல் இயங்குகின்றது. நடனம் நின்று விட்டால், நம் உயிரியக்கமும் நின்று விடும். இறைவனின் இடைவிடாத நடனத்தாலேயே அனைத்து அண்டங்களும் ஆடுகின்றன.

*"வேதங்களாட மிகு ஆகமமாட*
*கீதங்களாட கிளரண்டம் ஏழாட*
*பூதங்களாடப் புவன முழுதாட*
*நாதங் கொண்டாடினான் ஞானானந்தக் கூத்தே"*

என்றும்;

*"தத்துவம் ஆடச் சதாசிவம்தான் ஆட*

*சித்தமும் ஆடச் சிவசத்திதான் ஆட*
*வைத்த சராசரம் ஆட மறையா*
*அத்தனும் ஆடினான் அம்பலக்கூத்தே"*

என்றும் திருமூலர் கூறுவது கொண்டு இக்கருத்தையறியலாம்.

உலகு, உயிர்களை இயக்குதல் இறைவனுக்கு விளையாட்டுப் போல் மிக எளிதாய் இருப்பதால், 'விளையாட்டு' என்று பொருள்படும் 'நடனம்' என்ற சொல்லால் சான்றோர் குறித்தனர்.

**ஊனநடனமும் ஞான நடனமும்**

இறைவனின் நடனம் ஒன்றே; அஃது உயிர்களின் அறிவைப் பொறுத்து வேறுபடுகின்றது. உலக போகத்தில் ஆழ்ந்திருப்போருக்கு ஊன நடனமாகவும், சிவபோகத்தில் ஆழ்ந்திருப்போருக்கு ஞான நடனமாகவும் காட்சி தருகின்றது.

உயிர்கள், 'ஆணவம் கன்மம் மாயை' ஆகிய மும்மலங்களுக்கு ஆட்பட்டு இறைவனை உணராது, உலகியலில் பற்றுக் கொண்டு கேவல நிலையிலும் சகல நிலையிலும் உழன்று கொண்டு இருக்கும் நிலையே 'ஊன நடனம்' எனப்படும். உயிர்களைப் பந்திக்கும் மும்மலங்களும் நீங்கி, உயிர்கள் தூய்மையடையும் பொருட்டு இறைவன் உயிர்களின் அறிவை மறைத்து, உலகை நுகரச் செய்வதால் அவனது ஐந்தொழில்களும் 'ஊன நடனம்' எனப்பட்டது. இச்செயல்களால் அறியாமையுட்பட்ட உயிர்கள், சிறிது சிறிதாக அறிவு வளரப் பெற்றுத் தம்மையும் தம் தலைவனையும் உணரும் பக்குவத்தை எய்துகின்றன. அவ்வகை உயிர்களுக்கு மெய்யுணர்வை வழங்கி, மும்மலங்களை நீக்கி முத்திப் பேறு வழங்குகின்றான். இச்செயல் 'ஞான நடனம்' எனப்படும்.

புலனறுத்து அகநெகிழ்ந்த அன்பு கொண்டு, தன்னைப் பற்றி விலகாத ஞானியரின் மாயையை உதறி, தீவினையைச் சுட்டு, ஆணவத்தின் வலிமையைக் கெடுத்து, அவ்வுயிர்களைத் தன் திருவருளினால் எடுத்து, எல்லையில்லாப் பேரின்பக் கடலில் மூழ்குவித்தலே எம் பெருமானின் 'ஞான நடனம்' எனப்படும்.

*"மாயைதனை உதறி வல்வினையைச் சுட்டுமலம்*
*சாய அமுக்கிஅருள் தான் எடுத்து நேயத்தால்*

*ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தல்*
*தான் எந்தையார் பரதம் தான்"* *(உண்மை விளக்கம், 36)*

### திருவைந்தெழுத்தே திருமேனி

'சிவாயநம' என்ற திருவைந்தெழுத்தில் நடுவிலுள்ள 'ய' காரம் உயிரைக் குறிக்கும். ஐந்தெழுத்தே திருமேனியாகக் கொண்டு, உயிர்களின் பிறவித் துன்பம் நீங்குமாறு தன் பெருங்கருணையால் திருநடம் புரிந்து அருளுகின்றான். உயிர்களே சிற்றம்பலமாகவும், உயிர்களின் பிறவிப் பிணி நீக்கும் பேரருளே ஆடலின் பயனாகவும் கொண்டு, இறைவன் நடமிடுகின்றான்.

'நமசிவாய' மந்திரத்திலுள்ள ஐந்தெழுத்துக்களில் அம்பலவாணனின் திருவடியில் 'ந'கரமும், திருவயிற்றில் 'ம'கரமும், திருத்தோள்களில் 'சி'கரமும் திருமுகத்தில் 'வ' கரமும், அவனது திருமுடியில் 'ய'கரமும் உள்ளது.

'சிவாயநம' என ஓதும்போது, உடுக்கையேந்திய திருக்கரம் 'சி'கரத்தையும், வீசிய கரம் 'வ'கரத்தையும் அபய கரம் 'ய'கரத்தையும், அனலேந்திய கரம் 'ந'கரத்தையும் முயலகனை மிதித்த திருவடி 'ம'கரத்தையும் குறிக்கும்.

மேலும் ஓங்காரமாகிய பிரணவ மந்திரமே அம்பலவாணனின் திருவுருவைச் சுற்றிலும் அமைந்துள்ள 'திருவாசி' யாகும்.

*"ஓங்காரமே நல்திருவாசி உற்று அதனில்*
*நீங்கா எழுத்தே நிறைசுடராம்.........."* *(உண்மைவிளக்கம்,35)*

### பாலுண்குழவி பசுங்குடர் பொறாதென...!

தில்லையம்பலத்தில் இறைவன் ஆடும் தனிப்பெருங்கூத்து 'ஆனந்தக் கூத்து' எனப்படுகிறது.

பாலை உண்ணும் இளங்குழந்தையின் குடல் சீரணிக்கும் சக்தி அற்றதென, நோய்க்குரிய மருந்தை ஒரு தாய், தான் உண்டு தன் பாலின் வழியே அக்குழந்தை பெறும்படி செய்கின்றாள். அதுபோல உயிர்களின் பிறவி நோய் நீங்க, இறைவன் செய்யும் அருள் நடனத்தை உயிர்கள் நேரே காணும் ஆற்றலற்றவை; எனவே சிவகாமியன்னை அத்திருக்கூத்தைத் தான் கண்டு, அதன் பயனை மறித்து உயிர்களுக்கு அருளுகின்றாள்

என்று குமரகுருபரர் போற்றுகின்றார்.

*"இத்தொழில் ஐந்தும்நின் மெய்த்தொழிலாகப்*
*பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென*
*நோயுண் மருந்து தாய்உண் டாங்கு*
*மன்னுயிர்த் தொகுதிக்கு இன்னருள் கிடைப்ப*
*வையம் ஈன்று அளித்த தெய்வக் கற்பின்*
*அருள்சூல் கொண்ட ஐயரித் தடங்கண்*
*திருமாண் சாயல் திருந்திழை காண*
*சிற்சபை பொலியத் திருநடம் புரியும்*
*அற்புதக் கூத்த"*

*(சிதம்பர மும்மணிக் கோவை, 2,13–21)*

### அடியார்க்கு எளிய ஆடல் வல்லான்

பேரண்டங்களையும் உயிர்களையும் ஆட்டி வைக்கும் நடன சபாபதி நந்தனார்க்கு அருள் செய்த பெருங் கருணை போற்றற்குரியது.

*"அந்தணர்கள் அதிசயித்தார் அருமுனிவர் துதி செய்தார்*
*வந்தணைந்த திருத்தொண்டர் தம்மைவினை மாசறுத்துச்*
*சுந்தரத் தாமரை புரையுந் துணையடிகள் தொழுதிருக்க*
*அந்தமிலா ஆனந்தப் பெருங்கூத்தர் அருள் புரிந்தார்"*

*(பெரியபுராணம், திருநாளை,36)*

### சிலம்பொலி அருளிய செம்மல்

'நீடும் உரிமைப் பேரரசால் நிகழும் பயன், நிறை தவமும் தேடும் பொருளும் பெருந்துணையும் தில்லைச் சிற்றம்பலத்துள் ஆடும் கழலே' எனத் தெளிந்து, ஆடல் வல்லானின் தூக்கிய திருவடியைப் போற்றி வணங்குதற்கு அன்பினால் பூசையை மேற்கொண்ட சேரமான் பெருமாள் நாயனார், நாள்தோறும் பூசையின் இறுதியில் இறைவனின் திருச்சிலம்பின் ஒலியை அவனருளால் கேட்கப் பெற்றார்.

*"வாசத்திரு மஞ்சனம் பள்ளித் தாமஞ்சாந்தம் மணித்தூபம்*
*ஈசர்க்கேற்ற பரிசினால் அருச்சித்தருள எந்நாளும்*
*பூசைக்கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பின் ஒலி அளித்தார்"*

*(பெரியபுராணம், கழறிற்றறிவார் நாயனார் புராணம் 24)*

சிலம்போசை என்பது இறைவனின் இடைவிடாத திருநடனத்தின் போது எழும்பும் ஓசையைக் குறிக்கும்

*"திருச்சிலம்பு ஓசை ஒலிவழியே சென்று*
*நிருத்தனைக் கும்பிடு என்று உந்தீபற*
*நேர்பட அங்கே நின்று உந்தீபற"*

*(திருவுந்தியார், 17)*

கூத்தப்பிரானின் திருவடிச் சிலம்போசையை இடைவிடாது அன்பு கொண்டு, வாக்குமனம் காயத்தால் துதிப்பவர்க்கு அவன் சிலம்பொலியாகி நுண்ஒலி அகச் செவியில் கேட்கும். அந்நிலையில் அவன் நேர்படத் தோன்றி அருளுவான்.

*"நன்மணி நாதம் முழங்கியென் உள்ளுற நண்ணுவது"*

*(திருப்படையாட்சி, 4)*

என்று மணிவாசகர் குறிப்பதும், யோகியர்க்கு அகத்தே நிகழும் மணியோசை முதலிய பத்துவகை ஓசைகளேயாம்.

உமாபதிசிவாசாரியரின் பக்திக்கிரங்கி, ஏறாத கொடியை ஏற்றுவித்ததும், பெற்றான் சாம்பான் என்ற விறகு வெட்டிக்கு அருள்செய்ததும் அம்பலத்தானின் எளிவந்த பெருமையையும் அருமையையும் வெளிக்காட்டுகின்றன. மணிவாசகரின் திருவாசகத்தைத் தாமே ஓலைச் சுவடியில் எழுதி, "மணிவாசகன் சொல்லச் சிற்றம்பலத்தான் கையெழுத்து"எனக் கையொப்பமிட்டுச் சுவடியுடன் மறைந்தமையும், சேக்கிழாருக்கு உலகம் போற்றும் பெரியபுராணம் இயற்றும் பொருட்டு 'உலகெலாம்' என அடி எடுத்துக் கொடுத்தருளியமையும் அனைவரும் அறிந்ததே.

**பஞ்ச சபை**

ஆடற்கடவுள், சிதம்பரம்–பொன்னம்பலம், மதுரை–வெள்ளியம்பலம், திருநெல்வேலி–தாமிர அம்பலம், குற்றாலம் –சித்திர அம்பலம், திருவாலங்காட்டில்–இரத்தின அம்பலம் ஆகிய சபைகளில் முறையே, ஆனந்தத்தாண்டவம், சந்தியா தாண்டவம், முனி தாண்டவம், திரிபுர தாண்டவம், அனுக்கிரக தாண்டவம் ஆகிய ஐவகைத் தாண்டவங்களைப் புரிகின்றான்.

சிதம்பரம் பொன்னம்பலம், பொன்னாலாகிய மேற்கூரையை உடையது. தில்லைவாழ் அந்தணர்கள், மணிவாசகரிடம் "திருவாசகத்திற்குப் பொருள் யாது?" என்று வினவ, "கூத்தப்பெருமானின் குஞ்சித பாதமே பொருள்" என விடையிறுத்து, அம்மலரடியின் ஒளியில் தாமும் இரண்டறக் கலந்தவர் மணிவாசகர். பொன்னம்பலம் உடலியற் கூறுகளைத் தன்னகத்தே கொண்டு அமைந்துள்ளது என அறிஞர்கள் கூறுவர்.

மதுரை வெள்ளியம்பலத்தில் வெள்ளியால் மேற்கூரை அமைக்கப்பட்டுள்ளது. இறைவன், பாண்டிய அரசனின் பக்திக்கு மெச்சி இடக்காலை ஊன்றி வலக்காலை மேலே தூக்கி ஆடும் நடனத்தை மதுரையில் மட்டுமே காண முடியும்.

திருநெல்வேலி தாமிர அம்பலம் ஏழு அடுக்குகளுடன் தாமிரத் தகட்டால் செய்யப்பட்டது. இங்கு இறைவன் 'அக்னிசபாபதி' என அழைக்கப்படுகின்றான்.

குற்றாலம் சித்திரசபையில் இறைவன் ஓவிய வடிவில் தாண்டவம் புரிகின்றான். உமை தாளம் கொட்ட அவளே மகிழும் வண்ணம் இறைவன் கூத்தாடினான்; இக்காட்சியைக் கண்ட நான்முகன், இறைவனின் கூத்தைச் சுவரில் எழுதி வைத்தான். இச்சபைக்கு 'ஞான சபை' என்றும் பெயருண்டு. இந்த ஓவியக் கூத்தன், பச்சை மூலிகைகளின் நிறங்களால் தீட்டப்பட்டவன் ஆவன்.

திருவாலங்காடு, இரத்தின சபையில் இறைவன் ஊர்த்துவ தாண்டவம் புரிகின்றான். காளியுடன் போட்டியிட்டு நடமிட்டு இறைவன் வென்றதைக் குறிப்பது ஊர்த்துவ தாண்டவமாகும். இங்குக் காரைக்காலம்மையார் இறைவனின் திருவடியின் கீழ் அமர்ந்திருப்பதைக் காணலாம்.

*"காளியாடக் கனலுமிழ் கண்ணுதல்*
*மீளியாடுதல் பாருமே*
*மீளியாடல் வியந்தவள் தோற்றெனக்*
*கூளிபாடிக் குளிப்பதும் பாருமே" (71)*

என்று குமரகுருபரர் தம் சிதம்பரச் செய்யுட் கோவையில் இறைவனுடைய வெற்றிக் கூத்தைப் போற்றுவதும் காணலாம்.

### பதஞ்சலியாதவர்

பதஞ்சலி, வியாக்ரபாத முனிவர்கள் காண, இறைவன் இடையறாது

ஆடுவதைப் பின்வருமாறு குமர குருபரர் குறிக்கின்றார்:

*"தம் திருவடி வந்துற்றவரைச் சீவபோதத்தை நீக்கி, சிவபோதம் தந்து தானாகச் செய்வதற்காக, இறைவன் பதஞ்சலி முனிவர்காண, தம் பதஞ்சலியாமல் ஆடுகிறார்; அதனால் என் பிறவிப் பிணி நீக்கினார்"*

என்று குமரகுருபரர் சிலேடைமொழியில் விதந்து கூறி வணங்குகிறார்.

*"சென்றவரைத் தாம்ஆக்கும் தில்லைச் சிற்றம்பலத்து*
*மன்றவரைத் தாமாக்க வல்லவர்யார் – என்றுமிலர்*
*ஆடப் பதஞ்சலியார் ஆக்கினார் என்பிறவி*
*சாடப் பதஞ்சலியார் தாம்"*

*(சிதம்பரமும்மணிக் கோவை,21)*

**முடிவுரை**

அம்பலவாணனின் அழகிய திருநடனத்தைத் தரிசிக்கும் பேறு பெற்றவர் இனிப் பிறவாத் தன்மையை எய்துவர் என்று சைவத் திருமுறைகள் கூறுகின்றன. ஆளுடை அரசாகிய அப்பர் சுவாமிகள், ஆடலரசனாகிய இறைவனின் அழகிய நடனத்தைத் தரிசிக்க மனிதப்பிறவி வேண்டுமென்று வேண்டுகின்றார்.

*"குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்*
*பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால் வெண்ணீறும்*
*இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்*
*மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே"*

என்பதும் அப்பர் தேவாரம்!

தில்லை நடராசப் பெருமானின் நடனம் மேலும் பல ஆழ்ந்த நுண்பொருள் தத்துவங்களை உள்ளடக்கியது என்பது இங்குக் குறிக்கத் தகும்.

## 16. சங்கம வழிபாடு

### முன்னுரை

அநாதியாகவே பிறந்து இறந்து எண்ணற்ற துன்பங்களில் உழல்கின்ற உயிர், இத்துன்பங்களினின்றும் விடுபட்டு பெறத் தக்க மிக உயர்ந்த பேரின்பம் 'சிவானுபவம்' ஒன்றே. இவ்வின்ப நிலையைப் பெறத்தக்க வழிகளாகச் சைவசித்தாந்தம் "சரியை, கிரியை, யோகம், ஞானம்" என்ற நான்கு நெறிகளையும் "குரு லிங்க சங்கம" வழிபாட்டினையும் கூறும். இங்குச் 'சங்கம வழிபாட்டு'ச் செய்திகள் ஆராயப்படுகின்றன.

### சங்கம வழிபாடு-சொற்பொருள்

சங்கமம்–திருக்கூட்டம்; சிவபெருமானிடம் மெய்யன்பு பூண்டு ஒழுகும் சிவனடியார் திருக்கூட்டமே 'சங்கமம்' எனப்படும். இக்கூட்டத்தினர், சிவசின்னங்கள் அணிந்திருப்பர். திருநீறு உருத்திராக்கம் என்பன புறச்சின்னங்கள்; உள்ளம் எப்பொழுதும் ஐந்தெழுத்தினை ஓதிக் கொண்டிருக்கும். இது அகச் சின்னம்! அடியாரது திருவேடம், சிவவேடத்தை எதிரொலிப்பது, உலகத்தார் சிவபெருமானது உண்மைத் தன்மையை நேரே அறிய முடியாது; எனவே, சிவன் தனக்குரிய "திருநீறு, உருத்திராக்கம், சடாமுடி", ஆகிய தன் திருவேடத்தைத் தன் அடியார்க்குத் தந்து அவர்கள் வாயிலாகத் தன் இயல்பை உணர்த்துவான். அடியாரது திருக்கூட்டத்தைச் சிவமாகப் பாவித்து வணங்குதலே 'சங்கம வழிபாடு' அல்லது 'அடியார் வழிபாடு' எனப்படும். அடி ஆர்பவரே அடியாராம் என்பது திருமூலர் கூற்று (திருமந்திரம்–2740). இறைவனது திருவடியை இடைவிடாது நினைப்பவரே அடியார்!

### அடியாரை வழிபடுவதன் அவசியம்

யாங்கணும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவன் முனைத்து நிற்கும் இடங்கள் இரண்டு; 1. திருக்கோயில் 2. உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு

ஆலயமென வாழும் அடியவர் கூட்டம்.

அடியவர்கள் திருவேடத்தாலும், பாவனையாலும், அருட்குறிவழி நின்று செய்யும் அகவழிபாட்டாலும் இவை அனைத்தையும் கடந்து நின்ற ஞான நிட்டையாலும் 'சிவமே ஆவர்' என்ற கருத்து,

*"அறிவு அரியான்தனை அறிய யாக்கையாக்கி*
*அங்கு அங்கே உயிர்க்குயிராய் அறிவு கொடுத்து அருளால்*
*செறிதலினால் திருவேடம் சிவன் உருவே ஆகும்.*
*சிவோகம் பாவிக்கும் அத்தால் சிவனுமாவர்;*
*குறியதனால் இதயத்தே அரனைக்கூடும்*
*கொள்கையினால் அரன் ஆவர்; குறியொடுதாம் அழியும்*
*நெறியதனால், சிவமேயாய் நின்றிடுவர் என்றால்*
*நேசத்தால் தொழுதிடுநீ, பாசத்தார் விடவே"*

*(சிவஞான சித்தியார், சுபக்கம், 324)*

என்ற பாடலில் விளக்கப்படுகிறது.

திருக்கோயில் போன்று சிவசொரூபத்தைப் புலப்படுத்தி நிற்பதால், அடியவர்களை 'நடமாடுங்கோயில்' என்பர் திருமூலர் (திருமந்திரம், 185 7). எல்லா உயிரிடத்தும் இறைவன் நிறைந்திருந்தாலும் கடைந்த தயிரில் வெண்ணெய் திரண்டு உருண்டு வெளிப்படுதல் போல, அடியவர் உருவில் வெளிப்பட்டுக் காட்சியளிக்கிறான்.

*"தன் உணர வேண்டித் தனது உருவைத்தான் கொடுத்துத்*
*தன் உணரத் தன்னுள் இருத்தலால்–தன்உணரும்*
*நேசத்தார் தம்பால் நிகழும் ததிநெய் போல்*
*பாசத்தார்க்கு இன்றாம் பதி!"*

என்று சிவஞானபோத உதாரண வெண்பா (76) கூறுகிறது.

**அடியார் பெருமை**

"தொண்டர்தம் பெருமை சொல்லவும் அரிதே" என்பதற்கிணங்கச் சேக்கிழார் தமது திருத்தொண்டர் புராணத்தில் 'திருக்கூட்டச் சிறப்பு' எனும் தலைப்பில் அடியவருடைய பெருமைகளை விளக்கிக் கூறுகிறார்.

*"பேச வொண்ணாப் பெருமை பிறங்கினார்"*

*(பெரியபுராணம், திருக்கூட்டச் சிறப்பு,6)*

*"ஆரங் கண்டிகை ஆடையுங் கந்தையே*
*பாரம் ஈசன் பணி அலதொன்றிலார்*
*ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்*
*வீரம் என்னால் விளம்புந் தகையதோ"*

*(பெரியபுராணம், திருக்கூட்டச் சிறப்பு, 9)*

என்ற பாடல்கள், அடியார் பெருமையை விளக்குவன.

**இறை வாக்கு**

தன்னைப் "பித்தனென்று" சுந்தரரிடம் பாடச் சொன்ன இறைவன்,

*"பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்*
*ஒருமையில் உலகைவெல்வார் ஊனமேல் ஒன்றுமில்லார்*
*அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆர்வார்*
*இருமையுங் கடந்து நின்றார் இவரை நீ அடைவாய்"*

என்று அடியவர் பெருமைகளைக் கூறியதாகச் சேக்கிழார் குறிப்பிடுவர். (பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம், 196)

*"...... பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும்*
*பரமேசுவரன் எனவே கண்டு வழிபடுக..."*

என்பர் மெய்கண்டாரும்! (சிவஞானபோதம், 12–ஆம் நூற்பா, மூன்றாமதி கரணம், மேற்கோள்)

"மும்மையால் உலகாண்ட மூர்த்தி" என்று சுந்தரர் குறிப்பிடும் 'மூர்த்திநாயனார்' (திருத்தொண்டத் தொகை–3) இறைவனுக்குரிய திருவேடங்களான 'திருநீறு, உருத்திராக்கம், சடாமுடி' இவற்றால் ஆட்சி செய்தார். பெரிய புராண நாயன்மார்களின் தொண்டின் சிறப்பை உலகிற்கு எடுத்துக் காட்ட விரும்பிய இறைவன், அடியவர் வேடத்தில்தான் வந்து உணர்த்தினார்.

எனவேதான், அடியவரைப் 'பராவு சிவர்'என்று அருணந்தியும் (சிவஞானசித்தியார் சுப்க்கம்,287) 'நடமாடும் சிவன்' என்று திருஞானசம்பந்தரும் (3:325:6) குறிக்கின்றனர். அடியவர்களின் 'மனம்,மொழி,மெய்' என்ற முக்கரணங்களும் தூய்மையாய் இருத்தலினால், இறைவன் அவர்களுடைய உள்ளத்தில் குடிகொண்டிருக்கின்றான்.

**அடியார் திருவேடச் சிறப்பு**

அடியார் திருவேடம் நம்மைக் கவர்ந்து சிவசிந்தனையில் ஆழ்த்தும்; காமக்கிழத்தியர் வடிவில் காணப்படும் ஆடை, சாந்து, அணிகலன் முதலியன காமுகரை வசீகரித்து இன்பம் செய்யுமாறு போலத் "திருநீறும், தாழ்வடமும் கல்லாடையும்" ஆகிய திருவேடம் மெய்யுணர்வுடையாரைக் காட்சி மாத்திரையானே வசீகரித்து இன்பம் செய்யும். (சிவஞான மாபாடியம் ப.490; ச.வே. சுப்பிரமணியன், ப.ஆ.)

அடியாரார் இயல்புகள்

1. "வாக்கு, மனம் காயத்தாலும் திரிகரண வழிபாடு செய்பவர்கள்: சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்–மனம்; பரமனையே பாடுவார்–வாக்கு; பத்தராய்ப் பணிவார்–காயம் (சுந்தரர் தேவாரம், திருத்தொண்டத் தொகை,10).

2. மனத்தூய்மை உடையவர்கள்: "பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்" (பெரியபுராணம், திருக்கூட்டச் சிறப்பு, 6).

3. இறைவனிடம் எல்லையில்லா அன்பு பூண்டவர்கள்: "ஈர அன்பினர்" ( பெரியபுராணம், திருக்கூட்டச் சிறப்பு,9).

4. எங்கும் இறைவனைக் காண்பவர்கள்: பரமே பார்த்திருப்பர்; பதார்த்தங்கள் பாரார்" (சிவஞான சித்தியார், சுபக்கம்311).

உள்ளும் புறமும் பரமே பார்த்திருப்பர். சிவஞானம் வாய்க்கப் பெற்ற ஞானியர்க்கு உள்ளமெல்லாம் சிவானந்தம் பெருவெள்ளமாக நிறைந்து நிற்பதோடு அல்லாமல், வெளியேயும் அதுவே பரந்து காணப்படும்; எனவே அவர்கள் ஏற்றத்தாழ்வுகளும், வேறுபாடுகளும் இல்லாமல் உலகையும் ஒரு தன்மையாகவே காண்பர்.

*"உள்ளும் புறம்பும் ஒருதன்மைக் காட்சியருக்கு*
*எள்ளும் திறமேதும் இல்"* (*திருவருட்பயன், 96*)

*"தொண்டர்களிடத்தும் வானோர் தொழுந்திரு மேனிதானும்*
*அண்டரும் கண்டிலாத அண்ணலே என வணங்கி*
*வெண் தரளங்கள் சிந்த விழிமொழி குழறிமெய்யே*
*கண்டு கொண்டிருப்பர் ஞானக்கடலமுது அருந்தினோரே"*
(*சிவப்பிரகாசம்,98*)

என்பர் உமாபதிசிவம்

அப்பர் சுவாமிகள், திருவையாற்று இறைவனை வழிபடச் செல்லும்போது ஆணும் பெண்ணுமாக அமைந்த இயற்கைப் பொருட்கள் அனைத்துமே சிவசக்தியாகக் கண்டார் (4:3) காரைக்கால் அம்மையார், நாளின் ஒவ்வொரு பொழுதிலும் இறைத்திருமேனியைக் காண்கின்றார். (காரக்காலம்மையார் அற்புதத்திருவந்தாதி,65)

*"காலையே போன்றிலங்கும்மேனி கடும்பகலின்*
*வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு – மாலையின்*
*தாங்குருவே போலும் சடைக்கற்றை மற்றவற்கு*
*வீங்கிருளே போலும் மிடறு"*

"சிவபெருமானுக்கு உதயவேளையாகிய காலை நேரத்தைப் போலச் சிவப்பாகத் திருமேனி விளங்கும்; கடும்பகலாகிய நண்பகல் வேளையைப் போல அவன் திருமேனியில் அணிந்த வெண்மையான திருநீறு விளங்கும்; மாலைநேரத்தில் வானம் தாங்கும் சிவப்பு உருவம்போல அவன் சடையின் தொகுதி தோன்றும்; மிக்க இருளைப் போல அவனுடைய நீலகண்டம் தோன்றும்" என்பது இப்பாடலின் பொருள்.

மேலும், சிவனடியார் எத்தகு துன்பநிலையிலும் மாதொருபாகரின் மலர்த்தாள் மறவார்.

*"பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும்*
*மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்"*
*(பெரியபுராணம், திருக்கூட்டச் சிறப்பு 7)*

**உயிர்களிடத்து அருள்**

சிவனையடைந்த அடியார், சிவனைப் போலவே கருணையுடையவராதலின், உயிர்களிடத்து அருளும் இரக்கமும் உடையவராவர். இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டாய் விளங்கியவர்கள் திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும், சுந்தரரும் ஆவர்!

*"கள்ளத்தலைவர் துயர் கருதித்தம் கருணை*
*வெள்ளத்து அலைவர் மிக"* *(திருவருட்பயன், 100)*

என்பர் உமாபதிசிவம்.

*"படமாடும் கோயில் பகவற்கு ஒன்றுஈயின்*
*நடமாடும் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா*
*நடமாடும் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயின்*
*படமாடும் கோயில் பகவற்கு அது ஆமே!"*

*(திருமந்திரம் 1857)*

என்று திருமூலர், அடியவர் தொண்டின் பெருமையை உணர்த்துகின்றார். சித்திர வேலைப்பாடு அமைந்துள்ள கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவற்குத் தொண்டு செய்தால், அது நடமாடுங் கோயிலான அடியவர்க்குப் போய்ச் சேராது; ஆனால் அடியவர்க்குத் தொண்டு செய்தால் அது ஆண்டவனையும் போய்ச் சேரும்.

*"அகரம் ஆயிரம் ஆரியர்க்கு ஈயில் என்*
*சிகரம் ஆயிரம் செய்து முடிக்கில்என்*
*பகரு ஞானி பகல் ஊண்பலத்துக்கு*
*நிகரிலை என்பது நிச்சயந்தானே!"*

*(திருமந்திரம், 1860)*

பேர்கொண்ட அந்தணர் தங்குமிடம் அகரமாகும். அத்தகைய 'அகரம்' அவர்க்கு ஆயிரம் ஈதலினும், கோபுரத்துடன் கூடிய திருக்கோயில்கள் ஆயிரம் அமைத்துக் கடவுள் மங்கலம் செய்வதினும், அருளொளி விளக்கத்தால் ஞானத்தின் திருவுருவாய் விளங்கும் சிவஞானிக்கு ஒரு பகலுணவு அளிக்கும் பேறு அளவில்லாததாகும். அவ்விரண்டும் இந்தப் பேற்றுக்கு ஒப்பாகா!

சிவனடியார்க்குரிய அடையாளங்கள் பத்து;

1. திருநீறும் கண்டிகையும் அணிதல்;
2. பெரியார் வழிபாடு/குரு வழிபாடு;
3. சிவபெருமானைப் புகழ்ந்து பாடுதல்;
4. சிவன் திருப்பெயர்களை/மந்திரங்களை ஓதுதல்;
5. சிவனை வழிபடல்;
6. சிவநல்வினைகளைச் செய்தல்;

7. சிவபுராணங்கேட்டல்;

8. சிவன்கோயில் வழிபாடும், ஆக்கப் பணியும் இயற்றல்;

9. சிவனடியாரிடத்தே உண்டல்;

10. சிவனடியார்க்கு அடியராய்ப் பணி செய்தல்;

உள்ளும் புறமும் பரமே பார்த்திருப்பர். சிவஞானம் பெற்ற ஞானியர்க்கு உள்ளமெல்லாம் சிவானந்தம். பெருவெள்ளமாக நிறைந்து நிற்பதோடு அல்லாமல், வெளியேயும் அதுவே பரந்து காணப்படும். எனவே அவர்கள் ஏற்றத்தாழ்வுகளும், வேறுபாடுகளும் இல்லாமல் உலகையும் ஒரு தன்மையாகவே காண்பர்.

சிவன் புகழைக் கேட்கும்போது, உள்ளத்தில் அடியவர்க்கு, விம்முதலும், நாத்தழுதழுத்தலும், மெய்ம்மயிர் சிலிர்த்தலும், கண்ணீர் அரும்புதலும், பேச்சுவராமையும், மெய்ம்மறத்தலும் ஆகிய உணர்ச்சிகள் நிகழும்.

## அடியார் வழிபாட்டின் வகைகள்

அறுபான்மும்மை நாயன்மார்களில், மெய்ப்பொருள் நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், புகழ்ச் சோழர், ஏனாதிநாதர் முதலியோர், அடியவர் திருவேடத்தை வழிபட்டும்; சிறுத்தொண்டர், இளையான்குடிமாறர் முதலியோர் அடியவர்க்கு உ முதளித்தும்; திருநீலகண்டர், அமர்நீதி நாயனார், இயற்பகை நாயனார் முதலியோர் அடியார் வேண்டும் பொருள் கொடுத்தும்; எறிபத்தர், சத்திநாயனார் முதலியோர் அடியார்க்கு இடையூறு செய்தவரைத் தண்டித்தும், இவ்வாறு அடியார் வழிபாடு செய்து முத்தி பெற்றவர்கள் ஆவர். இத்தகைய அருளாளர்களுக்கே தாம் அடிமை பூண்டு விட்டதாகத் திருமூலர் கூறுகிறார்.

*"அடியார் அடியார் அடியார்க் கடிமைக்கு*
*அடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்"*

*(திருமந்திரம் 2624)*

## முடிவுரை

உடலோடு நிற்கும்போதே, திருவருளைப் பெற்றுச் சிவனாகவே நிற்கும் பேறுபெற்ற இவர்களைச் 'சீவன் முத்தர்' எனவும், 'அணைந்தோர்' எனவும்

கூறுவர். இத்தகைய சிறப்புப் பெற்ற அடியாரை வணங்குவதால் ஏற்படும் பயனை மெய்கண்டார் பின்வருமாறு கூறுவர்:

*"மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்*
*சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை அறப்பித்துப்*
*பத்தர் இனத்தாய்ப் பரன் உணர்வினால் உணரும்*
*மெய்த்தவரை மேவா வினை!"*

*(சிவஞானபோதம், உதாரணவெண்பா,75)*

'அடியார் வழிபாடு', வாழ்வில் பெறுதற்கரிய முத்திப் பேற்றைத் தரும் என்பர் மனவாசகங் கடந்தார்.

*"குருலிங்க வேடம் எனக்கூறில் இவை கொண்டார்*
*கருவொன்றி நில்லார்கள் காண்"*

*(உண்மை விளக்கம்,51)*

என்பது அவர் வாக்கு! எனவே சைவப் பெருமக்கள் அனைவரும் சிவவழிபாட்டோடு அடியார் வழிபாடும் மேற்கொண்டு பிறவாப் பெரும் பயன் எய்துவார்களாக!

## 17. திருநீற்று நெறி

### முன்னுரை

சுந்தரமூர்த்தி சுவாமிகள், சிவனடியார்களுக்கெல்லாம் தான் அடியவன் என்று கூறும்போது "மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்" என்று பாடுகின்றார். 'மும்மை' என்பது திருநீறு, உருத்திராக்கம், சடாமுடி ஆகிய சைவ சமயச் சின்னங்களைக் குறிக்கும்.

### முதன்மை பெற்ற மூன்று

இறையருளால் மதுரை மன்னனாக ஆக்கப்பட்ட மூர்த்தி நாயனார், திருநீறே தனக்குச் செய்யும் முடிசூட்டாகவும், சிவனின் அடையாளமாகிய உருத்திராக்கமே தனக்கு நல்ல அணிகலனாகவும், இறைவனது அடையாளமான மொய்த்த சடையே அரச முடியாகவும் இருக்க வேண்டும் என்று உறுதிப்பட உரைக்கின்றார். மேலும் பாவங்கள் மாற உதவும் திருநீறும், உயர்ந்த உருத்திராக்கமான கண்டிகையும், கொண்ட சடையும் என்ற முதன்மை பெற்ற மூன்றினால் உலகை ஆண்டார். புறச்சமயத்தவரான சமணர் விலகிச் செல்லவும், திருநீற்று நெறி உலகிற் செழிக்கவும் சைவசமயம் ஓங்கி நிலைபெறுமாறும் மூர்த்தி நாயனார் அரசாண்டார்.

*"நிலவுந் திருநீற்று நெறித்துறை நீடுவாழ*
*உலகெங்கும் நிரம்பிய சைவம் உயர்ந்துமன்ன"*

அரசாட்சி நடைபெற்றதாகச் சேக்கிழார், மூர்த்தி நாயனாரின் ஆட்சிச் சிறப்பைப் போற்றுகின்றார்.

### திருநீற்று நெறி

'திருநீற்று நெறி' என்பது மீண்டும் இவ்வுலகில் வந்து பிறவாத வீட்டு நெறியைக் குறிக்கும். அதுவே சைவநெறி. ஆச்சாள்புரம் ஆலயத்திலுள்ள அம்மையின் பெயர் திருவெண்ணீற்று உமையம்மை என்பதாகும். பரசமயக் கோளரியான திருஞான சம்பந்தர் "திருநீற்றின் பெருமை உணர்த்தவே

வந்து தோன்றினார்'' என்கின்றார் சேக்கிழார். ''தூய திருநீற்றுநெறி எண்டிசையும் தனிநடப்பச் சிவம் பெருக்கும் பிள்ளையார் அவதாரம் செய்தார்'' என்பது சேக்கிழார் வாக்கு. மேலும் திருநீற்றுச் சந்தனம் பூண்ட திருஞான சம்பந்தரைப் 'பூதிசாதனர்' என்று குறிக்கின்றார். (பூதி–செல்வம்; வி/பூதி–மேலான செல்வம்) ''அருத்தமதாவது நீறு'' என்பது திருஞானசம்பந்தரின் திருநீற்றுப் பதிகம். அருத்தம்–செல்வம்.

## மூன்று கரணங்களும் தூய்மை பெற!

சிவபெருமானை நினைந்து திருவைந்தெழுத்தை ஓதித் திருநீற்றினை நெற்றியில் இட, நம் மனம், மொழி, மெய் ஆகிய மூன்று கரணங்களும் தூய்மைபெறும் என்பது சான்றோரின் அனுபவமாகும். மேலும் நம் பிறவிக்கு வித்தாகும் இருவினைகளும் வெந்து சாம்பராகும்.

*''மந்திரம் நமச்சிவாய ஆகநீறணியப் பெற்றால்*
*வெந்தலும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்டன்றே''*

என்பதும் அப்பர் திருவாக்கு.

சரியைக்குரிய திருவெண்ணீற்றை அணியும்படி செய்து புனிதமான உயர்நெறியை இறைவன் தனக்கு அருளியதாக மணிவாசகர் கூறுகின்றார்.

*''சுண்ண வெண்ணீறு அணிவித்துத் தூயநெறியே சேரும் வண்ணம்*
*அண்ணல் எனக்கருளியவாறு ஆர்பெறுவார்............''*
*(அச்சோப்பதிகம் 4)*

## திருநீற்றுப் பதிகம்

ஆளுடைபிள்ளையார், திருவாலவாய் இறைவனின் திருநீறே நிலையான மந்திரமும் மருந்துமாகி, பாண்டியனின் வெப்பு நோயைத் தீர்ப்பதாகும் என்று கருதி, வேதங்களின் கருத்தைப் போற்றிக் கூறுகின்ற ''மந்திரமாவது நீறு'' என்ற பதிகத்தைப் பாடி, மன்னனின் உடலில் திருநீற்றைப் பூச வெப்புநோய் நீங்கியது.

*''.......... வெப்பை ஆலவாய் அண்ணல்நீறே*
*மன்னு மந்திரமுமாகி மருந்துமாய்த் தீர்ப்பது''*
*(பெரியபுராணம், திருஞானசம்பந்தர் புராணம்–764)*

என்பது பெரியபுராணம்.

## திருநீற்றின் பெருமை

திருநீற்றின் பெருமை குறித்து ஆளுடைபிள்ளையார் பலபடப் போற்றுகின்றார். மந்திரம், உச்சரிப்பவரைக் காப்பது போலத் திருநீறும் தன்னை அணிபவரைக் காத்து அச்சம் நீக்கி நற்பயனை அளிப்பது; தேவர்களைக் காட்டிலும் மேலானதாக விளங்கி, அணிபவர்க்கு அழகைத்தரும் நீறு, அனைவராலும் வணங்கப் பெறும் பொருளாக உள்ளது.

## வேதத்தால் போற்றப்படுவது நீறு

நான்மறைகளாலும் போற்றப்படும் திருநீறு; உலக வாழ்வில் ஏற்படும் பிணி, துன்பம், கருவிகளின்வழி வரும் துயரங்கள் இவற்றைப் போக்கி நல்லறிவு தருவது; அறியாமை, பழி, சோம்பல் முதலிய புன்மைகளை நீக்குவது; உண்மைப் பொருளாய் எக்காலமும் நிலைத்திருப்பது.

## முத்தி தருவது நீறு

திருநீறு அணிவதால், ஐம்புலன்களும் அடங்கி, உயிர் இறைவழி நிற்பதால் முத்தி இன்பத்தைப் பெற வழி பிறக்கிறது. முற்றும் துறந்த முனிவரும் சிவனடியாரும் போற்றிப் புகழ்ந்து அணியத்தக்கதாய் உள்ளது திருநீறு.

*"முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்"*

என்று வணங்குவர் சுந்தரர்.

திருநாவுக்கரசரும், "நெற்றியில் திருவெண்ணீறு தரித்து விளங்கும் சீலர்களைக் கண்டதும் உகந்து அவர்க்கு அடிமை பூண்டு ஈசனின் அருட்திறத்தைப் போற்றி அவ்அடியவர்க்குத் தொண்டு செய்யும் அன்பர்களின் நெஞ்சினுள், கன்றாப்பூரில் மேவும் நடுதறி நாதரைக் காணலாம்" என்று உவந்து போற்றுவர்.

*"எவரேனுந் தாமாக விலாடத்திட்ட*
*திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி*
*உவராதே யவரவரைக் கண்ட போதே*
*உகந்தடிமைத் திறம் நினைந்தங்கு வந்து நோக்கி*
*இவர் தேவர் அவர்தேவ ரென்று சொல்லி*
*இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்*

*கவறாதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே*
*கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே"*
*(ஆறாம் திருமுறை–பாடல் எண் : 613)*

திருநீறு, தன்னை அணிபவர்க்கு மனக்கவலை போக்கி, வல்லமையையும், நல்லறிவையும், சிவஞானத் தெளிவையும் தந்து, தீவினைகளை நீக்கிச் சிவகதியைச் சாரவைத்துப் பேரின்பத்திற்கு வழிகாட்டுகிறது.

*"கங்காளன் பூசும் கவசத்திருநீற்றை*
*மங்காமல் பூசி மகிழ்வரே யாமாகில்*
*தங்கா வினைகளும் சாரும் சிவகதி*
*சிங்கார மான திருவடி சேர்வரே"*
*(திருமந்திரம், 1666)*

## சான்றோர் அணியும் திருநீறு

புண்ணியம் செய்த சான்றோருக்கே திருநீறு அணியும் பேறு கிட்டுவதாகும். அதில் தெய்வம் தங்கியிருப்பதால் "திரு" என்ற அடைமொழி பெற்றுள்ளது. மேலும் "திருவளர் நீறு" என்று சேக்கிழார் புகழ்வதும் ஈண்டு எண்ணத்தகும்.

## இறைவனும், திருநீறும்

திருநீற்றின் சிறப்பையுணர்த்தும் சிறிய பெருந்தகையார் "எயிலது அட்டது நீறு" என்று கூறுகின்றார். எயில்–முப்புரம்; முப்புரத்தை எரித்தது திருநீறு; இறைவனாகிய ஈசனே திருநீற்று வடிவத்தில் நின்று இவ் அருட்செயலைப் புரிந்தார் என்று கூறி ஈசனும் திருநீறும் வேறல்ல என்ற உண்மையை உணர்த்துகின்றார்.

மேலும், "பராவணமாவது நீறு" என்பதால் பராசக்தியின் பொலிவு கொண்டது நீறு; பரையின் வரலாறு திருநீறு என்று சான்றோர் போற்றுவர். (பரை–பராசக்தி)

மேலும் திருமாலும் பிரமனும் அறிய இயலாத வண்ணம் உள்ளது திருநீறு என்பதால் இறைவனின் திருவருட்செயல் தன்மையும் திருநீற்றின் தன்மையும் ஒன்றேயாக, திருஞானசம்பந்தர் உரைத்தலும் இங்கு எண்ணத்தகும். "வெண்ணீற போற்றி" என்பர் மணிவாசகர். மேலும் "மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான்" என்றும்; "பவளத்தின்

கோள்மேற் சேர்ந்திலங்கு வெண்ணீற்றன்" என்றும் திருமுறைகள் போற்றுவதால் இறைவன் திருமேனியில் திகழும் பெருமை பெற்றது திருநீறு என்பது தெளிவாகிறது.

**யோகிகள் போற்றும் திருநீறு**

சிவன் நெற்றியில் பூசப்படும் திருநீறானது, ஆணவத்தின் காரியங்களாகிய விகற்பம், கற்பம், குரோதம், மோகம், கொலை, அஞர் (சோம்பல்) மதம், நகை ஆகியவற்றினின்றும் நீங்கியவர்கள் ஏத்திப் போற்றத்தக்க சிறப்புடையதாகும். கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறுமை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு ஆகிய எட்டு இதழ்கள் பொருந்திய தாமரை மலராகத் தம் உள்ளத்தைப் பாவித்து இறைவனை யோகத்தில் (யோகநிலை) வழிபடும் ஞானிகள் பூசித்துப் போற்றத்தக்கது திருநீறு ஆகும். இறைவனைத் தியானித்து விரதம் பூண்டு வணங்குகின்ற அடியவர்களுக்கு அருங்கலமாக விளங்கிச் சிறப்பினை நல்குவது திருவெண்ணீறு ஆகும்.

"வெந்தநீறு அருங்கலம் விரதிகட்கெலாம்" என்பதும் அப்பர் தேவாரம்.

**திருநாவுக்கரசரது வாழ்வில் திருநீற்றின் சிறப்பு**

சமண சமயத்தில் "தருமசேனர்" பட்டம் பெற்று விற்பன்னராய்த் திகழ்ந்த மருள்நீக்கியாருக்கு அவர் தமக்கையார் திலகவதியாரின் வேண்டுகோளுக்கிணங்கி இறைவன் சூலை நோயைத் தந்தார்; சமணர்களின் மந்திரங்களும் கைவிட்டுவிட இறுதியில் தம் தமக்கையாரின் திருவடிகளில் வீழ்ந்து பணிந்தார். தமக்கையாரும் திருவைந்தெழுத்தை ஓதித் திருவதிகை வீரட்டானத்து இறைவனின் திருநீற்றைத் தமது தம்பியாரின் கரங்களில் அளித்தார்.

*"திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப்*
*பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்*
*குருவார அணிந்து தமக்குற்ற விடத்துய்யுநெறி*
*தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம் வந்தார்"*

*(பெரியபுராணம், திருநாவுக்கரசு நாயனார் புராணம், 67)*

திருநீற்றைத் தம் உடல் முழுவதும் அணிந்து கொண்டு

'கூற்றாயினவாறு' எனப் பதிகம் பாடிப் பணிய இறையருளால் நோய் நீங்கப் பெற்றார்.

### திருநீறு அணிவதன் இன்றியமையாமை

"நீறில்லா நெற்றி பாழ்" என்பது பழமொழி. திருநீறு அணியாத நெற்றி சுடுகாடு போன்றது; எனவே சைவர்கள், கண்டிப்பாகத் திருநீறு அணிதல் வேண்டும். 'சிவசிவ' என்றோ 'ஓம் நமசிவாய' என்றோ கூறியபடி அண்ணாந்து வலக்கையின் நடுவிரல் மூன்றினாலும் எடுத்துக் கீழே விழாதபடி நெற்றியில் பூசுதல் வேண்டும். ஒரு விரலாலோ, ஒரு கையாலோ திருநீறு வாங்கிப் பூசுதல் தகாது. இருகடைப் புருவ எல்லை வரையும் தரித்தல் வேண்டும். அந்த அளவில் கூடினாலும் குறைந்தாலுங் குற்றமாகும்.

### விபூதி தாரண வகைகள்

விபூதி தரிக்கும் முறை உத்தூளனம், திரிபுண்டரம் என இருவகைப்படும். உத்தூளனம் என்பது அப்படியே எடுத்துப் பரவப் பூசிக் கொள்ளுதல் ஆகும். திரிபுண்டரம் என்பது மூன்று கோடுகளின் தொகுதியாக விளங்குமாறு அணிவதாகும். திரிபுண்டரம் தரிக்கதக்க இடங்கள் 16 (பதினாறு). சிரம், நெற்றி, மார்பு, கொப்பூழ், முழந்தாள்கள் இரண்டு, புயங்கள் இரண்டு, முழங்கைகள் இரண்டு, மணிக்கட்டுகள் இரண்டு, விலாப்புறம் இரண்டு, முதுகு, கழுத்து ஆகிய இடங்களாகும். இறைவன் முன்பும், குரு, சிவனடியார் முன்பும் திரும்பி நின்று தரித்தல் வேண்டும். திரிபுண்டரம் ஒவ்வோர் அங்குலம் அளவு இடைவெளி உள்ளதாய் ஒன்றையொன்று தொடாமல் இருக்க வேண்டும்.

### திருநீறு தரிப்பதால் உண்டாகும் பலன்கள்:
### வாரியார் சுவாமிகள் கூற்று

"உச்சியில் தரிப்பதால் கண்டக்த்திற்கு மேல் செய்த பாவம் நீங்கும்; நெற்றியில் தரிப்பதால் நான்முகனாகல் எழுதப்பட்ட கெட்ட எழுத்துக்களின் தோஷம் நீங்கும்; கண்டத்தில் தரிப்பதால் விலக்கப்பட்ட உணவை உண்ட குற்றம் நீங்கும்; நாபியில் தரிப்பதால் பீஜத்தினால் செய்த விஷயதோஷம் நீங்கும்; முழங்கால்களில் தரிப்பதால் கால்களால் செய்த பாவம் நீங்கும்!"

## திருநீறு உணர்த்தும் தத்துவம்

திருநீறு என்பது நல்ல பசுவின் சாணத்தைச் சிவாக்கினியில் இட்டு மந்திரங்கள் சொல்லி, சுடுவதால் கிடைக்கும் திருச்சாம்பலாகும். விபூதி, பசிதம், பஸ்பம், க்ஷாரம், ரக்ஷை என்பன திருநீற்றின் வேறு பெயர்களாகும்.

விபூதி – விசேஷமான ஐசுவரியம்

பசிதம் – ஒளியைத் தருவது

பஸ்பம் – பாவங்களை நீக்குவது

க்ஷாரம் – ஆபத்தை நீக்குவது

ரக்ஷை – அச்சம் நீக்கிக் காப்பது

(க.வச்சிரவேல் முதலியார், சைவமும் வைணமும், ப.74)

உயிரின் சகசமலமாகிய அழுக்கு (உடன் தோன்றிய ஆணவமலம்) சிவஞானத்தால் எரிக்கப்பட்டு உயிர் தூய்மை பெற்று, சிவப்பேற்றிற்குத் தகுதி உடையது என்பதன் அறிகுறியே திருநீறு அணிவதன் கருத்தாகும். இதனைத் 'திருநீற்றுக் காப்பு' என்பர்.

"தராவணமாவது நீறு" என்பது திருநீற்றுப் பதிகம். 'தரா' எனப்படும் பொன் போன்ற உயர்ந்த உலோகத்தால் செய்யப்படும் பொருள்கள் பகுக்கப்படும்போது யாவற்றிலும் நீக்கமறக் கலந்து நிற்றல் போலத் திருநீற்றின் செம்மையும் நீக்கமறத் திகழ்ந்து அண்ணித்து நிற்கும் இயல்புடையது. உயிருக்கு நுகர் பொருள், கருவி கரணங்களாக விளங்கும் தத்துவக் கோட்பாடுகளாகவும் அதன் மெய்ம்மையாகவும் திருநீறு விளங்குகிறது.

## திருநீற்றான் மதில்

பஞ்சபூத தலங்களுள் இறைவன் நீர் வடிவில் அருள்கின்ற தலம் திருவானைக்கா ஆகும். சம்புகேசுவரர் அகிலாண்டேசுவரி திருக்கோயிலின் வெளிச்சுற்றின் திருமதிலை ஈசனே சித்தர் வடிவில் எழுந்தருளித் திருநீற்றையே கூலியாகக் கொடுத்து எழுப்பியதாகக் கூறுவர். இதுவே "திருநீற்றான் மதில்" எனப்படும்.

### பூசுநீறுபோல் உள்ளம்

சேக்கிழார், சிவனடியார் இயல்பு பற்றிக் கூறும்போது குற்றமில்லாத உருத்திராக்கம் பூண்ட தம் திருமேனியில் பூசிய திருநீற்றின் தூய்மை போலவே, உள்ளத்திலும் புனிதத் தன்மை வாய்ந்தவர்கள் என்று அடியவரின் மாசற்ற உள்ளத்திற்குத் தூய திருநீற்றின் நிறத்தை ஒப்புமை கூறி விளங்க வைத்தார்.

*"மாசிலாத மணிதிகழ் மேனியில்*
*பூசுநீறுபோல் உள்ளும் புனிதர்கள்"*

*(திருகூட்டச் சிறப்பு 6)*

### உடல்நோய்க்கு மருந்து

இன்றும் கூட சைவர்கள் தம் இல்லங்களில் குழந்தைகளுக்குக் காய்ச்சலோ வேறு உடல் நலக்குறைவோ ஏற்படும்போது திருநீற்றுப் பதிகம் கூறித் திருநீறு இடுதலைக் காணலாம்.

மேலும் திருஞான சம்பந்தரின் "அவ்வினைக்கு இவ்வினையாம்" பதிகத்தைக் கூறி, "செய்வினை வந்து எமைத் தீண்டப் பெறாத் திருநீல கண்டம்" என்று பாடித் திருநீறு இட்டால் எவ்விதமான தீமைகளும் நம்மை வந்து தாக்காது என்பது திண்ணம்.

இன்றும், மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தில், முக்குறுணி விநாயகரைத் தரிசிக்கச் செல்லும் வழியில், திருஞானசம்பந்தர், கூன்பாண்டியனின் வெப்புநோய் தீர்த்த வரலாற்றுச் சித்திரமும், திருநீற்றுப்பதிகமும் வரையப்பட்டுள்ள சுவரில் உள்ள மாடத்தில் திருக்கோயில் மடப்பள்ளிச் சாம்பல் தினமும் கொட்டப்படுகிறது. திருக்கோயிலுக்கு வரும் பக்தர்கள், அச்சாம்பலை ஆலவாயான் திருநீறாகப் பாவித்து, தம் உடல் நோய்களுக்கு மருந்தாக உடலெங்கும் பூசிக் கொள்கிறார்கள். அங்கயற்கண்ணி உடனுறை ஆலவாய்ச் சொக்கன் அருளால் நோய்கள் நீங்கப்பெற்று ஆரோக்கிய வாழ்வு பெறுகிறார்கள்.

### முடிவுரை

திருநீறு இறைச் சின்னமாக விளங்கி ஆன்மாக்களின் இம்மை மறுமை வாழ்வுக்கும், அம்மை வாழ்வாகிய முத்திக்கும் வழிகாட்டுகிறது.

## 18. பெரியபுராணத்தில் வன்தொண்டு!

### முன்னுரை

எவராலும் காண்பதற்கரியனாய் நிற்கும் இறைவன், தன்னிடம் அன்பு செய்வார்க்கு எளிதில் வசப்படுகிறான். தவத்தில் ஒழுகி உருகுவார் உள்ளத்தினுள் அவ்வுருவாய் நிலைபெற்று அருள்கின்றான். இறைவனால் விரும்பு ஆட்கொள்ளப்பட்டவர்கள், அவனது அடியார்கள்! இறைவன்மீது கொண்டுள்ள பேரன்பினால், தம் மேனியில் மயிர்புளகமும், உடல்நடுக்கமும், மனநெகிழ்வும் உடைய அவர்கள், இறைத் தொண்டையே தம் கடமையாய் ஏற்று வாழ்பவர்களாவர்!

### மெல்வினையும் வல்வினையும்

இறைவனை நோக்கிச் செய்யப்படும் தவம், 'கிரியை யோகம்' என்றும், அதன் பயன் 'ஞானம்' என்றும் சிவஞானபோதம் கூறும். திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் இறையருள் கருதி மேற்கொள்ளப்படும் தவத்தை, 'மெல்வினை, வல்வினை' என்று இரண்டாகப் பிரிக்கின்றார்.

> *"மெல்வினையே என்ன வியனுலகில் ஆற்றரிய*
> *வல்வினையே என்ன வரும்"*
> *(திருக்களிற்றுப் படியார்–16)*

என்பது அவர் வாக்கு!

### மெல்வினை

இறைவழிபாட்டை மேற்கொள்ள ஆகமங்கள் விதித்துள்ள முறைப்படி பூவும் நீரும் திருவமுதும் ஆகியன கொண்டு, பூசையின் போது நிகழ்த்தப்படும் 'பஞ்சசுத்தி' முதலிய வழிபாட்டு முறைகளையும் பிறவற்றையும் 'மெல்வினை' என்று கூறுகின்றார் அவர்! 'பஞ்சு சுத்தி' எனப்படுவன; பூதத்தூய்மை, இடத் தூய்மை, இலிங்கத் தூய்மை மந்திரத் தூய்மை, திரவியத் தூய்மை (பொருள் தூய்மை) என்பனவாம்.

இம் முறைகள் 'சரியை கிரியை யோகம் ஞானம்', இவற்றுள் அடங்கும்.

*"ஆதியை அர்ச்சித்தற்கு அங்கமும் அங்கங்கே*
*தீதில் திறம்பலவும் செய்வனவும் வேதியனே*
*நல்வினையாம் என்றே நமக்கும் எளிதானவற்றை*
*மெல்வினையே என்றது நான் வேறு"*

*(திருக்களிற்றுப் படியார்–17)*

**வல்வினை**

உலகில் செயற்கரிய செயல்களை 'வல்வினை' என்று கூறுகின்றார். 'சிவத்தொண்டே உயிர் மூச்சு' என வாழ்ந்து வந்த சிறுத்தொண்ட நாயனார், வயிரவர் வேடத்தில் வந்த அடியவருக்காக, தாம் பெற்ற மகனைத் தம் கைகளினாலேயே அரிந்து கறியமுது சமைத்துத் தந்தார்; தாம் வணங்கும் இறைவன் பொருட்டுக் கொடுந்தொழிலும் செய்ய முற்படுகின்றார். இத்தகு அரிய செயல்களை 'வல்வினை' என்று உய்ய வந்த தேவநாயனார் கூறுகின்றார்.

*"வரங்கள் தரும் செய்ய வயிரவர்க்குத் தங்கள்*
*கரங்களினால் அன்று கறியாக்க–இரங்காதே*
*கொல்வினையே செய்யும் கொடுவினையே ஆனதனை*
*வல்வினையே என்றது நான் மற்று"*

*(திருக்களிற்றுப் படியார்–18)*

சேக்கிழார், சிறுத்தொண்டரின் செயற்கரிய வினையைக் குறிப்பிடும் போது,

*"ஆறு முடிமேல் அணிந்தவருக் கடியார்என்று கறியமுதா*
*ஊறிலாத தனிப்புதல்வன் தன்னை அரிந்தங்கு அமுதூட்டப்*
*பேறுபெற்றார்.........."*

*(சிறுத்தொண்ட நாயனார் புராணம்–64)*

தாம் பெற்ற ஒரே மகனை வெட்டி அடியவருக்குக் கறி சமைக்கும் போதும் கணவனும், மனைவியும் மனவேறுபாடோ துன்பமோ அடையவில்லை. மாறாக அகமலர மகிழ்ந்து இவ்வரிய செயலைச் செய்தனர்.

**முடிவிலா இன்ப அன்பு**

பூசும் திருநீறுபோல் உள்ளும் புனிதர்கள் அடியவர்கள்; அவர்களுள்

ஒருவரான கண்ணப்பர், செயற்கரிய செய்தவர். விலங்குகளைக் கொன்று உண்ணும் கொடுந்தொழிலை மேற்கொண்டிருந்த வேடராகிய திண்ணனார், தாம் எல்லையில்லா அன்பு பூண்டிருந்த குடுமித் தேவருடைய திருக்கண்ணில் வந்த குருதியைத் தம் கண்ணை இடந்து அப்பி நிறுத்திய பேறு பெற்றவர். இறைவரது ஒரு கண்ணில் வழிந்த குருதி, கண்ணப்பர் தன் கண்ணை இடந்து அப்பவும் நின்றது; அதன்பின், இறைவரது அடுத்த கண்ணிலும் குருதி வழியத் தொடங்கியது. அதனையும் நிறுத்தத் தம் மற்றொரு கண்ணையும் இடந்து இறைவரது கண்ணில் பொருத்த முனைந்தபோது காளத்தியப்பர், தம் கையால் திண்ணனாரின் கையைப் பிடித்து– "நில்லு! கண்ணப்ப நில்லு!" என்று மும்முறை கூறி "ஒப்பில்லாதவனே! என் வலப்பக்கத்தில் அமர்வாயாக!" என்று நிலைபெற்ற திருவருளைச் செய்தார்.

> *"இதற்கினி என்கண் அம்பால் இடந்தப்பின் எந்தையார்கண்*
> *அதற்கிது மருந்தாய்ப் புண்ணீர் நிற்கவும் அடுக்கும் என்று*
> *மதர்த்தெழும் உள்ளத்தோடு மகிழ்ந்து முன் இருந்து தங்கண்*
> *முதற்சரமடுத்து வாங்கி முதல்வர்தம் கண்ணில் அப்ப"*
> ***(கண்ணப்ப நாயனார் புராணம்–178)***

என்பது பெரியபுராணம்.

### பாதகத்தைச் செய்திடினும் பணி ஆக்கிடும்

தாம் செய்த சிவவழிபாட்டுக்கு ஊறுவிளைவித்த தன் தந்தையின் காலை மழுவால் துணித்தார், விசாரசருமர். அந்த அந்தணச் சிறுவர், அந்த உடலுடனேயே சிவபெருமானின் திருமகனாக ஆனார். சிவஞானியர் செய்கின்ற நன்மை தீமைகள் யாருக்கு ஏற்படினும், அவருடைய வினைப்பயனைச் சிவஞானியர் வழியாகப் பெற்று நுகர்ந்தார் என்பதால் சிவஞானியர்க்குத் தாம் செய்யும் நன்மை தீமைகளின் வழி வினைப் பயன் நேராது. சிவபெருமான் திருவடிகளுக்கு அன்பு செய்பவர் செய்யும் செயல்கள், தவமேயாகி அறமாகும். விசாரசருமர், தாம் செய்த சிவப்பணி காரணமாக இறைவனால் 'சண்டீசபதவி' தரப்பட்டு ஆட்கொள்ளப்பட்டார்.

> *"வந்து மிகைசெய் தாதைதாள்*
> *மழுவாய் துணித்த மறைச் சிறுவர்*
> *அந்த உடம்பு தன்னுடனே*

*அரனார் மகனார் ஆயினார்*
*இந்த நிலைமை அறிந்தாரார்*
*ஈறிலாதார் தமக்கன்பு*
*தந்த அடியார் செய்தனவே*
*தவமாம் அன்றோ சாற்றுங்கால்"*
*(சண்டேசுர நாயனார் புராணம் 59)*

இக்கருத்தையே அருணந்தி சிவாசாரியார் கூறுவதும் எண்ணத்தக்கது.

*"அரன் அடிக்கு அன்பர் செய்யும் பாவமும் அறமது ஆகும்*
*பரன் அடிக்கு அன்பு இலாதார் புண்ணியம் பாவம் ஆகும்*
*வரம் உடைத்தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி*
*நரரினில் பாலன் செய்த பாதகம் நன்மையாய்த்தே"*
*(சிவஞான சித்தியார், 119)*

**பிறவிப் பிணி அறுத்தவர்**

'அரிவாட்டாய நாயனார்', இறைவனுக்குத் திருவமுது எடுத்துச் செல்லும் வழியில், பல நாள் பட்டினியிலிருந்த களைப்பினால், கால் இடறி நிலத்தில் வீழ்ந்தார். திருவமுதுப் படிக்கானபொருள்கள் நிலவெடிப்பில் சிந்தித் சிதறின. மனம் வருந்திய நாயனார், தம் கையிலிருந்த அரிவாளால் தம் பிறவிப் பிணியை அறுப்பார் போலத் தம் கழுத்தையரியத் தொடங்கினார். அந்நிலையில் சிவபெருமானின் திருக்கரம், நில வெடிப்பினின்றும் வெளிப்பட்டு, அரிவாளைப் பிடித்திருந்த நாயனாரின் கையைப் பிடித்துத் தடுத்தது. மேலும் இறைவன் திருவமுது செய்தருளினார் என்பதற்கு அடையாளமாக மாவடுவைக் கடித்துண்ணும் 'விடேல் விடேல்' என்னும் ஓசையும் நாயனார் காதில் ஒலித்தது. இறைவன் மாதொரு பாகனாகத் தோன்றி, அடியவரை ஆட்கொண்டான்.

*"மாசறு சிந்தை அன்பர் கழுத்தரி அரிவாள் பற்றும்*
*ஆசில்வண் கையை மாற்ற அம்பலத்தாடும்*
*வீசிய செய்யகையும் மாவடு விடேல் விடேலென்*
*னோசையும் கமரில் நின்றும் ஒக்கவே எழுந்த அன்றே"*
*(அரிவாட்டாய நாயனார் புராணம்–18)*

**மூர்த்தியாரின் சிவப்பணி**

இறைவனிடத்துக் கொண்ட பேரன்பே தமது வடிவாகக் கொண்ட

மூர்த்தியார், நாள்தோறும் இறைவனது திருமஞ்சனத்துக்கும், மெய்ப் பூச்சுக்கும் சந்தனம் அளித்து வந்தார். தமது சிவத் தொண்டுக்குப் புறச்சமய மன்னனால் இடையூறு நேர்ந்த போது மனம் வருந்திச் சந்தனக்கட்டைக்குப் பதில், தம் முழங்கையினையே வைத்துத் தோலும் நரம்பும் எலும்பும் சிதைந்து தேய, குருதி ஒழுகுமாறு தேய்த்தார்.

*"நட்டம் புரிவாரணி நற்றிரு மெய்ப்பூச்சின்று*
*முட்டும் பரிசாயினுந் தேய்க்கும் கை முட்டாதென்று*
*வட்டந்திகழ் பாறையின் வைத்து முழங்கை தேய்த்தார்*
*கட்டும் புறந்தோல் நரம்பென்பு கரைந்து தேய"*
*(மூர்த்தி நாயனார் புராணம்–20)*

பெருங்கருணையே தனது உருவமாகக் கொண்ட இறைவன், அதனைக் கண்டு பொறாது, மூர்த்தியாரையே மன்னராக்கி, அருள்புரிந்தார். மூர்த்தி நாயனாரும், 'திருநீறு' 'உருத்திராக்கம்', 'சடை' என்ற முதன்மை பெற்ற மூன்றினால் உலகை ஆண்டு, சிவபெருமானுடைய கழலணிந்த திருவடிகளை அடைந்தார்.

**முடிவுரை**

இறைவனுக்கு அடிமை பூண்ட அடியவருடைய வடிவம் முழுவதும் இறைவனிடம் கொண்ட அன்பு மயமேயாகும். அவர் அறியும் அறிவு முழுமையும் இறைவனையறியும் அறிவேயாகும். அடியவரின் செயல் எத்தகையவாயிருப்பினும் அவை இறைவனுக்கு இனியனவாகும். இத்தகைய 'வன்தொண்டு' புரிந்த அடியவர்களின் வரலாற்றையும் சேக்கிழாரின் பெரியபுராணத்தில் காணலாம்.

# 19. திருவிடைமருதூர் இறைவனின் திருத்தோற்றப் பொலிவு

## முன்னுரை

ஞானமே வடிவாய் விளங்கும் இறைவன், உயிர்கள் தன்னைஉணர்ந்து வழிபட்டு உய்யும் பொருட்டு, 'உருவம், அருவுருவம், அருவம்' என மூவகைவுருக் கொள்கிறான். இவற்றுள் இடப வாகனத்தில் அம்மையுடன் வீற்றிருக்கும் அருள்வடிவம், சைவர்களால் போற்றி வணங்கத்தக்கதாகும்.

## அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்

இறைவன், கல்லால் மரத்தின் கீழிருந்து, உயிர்களுக்கு வீடு பேறு அருளுதற்கு முன், உயிர்கள் உலகபோகத்தை நுகர்தற் பொருட்டுச் சத்தியும் சிவமுமாய் அம்மையப்பராக, அருளுகின்றான். உயிர்கள் தம் பொருட்டு இன்பம் நுகர்கின்றன. ஆனால் இறைவன் இன்புறுவது, உயிர்களின் நலத்திற்கேயாகும். கோயில்களில் பள்ளியறையமைப்பது, திருக்கலியாணம் நடத்துவது போன்ற மங்கல நிகழ்ச்சிகள் இந்நோக்கிலேயே செய்யப்படுகின்றன. இறைவன் மாதொருபாகனாய் நிற்றல் உயிர்களின் பொருட்டே என்பதை மணிவாசகர்,

> *"பெண்பால் உகந்திலனேல் பேதாய் இரு நிலத்தோர்*
> *விண் பாலியோ கெய்தி வீடுவர்காண்"*

என்பர்.

## சத்தியும் சிவமும்

"சத்தியும் சிவமும் வெவ்வேறு பொருள்களல்ல; இரண்டும் ஒன்றே" என உணர்த்தவே, இறைவன் ஒருடம்பிலே ஆண் பெண் என இரு திறத்தனாகக் காட்சியளிக்கிறான். அறியாமையால் மூடப்பட்டு இருக்கும் உயிர்களுக்கு இரங்கி ஐந்தொழில்களைச் செய்ய, ஒருருவை எடுத்துச் சத்தியைக் கொண்டு இரண்டு உரு ஆனான்.

*"ஒருருவாயினை மானாங்காரத்து*
*ஈரியல்பாய் ...."*

என்பர் திருஞானசம்பந்தரும்!

## தொன்மைக் கோலம்

இறைவன், உமையொரு பாகனாய் நிற்கும் அர்த்தநாரீசுவரத் திருக்கோலத்தைத் 'தொன்மைக் கோலம்' என்று மாணிக்க வாசகர் சிறப்பித்துக் கூறுகின்றார்.

அர்த்தம் – பாதி; நாரி – மாது;

'பாதி மாதுடைய பரமன்' என்பது இதன் பொருள்.

*"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்*
*பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்*
*சூலமும் தொக்கவளையும் உடைத் தொன்மைக்*
*கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"*

என்பது திருவாசகம்.

## பட்டினத்தாரின் வருணனை

ஒருவருடைய வடிவ அழகைத் 'தலை' தொடங்கிக் 'கால்' முடிய 'கேசாதிபாதமா' க வருணித்தலும் உண்டு; அல்லது 'கால்'தொடங்கித் 'தலை' முடியப் பாதாதிகேசமாக' வருணித்தலும் உண்டு. பட்டினத்தார் திருவிடை மருதூர் இறைவனாம் மாதொரு பாகனின் தோற்றத்தைப் 'பாதாதி கேசமா'கப் பலவாறு வருணிக்கின்றார்.

தண்டமிழாம் சைவத் திருமுறைகளில் பதினோராம் திருமுறையில் பட்டினத்துப் பிள்ளையாருடைய பாடல்கள் இடம் பெறுகின்றன. இறைவனுடைய வலத்திருவடியை 'ஞான சத்தி' யென்றும், இடத் திருவடியைக் 'கிரியா சத்தி' என்றும் சித்தாந்த சாத்திரங்கள் கூறுகின்றன.

இறைவனின் வடிவத்தில் வலப்பக்கம் சிவனுடையது; இடப்பக்கம் சத்தியினுடையது; இது 'வாம பாகம்' எனப்படும்.

இறைவனின் வலத்திருவடி தெய்வத் தன்மையுள்ள தாமரை மலரின் [illegible]நாக. வாடாத புதுமலர்க் கொத்து போலச் சிவந்து, சிலம்பும்

கழலும் ஒலிக்குமாறு திகழ்கின்றது; காலனின் வலிமையை அழித்த அத்திருவடியைப் போற்றாது, திருமால் பன்றி ரூபத்துடன் பூமியை அகழ்ந்தார்; இறையன்பர்கள் ஒரு பச்சிலையை இட்டு வழிபட்டாலும் அவர்களுக்கு வீடுபேறு கொடுத்து அருள்கின்றது இறைவனுடைய வலத்திருவடி.

*"தெய்வத் தாமரைச் செவ்வியின் மலர்ந்து*
*வாடாப் புதுமலர்த் தோடெனச் சிவந்து*
*சிலம்பும் கழலும் அலம்பப் புனைந்து*

*..........................................................................*

*................ அடியவர் பச்சிலை இடினும்*
*முத்தி கொடுத்து முன்னின்று அருளித்*
*திகழ்ந்துளது ஒருபால் சேவடி....." (1-9)*

ஒரு பச்சிலையை இட்டாலும் அதனை ஏற்று உயிருக்கு வீடுபேறு அருள்வது இறைவனுடைய எளிவந்த தன்மையைக் குறிக்கும். அடியவர்கள், திருக்கோயிலுக்குச் செல்லும் பொழுது, வெறுங்கையுடன் செல்லாமல், தமது தகுதிக்கேற்றவாறு, இறைவனை அருச்சித்தற்குப் பூவோ, பழமோ, நீரோ, திருவிளக்குக்கு எண்ணெய்யோ கொண்டு செல்வர். 'பூ' இல்லையெனில் ஒரு 'பச்சிலை'; அதுவும் இல்லை என்றாலும் அவன் அடித்தாமரையை அடைய வேண்டுமென்ற 'மனம்' உண்டு; அது போதும் என்கின்றார் பட்டினத்தார்.

*"போதும் பெறாவிடில் பச்சிலை உண்டு புனலுண்டு எங்கும்*
*ஏதும் பெறாவிடில் நெஞ்சுண்டு...."*

என்று தமது 'திருக்கழுமல மும்மணிக்கோவை' யில் கூறுகின்றார்.

இறைவியின் திருவடி உட்புறம் சிவந்து, கற்பகத்தளிர் போன்ற மென்மையுடன், நெய்யில் தோய்த்த மெருகு உடையதாகி, நூபுரம் தன்மேற் படிந்தாலும் வருந்துமளவு மிருதுவானது; தேவ மகளிர் வணங்கித் தீண்டுவதால் சிவந்து, பஞ்சும், அனிச்சமும் தோற்குமளவுக்கு மெல்லியது; குறையாத செல்வமாகிய பேரருளுடன் பொலிவு பெற்றுத் திகழ்வது.

*"...................................................... அகஞ் சேந்து*
*மறுவில் கற்பகத் துறுதளிர் வாங்கி*

*நெய்யில் தோய்த்த செவ்வித் தாகி*

*.........................................................................*

*பஞ்சியும் அனிச்சமும் எஞ்ச எஞ்சாத்*

*திருவொடும் பொலியும் ஒருபால் திருவடி" (9-16)*

**இடையைப் பற்றிய வருணனை**

இறைவரது கூறாயுள்ள வலப்பக்க இடை, புலித்தோல் ஆடையும், பாம்பாகிய கச்சையும் கொண்டு திகழ்கின்றது.

**இறைவனது திருமார்பு வருணனை**

உமையொரு பாகர், தமது வலப்புறத்தில் பாம்பு, ஆமை ஓடு, பன்றியின் தந்தம், சங்குமணிகள், முப்புரி நூல், திருவெண்ணீறு இவற்றையணிந்து கொண்டு, பவளமாலை போன்ற ஒளிரும் மார்புடன் திகழ்கின்றார். தமது இடப்பாகத்தில் கச்சு, முத்து மாலையினைப் பூண்டு சந்தனச் சாந்தையும், குங்குமக் குழம்பினால் கோலம் எழுதப் பெற்று, ஏழுலகங்களையும் ஈன்றும், நிலைதளரா இளமைப் பொலிவுடன் திகழும் திருமார்பையும் கொண்டு திகழ்கின்றார்.

இறைவரது வலக்கரம், பாம்புகளை ஆங்காங்கே அணிந்து முத்தலைச் சூலமும், பூவாய் மழுவும், உடுக்கை போன்றவற்றைச் சுமந்துள்ளது. இறைவரின் இடக்கரம் கைவளைகளும்,பொன்னால் ஆகிய கழற்சிக் காய்களும், பந்தும் கிளியும் கொண்டு விளங்குகிறது.

இறைவரது வலக்கண் சூரியனும் அக்கினியும் கலந்த வெப்பத்துடன் விளங்குகின்றது. இறைவரது இடக்கண்,பெண்மானின் கண்களைப் போலும் பொலிவினைக் கொண்டு, பாலிலே கிடந்த இந்திரநீலத்தைப் போன்றும், கருங்குவளை மலரைப் போன்றும் குளிர்ந்த நிறத்துடன் விளங்கி, உயிர்களின் பிறவி நோயை நீக்கி, ஏழுலகங்களையும் காப்பதாகும்.

*"குண்டுநீர்க் குவளையிற் குளிர்ந்து நிறம்பயின்று*

*எம்மனோர்க்கு அடுத்த வெம்மை நோய்க்கு இரங்கி*

*உலகேழ் புரக்கும் ஒருபால் நாட்டம்...." (45-47)*

அன்னையின் அருட்கண் பார்வையினால் நம் பிறவிநோய் நீங்கும். மீன், தான் இடும் முட்டைகளைக் கண்ணால் பார்க்க, முட்டை பொரித்துக்

குஞ்சாவது போல, பராசக்தியின் கடைக்கண் பார்வை உயிர்களிடம் பதிவதால் உயிர்கள் பரிபக்குவம் அடைகின்றன.

## இறைவனது திருமுடி வருணனை

இறைவரது திருமுடி வலப்பக்கம் நொச்சி, ஊமத்தை, தும்பை மலர்களையும், கங்கையாற்றையும், பசிய கண்களை உடைய தலைமாலையையும், பாம்பையும், இளம்பிறையையும் கலந்து தொடுத்த, யாராலும் அணியப்படாத மாலையையும் அணிந்து நெருப்புப் போன்ற செந்நிறம் கொண்டு விளங்கும் சடையுடன், பிரமனாகிய அன்னப்பறவை காணமுடியாதபடி, கருத்தையும் கடந்துள்ளது!

*"நொச்சிப் பூவும் பச்சை மத்தமும்*
*கொன்றை போதும் மென்றுணர்த் தும்பையும்*
*கங்கை யாறும் பைங்கண் தலையும்*
*அரவும் மதியமும் விரவித் தொடுத்துச்*
*சூடா மாலை சூடிப் பீடுகெழு*
*நெருப்பில் திரித்தனைய உருக்கினர் சடிலமொடு*
*நான்முகம் கரந்த பால்நிற அன்னம்*
*காணா வண்ணம் கருத்தையும் கடந்து*
*சேண் இகந்து உளதே ஒருபால் திருமுடி..." (48–56)*

"பிரமனின் கண்ணையும் கருத்தையும் கடந்துள்ளான் இறைவன்" என்பதால், 'வாக்கு மனாதீதன்' (ஆன்மாக்களின் வாக்கிற்கும் மனத்திற்கும் அப்பாற் பட்டவன்) என்ற தத்துவக் கருத்தை உணர்த்துகிறார்.

தெய்வப் பெண்கள் அழகிய கற்பக மலர்களைத் தொடுத்துக்கட்டிய தெய்வத் தன்மையுள்ள மாலை கூந்தலில் திகழ, வண்டுகள் அம்மலர்களில் தேனுண்டு களிப்படைய, திருவுடன் பொலியும் தலைக் கோலத்துடன் இறைவி பாகத்துத் திருமுடி விளங்குகிறது. இறைவரது வலப்பக்கத் திருக்கண், இடப் பக்கத்திலுள்ள உமாதேவியின் பாகத்தை நோக்க, உமாதேவியார் நாணம் அடைகின்றார்.

## ஏழுலகங்களைப் படைக்கும் திறம்

வலப் பக்கத்திலுள்ள இறைவனுடைய திருக்கரத்தின் தொடு உணர்வால் இறைவியின் திருமேனி சிலிர்த்து, அதனால் ஏழுலகங்களைப் பலமுறை ஈன்றுள்ளது; இக்காட்சியை ஐங்குறு நூறு,

*"நீலமேனி வாலிழை பாகத்து*
*ஒருவன் இருதாள் நிழற்கீழ்*
*மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே"*

என்று கூறுகின்றது.

இறைவன் அருவநிலையில் சிவமாய் இருக்கும் பொழுது இறைவி அருவத்தில் சத்தியாய் இருப்பாள்; அவன் 'நாத' தத்துவமாய் இருக்கும் பொழுது, அவள் 'விந்து' சத்தியாய் விளங்குவாள்; இறைவன் 'அருவுரு'வில் சதாசிவமாய் இருக்கும் பொழுது 'மனோன்மணி' யாவாள்; உருவநிலையில் மகேசனுக்கு மகேசையாகவும், உருத்திரனுக்கு உமையாகவும், திருமாலுக்கு இலக்குமி என்றும், பிரமனுக்குச் சரசுவதி என்றும் உருக் கொள்கிறாள்.

சத்தி, ஒன்பது வகையில் ஒலி முதல் நிலம் ஈறான தத்துவங்களோடு இயைந்து நிற்க, சிவம், அச்சத்தி முதலியவற்றை நிலைக்களமாகக் கொண்டு அவற்றுடன் இயைந்து நிற்கும். அச்சத்தியினால் தோற்றுவிக்கப்பட்ட உலகங்களும் சத்தியும் சிவமுமாகவே இருக்கும். சத்தி இறைவனுக்கு மனைவியாக நிற்பதால் இறைவன் நினைவளவில் நிகழ்த்துவன எல்லாம், அச்சத்தியினாலே ஆனவையாகும். இவ்வகையில், சிவத்தினின்று சத்தியும், சத்தியினின்று சிவமும் தோன்றியும், உயிர்களை உய்யக் கொள்வதற்காக, இருவரும் கூடி அறிவுடையதும், அறிவில்லாததுமாகிய உலகங்களைத் தோற்றுவித்து அருளுவர். இருப்பினும், சிவபெருமான், மணவாழ்வைப் பொருந்தாத இளஞ் செல்வனேயாவான்; பால் போன்ற இனிய சொல்லையுடைய சத்தியும் மணவாழ்வைப் பொருந்தாத இளஞ்செல்வியே ஆவள். சிறந்த தவப்பயன் பெற்ற ஞானியர்களுக்கு மட்டுமே, சிவசத்தி உலகோடு தோய்ந்தும், தோய்வின்றி நிற்கும் இயல்பு விளங்கும்.

*"சிவம் சத்திதன்னை ஈன்றும், சத்திதான் சிவத்தை ஈன்றும்,*
*உவந்து இருவரும் புணர்ந்து இங்கு உலகு உயிர் எல்லாம் ஈன்றும்,*
*பவன் பிரமசாரியாகும்; பால்மொழி கன்னியாகும்;*
*தவம்தரு ஞானத்தோர்க்கு இத்தன்மைதான் தெரியும் அன்றே"*
*(சிவஞானசித்தியார்–167)*

திருஞான சம்பந்தரும்,

*"கண்பொலி நெற்றியினான் திகழ் கையிலோர் வெண் மழுவான்*

*பெண்புணர் கூறுடையான் மிகுபீடுடை மால் விடையன்*
*விண்பொலி மாமதிசேர் தரு செஞ்சடை வேதியன்”*

என்று இறைவன் மாதொரு பாகனாகிய தோற்றத்தைப் போற்றுகின்றார்.

## மருதூர் இடங்கொண்ட பெருந்தேன்!

'தேன்', இனிப்புச் சுவையைத் தருவதுடன், உணவாகவும் பயன்படும்; உடல் நோயையும் நீக்கும்; இறைவனும், அவனை நினைக்கும் போதும், பேசும்போதும், காணும் போதும் மனத்திற்கு இனிமை தருகிறான்; இவ்வுலக வாழ்வாகிய நுகர்பொருள்களைத் தந்து உயிரின் பிறவி நோயை நீக்கிப் பேரின்பப் பெருங்கடலுள் ஆழ்த்துகின்றான். சலிக்காத, குறையாத பேரின்ப வடிவினன் ஆதலின், 'பெருந்தேன்' என்று இறைவனைப் பட்டினத்தார் போற்றுகின்றார்.

*“பெருந்தேன் முகந்து கொண்டு உண்டு*
*பிறிதொன்றில் ஆசையின்றி*
*இருந்தேன் ................................” (பாடல் எண். 3)*

மாணிக்க வாசகரும்,.

*“தினைத்தனை உள்ளதோர் பூவினில் தேன் உண்ணாதே*
*நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும்*
*அனைத்தெலும்பும் உள்நெக ஆனந்தத்தேன் சொரியும்*
*குனிப்புடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ”*

என்று உள்நெக்குருகுவதும் ஈண்டு எண்ணத்தக்கது.

## முடிவுரை

தும்பி, மலரிலுள்ள தேனை விரும்பிச் செல்வது போல, மனித உயிர்கள், இறைவனாகிய பேரின்பப் பெருந்தேனை விரும்பி, நாடிச் செல்லவேண்டும் என்று ஞானிகள் நமக்கு அறிவுறுத்துகின்றனர்.

## 20. கந்தர் கலிவெண்பாவில் திருவருள் விளக்கம்

### முன்னுரை

"பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடும்" வல்லமை பெற்றவர் குமரகுருபரர். இவர் ஐந்து வயது வரை வாய்பேசாது ஊமையாக இருந்து, திருச்செந்தில் முருகன் அருளால் வாய் திறக்கப் பெற்றுக் 'கந்தர் கலிவெண்பா' வைப் பாடியருளினார். இந்நூலில், சைவ சித்தாந்தத்தில் விரிவாகப் பேசப்படும் 'திருவருள் விளக்கம்' இயம்பப்பட்டுள்ளது. அது குறித்து ஒரு சிறிது ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கம்.

### கந்தர் கலிவெண்பா: நூலும் சிறப்பும்

'கந்தர் கலிவெண்பா' என்பது கந்தனைப் பற்றிய கலிவெண்பா என்று பொருள்படும். யாப்பு வகைகளில் ஒன்று கலி வெண்பா. 'பூமேவு செங்கமலம்' என்று தொடங்கும், இந்நூல், திருச்செந்தில் முருகனின் பல்வேறு இயல்புகளையும், சிறப்புக்களையும் எடுத்தியம்புவது. இரண்டடிகள் கொண்ட கண்ணிகள் 122 உடையது.

முதல் 36 கண்ணிகளில் சிவபெருமானுக்குரிய சிறப்புக்கள், முருகக் கடவுளுக்கு ஏற்றிக் கூறப்பட்டுள்ளன. பின்பு முருகனின் திருவிளைபாடல்கள், தெய்வானை–வள்ளி திருமணம் ஆகியன உரைக்கப்படுகின்றன. நூலின் இறுதியில் முருகனிடம் குமரகுருபரர் வேண்டுகோள் விடுப்பதாகப் பாடி முடிக்கின்றார்.

### திருவருள் - ஒரு விளக்கம்

இறைவனது சிற்சத்தியாகிய அவனது ஆற்றலே திருவருள் எனப்படும். அஃது பதிஞானம், சிவஞானம் எனவும் கூறப்படும். ஆணவத்தில் அழுந்தித் தன்னையும் தன் தலைவனையும் அறியாது தடுமாறுகின்ற உயிருக்கு விடுதலை அளிக்க வல்லது திருவருள் ஒன்றே. இத்திருவருளே இறைவனிடத்திலிருந்து நீங்கா்த–வேற்றுமைப்படாத சத்தி ஆகும்.

இறைவன் உயிர்களை உய்யக் கொள்ளுதற்கெனக் கொள்ளும் கருணையாகிய அருள்நிலையே சத்தியாகும்.

எல்லாவற்றையும் கடந்து தனது சக்தியை உள்ளடக்கித் தானேயாய் நிற்கும் நிலையில் 'சிவம்' என்றும், தன் சத்தியைப் பயன்படுத்தி ஐந்தொழில் புரியும் பொழுது 'பதி' என்றும் கூறப் பெறுவான்.

கதிரவனும் அதன் ஒளியும் போல, இறைவனும் அவன் சத்தியும் விளங்கும். கதிரவனை அதன் கதிர்களைக் கொண்டு அறிவது போல இறைவனை அவனது சத்தியைக் கொண்டு அறியலாம். இறைவனும் அவனது திருவருளும் 'ஒன்றன் இருமை'யாகிய 'தாதான்மிய சம்பந்தம்' என்று கூறப்படும்.

இறைவனுக்குரிய குணங்கள் எட்டு. அவற்றுள் ஒன்று, 'பேரருள் உடைமை'. திருவள்ளுவரும் 'எண்குணத்தான்' என்று இறைவனைக் குறிப்பிடுவர்.

இது குறித்துச் சி.அருணை வடிவேலு முதலியார் தரும் விளக்கம் இவண் குறிக்கத் தகும்:

> *"இறைவன் தன் அருளால் இயல்பிலே பாசத்திற்பட்டுத் துன்புறுகின்ற பசுக்களைப் பாசத்தினின்றும் விடுவித்து இன்புறச் செய்கின்றவனாய்ப் பல்வேறு உருவங்களையும், அவற்றிற்கேற்ற பெயர்களையும் கொண்டு, பற்பல தொழில்களைச் செய்பவன் ஆகின்றான். அது உயிர்கள் –மாட்டுவைத்த அருள் காரணமாக நிகழ்வது ......................." (முப்பொருள் இயல்பு ப.77)*

## கந்தர் கலிவெண்பாவில் திருவருள் விளக்கம்

### 1. இறைவனது சொரூப இயல்பு [சிறப்பியல்பு]

ஒரு பொருளுக்கு, இயற்கையில், அதனைவிட்டு ஒருகாலும் நீங்காது நிற்பது 'சிறப்பியல்பு' அல்லது 'சொரூப இலக்கணம்' எனப்படும். இந்தச் சைவ சித்தாந்தக் கருத்தைக் குமரகுருபரர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

*"பூமேவு செங்கமலப் புத்தேளும் தேறரிய*
*பாமேவு தெய்வப்பழ மறையும் – தேமேவு*
*நாதமும் நாதாந்த முடிவும் நவைதீர்ந்த*

*போதமும் காணாத போதமாய் – ஆதிநடு*
*அந்தங்கடந்த நித்தியானந்த போதமாய்ப்*
*பந்தந்தணந்த பரஞ்சுடராய்—வந்த*
*குறியும் குணமும் ஒருகோலமு மற்றுஎங்கும்*
*செறியும் பரமசிவமாய்.....”*
*(கந்தர் கலிவெண்பா,1–14)*

என்பர் குமரகுருபரர்.

இறைவன், தன் சொரூப இயல்பாகிய சிறப்பு நிலையில், சொல்லையும் மனத்தையும் கடந்தவனாக இருக்கின்றான்; அறிவே வடிவானவன்; பிறப்பு இறப்பு இல்லாதவன்; பேரும் ஊரும் இல்லாதவன்; குறைவிலா நிறைவானவன்; கோதிலா அமுதானவன்; தன்னுடைய திருவருளோடு பிரிப்பின்றி இருப்பவன். எல்லாவற்றையும் கடந்து பரமசிவமாய் நிற்கும் இந்நிலை, சத்து, சித்து, ஆனந்தம் இவற்றை அடக்கிச் சச்சிதானந்தமாக விளங்கம் நிலை ஆகும். சத்து என்பது எப்போதும் ஒரே தன்மையாய் நிற்கும் செம்பொருளானவன் என்றும்; சித்து என்பது முற்றறிவுடையவன் என்றும், ஆனந்தம் என்பது பேரின்பம் உடையவன் என்றும் பொருள் தரும். இறைவனுடைய எண்குணங்களையும் இவ்வாறு மூன்றாக அடக்கிக் கூறுவர்.

உயிரறிவுக்கு எட்டாத இறைவன், உயிரின் மனமொழி மெய்களுக்கு அப்பாற்பட்டு இருப்பினும், உயிர் உய்யவேண்டுமென்ற தனது கருணையினால், அருளே வடிவாகிய பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என்ற ஐவகைத் திருவுருக் கொண்டு உயிருக்கு இறுதிப் புகலாகவும், எல்லையில்லாப் பேரின்பப் பொருளாகவும் இருக்கின்றான்.

*“ ......................... அறிவுக்கு*
*அனாதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் நின்றே*
*மனாதிகளுக்கு எட்டாவடிவாய்த்—தனாதருளின்*
*பஞ்சவித ரூபப்பர சுகமாய் எவ்வுயிர்க்கும்*
*தஞ்சமென நிற்கும் தனிப்பொருளாய் எஞ்சாத*
*பூரணமாய் நித்தமாய்ப் போக்கும்வரவும் புணர்வும்*
*காரணமும் இல்லாக் கதியாகி............”*
*(கந்தர் கலிவெண்பா 5–7)*

என்று இதனைக் கூறுவர் குமரகுருபரர்.

இந்தக் கண்ணிகளில் இறைவனின் சொரூப இயல்பும், தடத்த இயல்பும் கலந்து கூறப்படுகின்றன.

### உ. இறைவனது தடத்த இயல்பு (பொதுவியல்பு)

பொதுவியல்பு என்பது, ஒரு பொருள் மற்றொன்றின் தொடர்பு கொள்ளும்போது, தோன்றுகின்ற இயல்பு ஆகும். இடையிலே தோன்றிய பொதுவியல்பு, அது தோன்றுதற்குக் காரணமான மற்றொரு பொருளின் தொடர்பு நீங்கும்பொழுது தானும் நீங்கி விடும். உதாரணமாகத் தண்ணீரின் சிறப்பியல்பு குளிர்ச்சி; தண்ணீரைச் சூடுபடுத்தும் போது, வெந்நீர் ஆவது அதன் பொதுவியல்பு; நெருப்பின் தொடர்பு நீங்கும் பொழுது, நீர் வெம்மை நீங்கி, மீண்டும் தனது குளிர்ச்சியாகிய சிறப்பியல்பைப் பெறுகிறது.

ஆணவமல மறைப்பினால் இருளில் துன்புறுகின்ற உயிர்களை அதனினின்றும் மீட்க, இறைவன் தன் பெருங்கருணையினால் ஐந்தொழில்கள் புரிகின்ற நிலையே இறைவனின் பொதுவியல்பு எனப்படும். இருநிலைகளிலும் இறைவன், தன் சிற்சத்தியாகிய திருவருளோடு பிரிப்பின்றியே இருப்பான்.

### 3. இறைவன் செய்யும் ஐந்தொழில்கள்

இறைவனுடைய பேராற்றலாகிய அருட் கருணையே, உயிர்களை இருளிலிருந்து மீட்டு, இறைவன் திருவடியில் கூட்டி, எல்லையற்ற இன்பத்தை வழங்கும். இறைவன் புரிகின்ற ஐந்தொழில்களும் அவனது அருளின் வெளிப்பாடே.

தடத்த நிலையில் இறைவன் புரியும் ஐந்தொழில்கள்: படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன.

#### படைத்தல்

அழிவில்லாத நித்தியப் பொருள்களாகிய உயிர்களுக்கு, அவற்றின் வினைக்கேற்றவாறு, மாயை என்னும் மூலப்பொருளாகிய நுண்பொருளிலிருந்து உடல், கருவிகள், உலகு, நுகர்ச்சிப் பொருள்கள் ஆகியவற்றைப் படைத்தளிக்கின்றான் இறைவன்.

**காத்தல்**

உயிர்களின் வினைப்பயன்கள் நீங்கும்வரை, உயிர்களுக்கு வழங்கப்பட்ட உடல் கருவி முதலியவற்றைக் காத்து நிற்கின்றான்

**அழித்தல்**

உயிர்களின் வினைப்பயன் நீங்கியபின், உயிர்கள் இளைப்பாறுதற்பொருட்டு, உடல் முதலியவற்றை நீக்கி, மீண்டும் அவற்றை மாயையில் ஒடுங்கச் செய்கின்றான்.

**மறைத்தல்**

உயிரின் வினைப்போகம் நீங்கும் வரை, உயிர் தன்னிடத்துள்ள இறைவனை அறியாமல் உலக மயக்கத்தில் ஆழ்ந்திருக்கும்படிச் செய்வது; இதனைச் செய்யும் இறைச்சத்தி 'திரோதானசத்தி' ஆகும். திரோபவம் – மறைப்பு. உயிரறிவை மறைத்திருக்கும் ஆணவமலத்தின் ஆற்றலை மெலிவடையச் செய்தற்கே இத்தொழிலை இறைவன் செய்கின்றான்.

**அருளல்**

இடைவிடாப் பிறப்பு இறப்புக்களில் உயிரைச் செலுத்தி உழலச் செய்ததன் விளைவாக உயிரைப் பிணித்துள்ள ஆணவமலம் வலிமை இழந்து நிற்கும். அந்நிலையில் இறைவனை அவாவிநிற்கும் உயிரை ஆட்கொண்டு, திருவடிப் பேரின்பத்தை நல்குதல் 'அருளல்' எனப்படும்.

*"பந்தமும் வீடும் படைப்போன் காண்க"*

*(திருவாசகம், திருவண்டப் பகுதி : 52)*

*"பந்தமுமாய் வீடும் ஆயினார்க்கு"*

*(மேலது, திருப்பொற்சுண்ணம் : 20)*

*என்றும் மணிவாசகர் இதனைக் கூறுவர். சித்தியாரும்,*

*"பந்தமும வீடுமாய பத பதார்த்தங்கள் அல்லான்" (64)*

என்று கூறும்.

இவ்வைந்து தொழிற்கும் அதிதெய்வங்கள் பிரமன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவம் ஆகிய ஐவராவர் (உண்மை விளக்கம் 8). இருப்பினும் இவர்களை 'அதிட்டித்து' அருள்புரிபவர் சிவபெருமானே ஆவர். குமரகுருபரர் இதனை,

*"..........................................தனாதருளின்*
*பஞ்சவித ரூபப்பரசுகம் .........................."*

*(கந்தர் கலிவெண்பா5–6)*

என்கிறார். அன்றியும் இவர்,

*"................................. ஐந்தொழிற்கும்*
*நீங்காத பேருருவாய் நின்றோனே!"*

*(கந்தர் கலிவெண்பா 57)*

*"........................................ தொண்டுபடும்*
*ஆவிப்புலனுக்கு அறிவு அளிப்ப ஐந்தொழிலும்*
*ஏவித்தனி நடத்தும் எங்கோவே!"*

*(கந்தர் கலிவெண்பா, 63–64)*

என்றும் கூறுவர், மேலும்

"ஐந்தொழிலும் ஓவாது அளித்துயர்ந்த" (72) என்று கூறுவதுடன், திருவருட்சத்தியான கொடியுடையவன் என்றும் வருணிக்கின்றார்.

இறைவன் அண்டங்களைத் தன் உருவமாகவும், எண்ணற்ற பிறப்பு வகைகளைத் தன் உறுப்புக்களாகவும் கொண்டு, தனது இச்சை, ஞானம், கிரியைகளால் உயிர்களின் இச்சை, ஞானம், கிரியைகளை விளக்கி, வழிநடத்தி அறிவு கொடுத்து, ஐந்து நலமிகுதொழில்களைக் கொண்டு நாடகம் நடித்து அருளுகின்றான். (சிவஞானசித்தியார், சுபக்கம்,237)

*"கபடமா நாடகத்து ஐந்தொழில் நடத்தும் பிரான்"*
*(மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் 73:1–2)*

என்று மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழிலும் குமரகுருபரர் கூறுவர்.

இறைவன் சுத்த தத்துவங்களைச் செயற்படுத்தும் பொழுது, அந்நிலையில் ஒடுக்கம் (இலயம்), நுகர்வு (போகம்), பெரியதாகிய அதிகாரம் (தொழிற்படுதல்–படைத்தல்) ஆகிய மூன்று நிலைகளையும், பாடுகளையும் (அவத்தை)கொண்டு அவற்றிற்கு நிலைக்களனாய சுத்த தத்துவங்களையும் கொண்டு நிற்பன் (சித்தியார்85).

குமரகுருபரரும் இக்கருத்தை,

*"........................................இச்சைஅறிவு இவற்றால் இலய*

*போக அதிகாரப் பொருளாகி ..............................."*

*(கந்தர் கலிவெண்பா, 10)*

என்று எடுத்துரைப்பர்.

**இறைவனுக்குத் திருவருளே உருவம்**

இறைவன் திருவருளையே தனது வடிவமாக உடையவன் (சித்தி.64). மனிதர்களைப் போல, மாயையால் ஆகிய உடலைப் பெற்றவன் அல்லன்.

"..................அருளே உரு" (கந்தர் கலிவெண்பா,9) என்பர் குமரகுருபரர். மணிவாசகரும் "பெருங்கருணைப் பேராறு" "அருள்நிதி தரவரும் ஆனந்தமலை" என்பர் (திருவாசகம் 1:66). மேலும் அவன் குணங்களும், உடற்கருவிகளும், செய்யும் தொழில்களும், திருக்கை, திருவடி முதலிய உறுப்புக்களும், கையில் விளங்கும் சூலம், மழு முதலிய கருவிகளும், அவனுடைய ஆடை, மாலை, இருக்கை ஆகிய அனைத்துமே அருள் வடிவமாகும். இவ்வடிவனைத்தும் இறைவன் தன் பொருட்டு இன்றி, உயிர்கள் பொருட்டே கொள்கின்றான் (சித்தியார், 67).

**5.மூவகை வடிவங்கள்**

காலப் பழமைக்கு எட்டாது, சொரூப நிலையில் ஞானமே வடிவாய் நின்ற பெருமான், உயிர்கள் தன்னையுணர்ந்து ஈடேற்றம் பெறும் பொருட்டு, அருவம், உருவம், அருவுருவம் என்ற மூவகை வடிவங்களைக் கொள்கிறான். உயிர்களின் பக்குவத்திற்கேற்றவாறு உருக்கொள்கிறான்.

*"அருவமும் உருவாரூபம் ஆனதும் அன்றி நின்ற*
*உருவமும் மூன்றும் சொன்ன ஒருவனுக்கு உள்ளவாமே"*

*(சித்தியார்–52)*

*"அருவும் உருவும் அறிஞர்க்கு அறிவாம்*
*உருவும் உடையான் உளன்"*

*(திருவருட்பயன், 5)*

என்று சித்தாந்த சாத்திரங்கள் கூறும்.

*"உருவும் அருவும் உருஅருவும் ஆகி*
*பருவ வடிவம் பலவாய்......" (கந்தர் கலிவெண்பா,11–12)*

என்பர் குமரகுருபரர்.

## மூவகை ஆன்மாக்களுக்கு அருள் செய்யும் முறைமை

*"............................இருள் மலத்துள்*
*மோகமுறும் பல்லுயிர்க்கும் முத்தி அளித்தற்கு மல*
*பாகமுறவே கடைக்கண் பாலித்து............."*

*(கந்தர் கலிவெண்பா, 11–12)*

என்ற அடிகளில், அனாதியே பாசத்துள் கட்டுண்ட உயிர்களுக்குத் தன் வற்றாத கருணையினால் இறைவன் அருள் பாலிக்கும் கருணைத் திறத்தைக் குமரகுருபரர் உணர்த்துகின்றார்.

மூவகை உயிர்வருக்கத்தினருள், ஆணவமாகிய ஒரு மலமே உடைய விஞ்ஞானகலருக்கு, இறைவன் தன்மையில் உள்நின்று அருள்வன்; ஆணவம், கன்மமாகிய இருமலமே உடைய பிரளயாகலருக்கு மான் மழு ஏந்தி, நீலகண்டமும், மலர்க்கண் மூன்றுமாகத் தன் வடிவத்திலேயே முன்னின்று அருள்வன்; ஆணவம், கன்மம், மாயையாகிய மும்மலம் உடைய சகலருக்குக் குருவடிவில் படர்க்கையில் வந்து தோன்றி அருள்வன். (திருவருட்பயன், 48)

*"கன்ம மலத்தார்க்கு மலர்க்கண் மூன்றும் தாழ்சடையும்*
*வன்மழுவும் மானும் உடன் மால்விடைமேல் – மின்னிடத்துப்*
*பூத்த பவளப் பொருப்பு ஒன்று வெள்ளி வெற்பில்*
*வாய்த்தனைய தெய்வ வடிவாகி–மூத்த*
*கருமமலக் கட்டு அறுத்துக் கண்ணருள் செய்து உள்நின்று*
*ஒரு மலத்தார்க்கு இன்பம் உதவி............"*
*"................ பிறியாக்*
*கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்*
*குருபரன் என்றோர் திருப்பேர் கொண்டு திருநோக்கால்*
*ஊழ்வினையைப் போக்கி...."*

*(க.க.வெ.30–32; 23–25)*

என்று குமரகுருபரர் அருளிச் செய்வர்.

## ஞானாசிரியராய் அருளும் முறை

பக்குவம் அடையாத உயிருக்கு, இதுவரை அது அறியாவண்ணம் உயிர்க்குயிராய் மறைந்து நின்று அறிவைக் கொடுத்த பரம்பொருள், உயிர் பக்குவம் எய்திய காலத்தில், ஞானாசிரியராய்த் தோன்றி, நீங்காது

உடனாகி அருளுகின்றான். உயிரின் வினை, பிறப்பிற்கு வழிகோலுவதால் வினைக்கட்டைச் சுட்டு எரிக்கின்றான். வேறு உருவங்களில் வந்தால் மக்கள் அஞ்சுவர் என்று கருதி, இறைவன், வேடர் மானைக் காட்டி மானைப் பிடித்தாற் போல, ஞானாசிரியர் உருவில் வருகின்றான். (திருவுந்தியார்,1; திருவருட்பயன், 45)

சிவபெருமானே தம் உருவம் கரந்து மானிடச் சட்டை தாங்கி வந்தார் என்று தம் குருநாதரைப் பின்வருமாறு போற்றுகின்றார் குமரகுருபரர்:

*"வண்பதி புரக்கும் மாசிலாமணி*
*தலைப்படு கலைமதி தாங்கா தாங்கத்*
*தலைப்படு கலைமதி தாங்கி நிலைப்படு*
*மானிட னாய வடிவு கொண் ட ருளாது*
*மானிட னாய வடிகொண்ட ருளி..."*

*(பண்டார மும் மணிக்கோவை, 14:18–22)*

கலைகளை உடைய சந்திரனைத் தலையில் கொண்ட சிவபெருமான், தான் நேரே வந்து அருளாது, சிறப்புடைய சாத்திர அறிவை உடைய குருவாக வந்தான்; மானை இடப்பக்கம் தாங்கிய இறைவன், மானிட வடிவத்தில் குருவடிவந்தாங்கி வந்தான் என்று கூறும் திறம் மகிழ்ந்து போற்றுதற்குரியது.

### சத்தி நிபாதம்

ஆணவத்தின் கொடும் பிடியினின்றும் உயிர்கள் விடுதலை பெற வேண்டுமெனில், உயிரினுள் இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்தி நிபாதம் ஆகிய இவை முறையாக நிகழ வேண்டும். இருவினை ஒப்பு என்பது, உயிர்கள் தாம் செய்த இருவினைகளால் வரக்கூடிய இன்ப துன்பங்களை விருப்பு வெறுப்பின்றிச் சமமாக நோக்கக் கூடிய, அவற்றை ஒப்பக் கருதும் மனப்பாங்கு ஆகும். அந்நிலையில் பல பிறவிகளில் நுகர்ந்த இன்ப துன்பங்களால் சலிப்புற்ற உயிரின் அறிவிலுள்ள ஆணவமலம், தன் வலிமை குன்றி, வறுத்த வித்துப் போல் தன் சக்தி இழந்து, தேய்ந்து மெலிதாகிறது. வானில் சந்திரனின் கலை வளரவளர ஒளிமிகுந்து, இருள் குறைந்து கொண்டே போவது போல, உயிரின் அறிவில் ஆணவத்தின் பிடிகுறையக் குறைய, உயிரின் உள்ளொளியாகிய திருவருள் தன்னை வெளிக்காட்டத் தொடங்குகிறது. ஆணவமலம் பக்குவமடைதல் 'மலபரிபாகம்' எனப்படும்.

அந்நிலையில் உயிரில் சத்தி பதியத் தொடங்குகிறது. இது 'சத்தி நிபாதம்' எனப்படும் (நிபாதம்—வீழ்ச்சி). இறைவனுடைய இன்னருள் வீழ்ச்சி உயிரில் பதியத் தொடங்குகிறது. மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்ற நான்கு வகைகளில் சத்தி நிபாதம் உயிருக்குள் நிகழ்கிறது.

*"........................................... நால்வகையாம்*
*சத்தி நிபாதம் தருதற்கு இருவினையும்*
*ஒத்துவரும் காலம் உளவாகிப்—பெத்த*
*மலபரிபாகம் வரும் அளவில் பன்னாள்*
*அலமருதல் கண்ணுற்று அருளி........."*

*(க.க.வெ.20–22)*

—இது குமரகுருபரர் வாக்கு.

பல்வகைப் பிறப்புக்களில் காற்றாடியைப் போலவும், வண்டிச் சக்கரத்தைப் போலவும் மேல் கீழாய் மாறிமாறிப் பிறந்து இறந்து உழன்ற உயிர்கள், நல்வினைக் கேற்பத் துறக்கத்திலும், தீவினைக்கேற்ப நிரயத்திலும் வினைப் பயன்களைத் துய்த்து, அறியாமை நீங்கி, பக்குவப்பட்டுத் திருவருள் வேட்கை கொள்கின்றன. அவ்வுயிர்களை அணைத்து, திருவருளில் திளைக்கச் செய்கின்றான் இறைவன்.

**வீடுபேறாகிய பேரின்ப நிலை**

கண்ணை மறைக்கும் படலம் போல, உயிரறிவை மறைத்த ஆணவமலமாகிய படலத்தைக் கிழித்து, உயிரின் மூன்று நிலைகளையும் நீக்கி உயிரறிவில் ஞானம் விளங்க வைக்கிறான் இறைவன். பின், சிவப் பேரின்பமாகிய மாறா இன்பத்தில் திளைத்திருக்கச் செய்கின்றான்; எல்லையற்ற பரமானந்தத்தில் திளைக்கச் செய்கின்றான். ஓங்கு சிவானந்த வெள்ளமாகிய மேலான பரமுத்தியை அருள்கின்றான். 'யான், எனது' என்ற தன்முனைப்பு அற்ற இடமே திருவருள் விளங்குமிடமாகும். மோனத்தில் விளைகின்ற முடிவற்ற பேரின்பமே இறைவனது திருமுடியாகும்.

*"....................................... பெருகி எழு*
*மூன்று அவத்தையும் கழற்றி முத்தருடனே*
*ஆன்ற பரமுத்தி அடைவித்துத்—தோன்றவரும்*
*யான் எனது என்று அற்ற இடமே திருவடியா*
*மோன பரமானந்த முடியாக............."*

*(க.க.வெ. 32–34)*

என்று முத்தியின் மேன்மையை விளக்குவர் குமரகுருபரர்.

### நால்வகை நெறிகள்

உயிர் இறைவனை அடைதற்குரிய நெறிகள் நான்கு.

### சரியை [புறவழிபாடு]

எவ்வுயிரிடத்தும் அன்பு கொண்டு வாழ்தல், இறைவனைப் பூவும் நீரும் பிறபொருள்களும் கொண்டு வழிபடுதல் 'சரியை'; இதற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர் திருநாவுக்கரசர். இந்நெறி நின்றோர் இறைவன் உலகத்திருப்பர் (சாலோகம்).

### கிரியை [அகப்புறவழிபாடு]

மேற்கூறிய புறவழிபாட்டோடு மனத்தகத்தேயும் இறைவனை நினைந்து, அன்பானும் பண்பானும் வழிபட்டு வருவது. இதற்குச் சான்றாக விளங்குபவர் திருஞான சம்பந்தர். இந்நெறி நின்றோர் இறைவன் அருகிருப்பர் (சாமீபம்).

### யோகம் [அகவழிபாடு]

மனத்தகதது எழுந்தருளிவித்த இறைவனை அகநோக்கால் கண்டு அதன் கண்ணேயே அழுந்தி நிற்பது இந்நெறியாகும். சான்றாக விளங்குபவர் சுந்தரர். இந்நெறி நின்றோர் இறைவனது திருவுருவைப் பெறுவர் (சாரூபம்).

### ஞானம் [அறிவு வழிபாடு]

ஞான நூல்களைத் தக்க ஆசானிடத்துக் கேட்டுக் கேட்டவற்றைச் சிந்தித்து, அச்சிந்தனையின் பயனாகத் தெளிந்து, தெளிந்த பொருளைப் பற்றி நிற்பதே இந்நெறி. சான்றாக விளங்குபவர் மாணிக்கவாசகர். இந்நெறி நின்றவர் இறைவனுடன் இரண்டறக் கலந்திருப்பர் (சாயுச்சியம்).

*"விரத முதலாய பல மெய்த்தவத்தின் உண்மைச்*
*சரியை கிரியா யோகம் சார்வித்து—அருள்பெருகு*
*சாலோக சாமீப சாரூபமும் புசிப்பித்து*
*ஆலோகம் தன்னை அகற்றுவித்து ............"*

*(க.க.வெ. 19–20)*

என்று குமரகுருபரர் நால்வகை நெறிகளையும், அதன் பயன்களையும் விளக்குவர்.

## ஆறு அத்துவாக்கள்

மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை ஆகிய அத்துவாக்கள் உயிருக்கு வினைவரக்கூடிய வழிகளாகும். இறைவன் மானுட வடிவு தாங்கி, அறிவுச் சார்பு, செயற்சார்பு எனும் இருவகைத் தீக்கைகளுள் ஒன்றனால் பக்குவப்பட்ட உயிர்களுக்கு அத்துவாக்கள் எனப்படும் அறுவழித் தொடர்பினையும், தூய்மை செய்து, மலங்களை ஒழித்து யாண்டும் நீக்கமற நிற்கும் சிவம் விளங்குமாறு ஞானத்தைத் தோற்றுவித்துப் பிறவியை ஒழிப்பன். அவ்வாறு தூய்மை செய்தற்குரிய வழிகள் மந்திரம் முதலிய ஆறு அத்துவாக்களாகும். இவை ஆறும் ஒன்றில் ஒன்று அடங்க இறுதியாய் கலை, சிவசத்தியில் அடங்கும். எனவே ஆறு அத்துவாக்கள், வினையை ஈட்டுதற்கும், இறைவனது திருவடிகளை அடைதற்கும் வழிகளாக அமைவதால் 'வழி' எனப்பட்டது. (சித்தியார்; 258)

> *"...................அத்துவாக்கள் இரு மூன்றும் பாழாக*
> *ஆணவம் ஆனபடலம் கிழித்து அறிவில்*
> *காணரிய மெய்ஞ்ஞானக்கண் காட்டி..........."*
>
> *(க.க.வெ, 25–26)*

என்ற கண்ணிகளில் இக்கருத்தைக் குமரகுருபரர் எடுத்துரைக்கிறார்.

## முடிவுரை

> *"கந்தர் கலிவெண்பா என்ற இந்நூல் சாத்திர மணம்*
> *தோத்திர மணம், வரலாற்று மணம் ஆகிய*
> *மும்மணங்களும் ஒருங்கு கமழ நிற்பது.........இந்நூலை*
> *நாளும் வழிபாட்டு நூலாகக் கொள்வார், மண்ணில்*
> *நல்லவண்ணம் வாழ்வர். அவர் எண்ணும் நல்ல கதிக்கு*
> *யாதும் ஓர் குறைவிலை என்பது ஒருதலை"*
>
> *(க.க.வெ.உரை, பக்.4–5)*

என்பர் கு.சுந்தரமூர்த்தி.

எனவே, தமிழ் மக்கள் கந்தர்கலிவெண்பா நூலை ஓதி உணர்ந்து முருகனருள் பெற்று உய்வார்களாக!

## 21. கார்த்திகை ஒளித் திருவிழா

### முன்னுரை

சமயாசாரியருள் முதல்வரான திருஞான சம்பந்தப் பெருமான், தம் தேவாரப் பதிகங்களில் ஒன்பதாவது பாடல்தோறும் திருமாலும் நான்முகனும் இறைவனுடைய அடிமுடி தேடிய வரலாற்றைத் தவறாமல் பாடுவர்.

*"தாணுதல் செய்திறை காணிய*
*மாலொடு தண்டாமரை யானும்*
*நீணுதல் செய்தொழி யந்நிமிர்ந்*
*தானென துள்ளங்கவர் கள்வன்"*

திருமாலும் பிரமனும் முறையே இறைவனின் திருவடியையும் திருமுடியையும் காண வேண்டிப் பேருரு எடுத்துத் தேடியும் காணாது தோல்வியுறச் சோதியுருவாய் வெளிப்பட்டது இறைவனின் அருளுருவத் திருமேனிச் சிறப்பாகும்.

### மூவகை வடிவங்கள்

உலகப் பொருள்கள் 'உருவம்', 'அருவுருவம்', 'அருவம்' என்ற மூவகைகளில், மனிதர்களால் பகுக்கப்பட்டு அறிந்து அனுபவிக்கப்படுகின்றன.

மெய்யுணர்வு பெற்ற ஞானிகளுக்கு ஞானமே வடிவாய் அருளும் இறைவன், மெய்யுணர்வின்றி, உலகியலில் அழுந்தித் துன்புறும் உயிர்கள் தன்னையறிந்து உய்யும் பொருட்டுத் தடத்த நிலையில் 'உருவம்' 'அருவுருவம், அருவம்' என்ற மூவகையிலும் வெளிப்பட்டு அருளுகின்றான்.

*"அருவமும் உருவாரூபம் ஆனதும் அன்றிநின்ற*
*உருவமும் மூன்றும் சொன்ன ஒருவனுக்கு உள்ளவாமே" (58)*

என்பது சிவஞான சித்தியார்.

உருவத்திற்கும் அருவத்திற்கும் இடைப்பட்ட 'அருவுருவம்' இறைவனின் தொன்மை வடிவமான சிவலிங்கத் திருமேனியாகும். குணமும் குறியும் யாவையும் கடந்த பேரொளி வடிவினனாகிய சிவனை, ஒரு குறியின்கண் நிறுத்தி வழிபடும் பொருட்டுத் திகழ்வதே இலிங்கத் திருமேனியாகும்.

*"காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்*
*நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்*
*நாணாது தேடிய மால் நான் முகனும் காண நடுச்*
*சேணாரும் தழற்பிழம்பாய்த் தோன்றியது...."*

விண்ணுக்கும் பாதாளத்துக்கும் இடையே திருமாலுக்கும் நான்முகனுக்கும் அருள் செய்யுமாறு தோன்றிய வடிவமே தழல் பிழம்பாகிய சிவலிங்கத் திருவடிவம்..

மலரவனும் திருமாலும் தம்மிடையே யார் பெரியவர் என்ச் சண்டையிட்டனர். அவர்களுடைய தன்முனைப்பை நீக்கும் பொருட்டுச் சிவன், மண்ணுக்கும் விண்ணுக்கும் இடையில் தீப்பிழம்பாக நின்று, பிரமனைத் தன் திருமுடியைக் கண்டு வருமாறும், திருமாலைத் தன் திருவடியைக் கண்டு வருமாறும் பணித்தார். பிரமன் அன்னப் பறவையாய் மாறி விண்ணில் பறந்து சென்றும் இறைவனுடைய திருமுடியைக் காண முடியாமல், ஆனால் கண்டதாகப் பொய் உரைத்தார்; திருமால், பன்றி வடிவெடுத்துப் பூமியை அகழ்ந்து பார்த்தும் இறைத் திருவடிகளைக் காணாது திகைத்தார்.

**திருவண்ணாமலைத் திருத்தலம்**

வண்மலரானும் வையமளந்தானம் நண்ணலரியான், இருவரும் காண, சோதி ரூபமாய் நின்ற இடமே திருவண்ணாமலைத் திருத்தலமாகும். இந்நிகழ்ச்சியை,

*"வேழ வெண் கொம்பொசித்த மாலும் விளங்கிய நான்முகனும்*
*சூழவெங்கும் நேட வாங்கோர் சோதியுளாகி நின்றாய்"*

என்று திருஞான சம்பந்தர் பாடுகின்றார்.

இப்புராண வரலாற்றை உமாபதிசிவாசாரியார்,

*"பூமேவும் உந்திப்புயல் வண்ணன் பொற்பதுமத்*

*தார்மேவும் மார்பன் சதுமுகத் தோன்தாம்மேவிப்*
*பன்றியும் அன்னமுமாய்ப் பாரிடந்தும் வான்பறந்தும்*
*என்றும்அறியா இயல்பினான்"*

*(நெஞ்சுவிடுதூது, கண்ணி, 1–2)*

என்று குறிப்பிடுகின்றார்.

பஞ்ச பூதத்தலங்களில் திருவண்ணாமலை நெருப்புத் தலமாகும். கார்த்திகை ஒளித்திருநாளன்று, 2669 அடி உயர மலையுச்சியில் 'மகா தீபம்' ஏற்றப்படுகிறது.

தீபத் திருவிழாவின் பத்தாவது நாளில் அதிகாலையில் கோயிலில், விநாயகர், முருகர், அண்ணாமலையார், உண்ணாமுலையம்மை, சண்டிகேசுவரர் ஆகிய பஞ்சமூர்த்திகளுக்குச் சிறப்புப் பூசைகள் செய்து முடித்தபின் பஞ்சபூதங்களைக் குறிக்கும் வகையில் ஐந்து ஒளி விளக்குகள் ஏற்றப்படும். அதிகாலை பஞ்ச பூத ஐக்கியத்தைக் குறிக்கும் வகையில் 'பரணி தீபம்' ஏற்றப்படும். பின் பரணி தீபம் அம்மன் சந்நிதிக்குக் கொண்டு வரப்பட்டுத் தீபாராதனை நடத்தப்படும். பின் ஒவ்வொரு சந்நிதியிலும் பரணி தீபத்தைத் கொண்டு விளக்குகள் ஏற்றப்படுகின்றன.

மகாதீபத்துக்கான நிகழ்ச்சிகளில், முதலில் பஞ்ச மூர்த்திகள் கொடி மரத்தருகே எழுந்தருளுகின்றனர். இறைவன் தன் சத்திக்கு இடப்பாகத்தை வழங்கியதைக் குறிக்கும் வகையில் அர்த்த நாரீசுவரர் எழுந்தருளித் தாண்டவமாடும் நிகழ்ச்சி நடைபெறுகின்றது அதே வேளையில் 'மகாதீபம்' ஏற்றப்படும்.

## இலிங்கோத்பவ திருமேனி

அடிமுடி தேடிய வரலாற்றைக் குறிக்கும் 'இலிங்கோத்பவர்' திருமேனி எல்லாச் சிவாலயங்களிலும் விமானத்தின் மேற்குப்பக்கம் இருக்கும்; மேற்கு நோக்கிய சந்நிதியெனில் கிழக்குப் பக்கம் இருக்கும்; இலிங்கோத்பவரின் திருமுடிக்குமேல் பிரமனின் வடிவமும், திருவடிக்குக் கீழ் திருமாலின் பன்றி வடிவமும் இறைவனின் அடிமுடிதேடுவதாகச் சித்திரிக்கப்பட்டிருக்கும்.

## அனல் உருவ வழிபாடு

சிவபெருமானின் அனல் உருவ வழிபாட்டைக் குடமுழுக்கு நாட்களில் வேள்விச் சாலையில் செய்யப்படும் வேள்வியின் மூலம் அறியலாம். (மா

சிவகுருநாத பிள்ளை, சிவ வடிவங்கள், ப.62) இறைவனின் தீப்பிழம்பு வடிவத்தைத் திருமுறை வாணர்கள் பலவாறு போற்றித் துதிக்கின்றனர்.

*"சோதியே சுடரே சூழொளி விளக்கே"*
*"தனிச் சுடரே" (மணிவாசகர்)*
*"தூயானைச் சுடர்ப் பவளச் சோதியானை" (அப்பர்)*
*"செழுஞ்சுடரே" (சுந்தரர்)*

திருக்கோயிலில் விளக்கிடுவதன் மேலான பயன், ஞானமாகிய மெய்ந்நெறியே என்று தேவாரம் இயம்புகிறது.

**முடிவுரை**

மேலே கூறியவற்றால் நாம் அறியத் தகுவன:

1. உருவநிலையில் அருளும் இறைவன், உருவத்தைக் கடந்த நிலையிலும் உயிர்களுக்கு அருள் செய்கின்றான்.

2. மாலவனும், மலரவனும் தாமே தலைவர் என்று தன்முனைப்புக் கொண்டனர்; 'தான்' என்ற தன்முனைப்பு (ஆணவம்) இறைவனை உணரவிடாமல் செய்கிறது. ஆணவம்—இருள்;திருவருள்—ஒளி.

*"இடர் கெடுத்து என்னை ஆண்டு கொண்டு என்னுள்*
*இருட் பிழம்பு அற எறிந்து எழுந்த*
*சுடர்மணி விளக்கின் உள்ளொளி விளங்கும்*
*தூய நற்சோதியுள் சோதீ" (திருமாளிகைத் தேவர்)*

3. உயிர்கள் பசுஞானத்தாலோ, பாசஞானத்தாலோ, பரம்பொருளைக் காணஇயலாது. இறையருளாகிய பதி ஞானத்தால் மட்டுமே காண முடியும். ஊனக்கண்ணால் உணர முடியாத பதியை ஞானக் கண்ணால், மட்டுமே நாட முடியும். நேசமோடு உள்ளத்தே நாடிப் பாத நிழல் கீழ் நிற்க வேண்டும்.

4. கல்வி கேள்விகளுக்கு அதிபதி பிரமன்: செல்வத்துக்கு அதிபதி—நாரணன். இதனால், கல்வியாலோ, செல்வத்தாலோ இறைவனை அடைய இயலாது என்று அறியலாம். திருவருள் வழி நின்று, சீவபோதம் நீங்கிய நிலையில் சிவபோதத்தில் அழுந்தியே இறைவனை உணரலாம்.

5. நெருப்பு அழுக்கை நீக்கி எரிக்கும் தன்மையுடையது போல, முதல்வனும் உயிர்களின்ஆணவ அழுக்கைப் போக்கி வினைகளை

எரிப்பவன்.

6. விளக்கு, இருளையகற்றி, ஒளியைத் தந்து நம்மை மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறது. அது போல இறைவன் நம்மிடமுள்ள அறியாமை இருளை நீக்கி, அறிவு நெறியிற் செலுத்தி, நம்மைப் பேரின்ப வெள்ளத்தில் ஆழ்த்துகின்றான்.

7. எரிந்து கொண்டிருக்கும் விளக்கிலிருந்து பல விளக்குகள் ஏற்றப்படுகின்றன.

## 22. மெய்கண்ட சாத்திரங்கள்

**முன்னுரை**

பழந்தமிழரின் வாழ்க்கையிலும், பண்பாட்டிலும் சைவ சித்தாந்த நன்னெறி ஊடுருவிக் கலந்து இருந்தது. சைவ சமயத்தில் கொள்ளப்படும் அடிப்படை உண்மைகளையும் கொள்கைகளையும் முறைப்படுத்தி உணர்த்தும் நூல்கள் 'சித்தாந்த சாத்திரங்கள்' எனப்படும். பிற்காலத்தில் பற்பல சமயத்தவரால் வேறு வேறு கொள்கைகள், முடிவுகள் தமிழகத்தில் பிரசாரம் செய்யப்பட்டதால், அவற்றில் மக்கள் மயங்காது இருக்கும் பொருட்டுச் சிவஅனுபூதிச் செல்வர்கள் தத்தம் காலநிலைக்கேற்றவாறு அருளிச் செய்த நூல்களே 14 சித்தாந்த சாத்திரங்களாகும். (கு.சுந்தரமூர்த்தி, திருக்களிற்றுப்படியார் உரை, ப.2). இந்நூல்கள் "மெய்கண்ட சாத்திரங்கள்" எனவும் அழைக்கப்படுகின்றன. 14 சாத்திரங்களிலும் சிவஞானபோதம் தலையாய நூலாகத் திகழ்வதால், சிவஞானபோதத்தை இயற்றியவரான மெய்கண்டாரது பெயரால் "மெய்கண்ட சாத்திரங்கள்" என அழைக்கப்படுகின்றன.

சந்தானாசாரியர்களான மெய்கண்டார், அருள் நந்திசிவம், உமாபதிசிவம் இவர்களால் அருளிச் செய்யப்பட்ட 11 நூல்களும், திருவதிகை மனவாசகங் கடந்தார் அருளிய உண்மை விளக்கமும், இவர்கள் காலத்துக்கு முன்னரே சிவானுபூதிச் செல்வர்களால் இயற்றப்பட்ட உபதேச நூல்களாகிய திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் எனும் நூல்களும் ஆகிய 14 நூல்களும் மெய்கண்ட சாத்திர வரிசையில் அடங்கும். இந்நூல்களை வரிசைப்படுத்தும் பாடல் ஒன்று:

*"உந்திகளிறே உயர்போதம் சித்தியார்*<br>
*பிந்திருபா உண்மை பிரகாசம் – வந்த அருட்*<br>
*பண்புவினா போற்றி கொடி பாசமிலா நெஞ்சுவிடு*<br>
*உண்மை நெறி சங்கற்பம் உற்று"*

1. திருவுந்தியார்

2. திருக்களிற்றுப்படியார்
3. சிவஞானபோதம்
4. சிவஞான சித்தியார்
5. இருபா இருபஃது
6. உண்மை விளக்கம்
7. சிவப்பிரகாசம்
8. திருவருட்பயன்
9. வினாவெண்பா
10. போற்றிப் பஃறொடை
11. கொடிக் கவி
12. நெஞ்சுவிடுதூது
13. உண்மை நெறி விளக்கம்
14. சங்கற்ப நிராகரணம்

**திருவுந்தியார்**

ஆசிரியர் திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் (கி.பி.12 ஆம் நூற்றாண்டு); 45 கலித்தாழிசைகளால் ஆனது. 'உந்திபறத்தல்' என்பது விளையாடும் பெண்கள் இருகைகளையும் இருமருங்கும் நேராக நீட்டிக் கால் விரல்களின் மேல் நின்றுபாடிச் சுழன்று ஆடும் ஓர் ஆட்டவகை என்பர்; இது பல்வரிக் கூத்துக்களுள் ஒன்று. பாடலில் முதல் இரண்டு அடிகளை ஒரு பெண் கூற, கருத்து வகையில் அவற்றைத் தொடர்ந்து முற்றுவிப்பதாய் மூன்றாம் அடியை மற்றொருத்தி கூறுவதாகக் கொள்ளும்படி தொடர்கள் அமைந்து உள்ளன. திருவாசகத்திலும் இவ்வமைப்புப் பாடல்கள் உள்ளன. (திருவாசகம்; திருவுந்தியார்)

*"அகளமாய் யாரும் அறிவரிது அப்பொருள்*
*சகளமாய் வந்ததென்று உந்தீபற;*
*தானாகத் தந்ததென்று உந்தீபற;" (1)*

இறைவன் குருவாக வந்து உயிர்களை ஆட்கொள்வதை இப்பாடல் உணர்த்துகிறது.

**திருக்களிற்றுப்படியார்**

ஆசிரியர் திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார்; இந்நூல்

திருவுந்தியாரின் வழிநூல். 100 வெண்பாக்களால் ஆனது. பெரியபுராணத்தில் கூறப்பட்டிருக்கும் வன்தொண்டு, மென்தொண்டு பற்றி விளக்குகிறார். நாயன்மார்களைப் பற்றி விளக்குகிறார்.

**சிவஞானபோதம்**

14 சாத்திரங்களுள் தலைமை வாய்ந்ததாகத்திகழும் சிவஞான போதம் மெய்கண்டாரால் இயற்றப்பட்டது. பொது, சிறப்பு எனும் இரு அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல் என நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள் உண்மைகளையும், அவற்றின் இயல்புகளையும் எடுத்துக் கூறுவது; 12 நூற்பாக்களால் ஆகியது.

*"சிறிய ஆடியிற் பெரிய மால் வரைப்பொருள்*
*செறிந்தாங்கு"*

அறிவு நூற்பொருள் அனைத்தையும் தன்கண் அடங்கக் கொண்டு,அரிதின் உணர்தற்குரிய இயல்பினதாய் விளங்குவது (ஆ. ஆனந்தராசன், சிவஞான முனிவரின் உரைநெறிகள்).

சுருங்கிய யாப்பு அமைப்பில் மிகப்பெரிய இயல்பினதாய் விளங்கி, ஞான நூற்பொருள் அனைத்தையும் தன்னகத்தே கொண்டு விளங்குவது சிவஞானபோத நூல் ஆகும். மெய்யறிவை உணர்த்தும் இறைவன், யோகவடிவினராய், தென்முகக் கடவுளாய் (தட்சிணா மூர்த்தி) வீற்றிருந்து, தம் கையில் சிவஞானபோத நூலைக் கொண்டிருக்கிறார் என்று கூறுவர்.

இந்நூலின் சிறப்பைக் கூறும்போது, கதிரவன் தன் கதிர்களைப் பரப்பி, புற உலகை மூடியிருக்கும் இருளை நீக்கி, உலகப் பொருள்களைக் காட்டுவது போல, சிவஞான போத நூலானது, ஆன்மாக்களின் அறிவை மறைக்கின்ற அகஇருளாகிய ஆணவத்தை நீக்கி, உலகப் பொருள்களின் உண்மை இயல்புகளைத் தெற்றெனக் காட்டுவது என்று சிவஞானபோத நூலைக் கதிரவனுக்கு ஒப்பாகக் கூறுவர்.

*"மலர்தலை உலகின் மாயிருள்துமியப்*
*பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்*
*காண்டல் செல்லாக்கண்போல் ஈண்டிய*
*பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு கண் இருள் தீர்ந்து*

*அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி*
*மயர்வற நந்தி முனிகணத்து அளித்த*
*உயர்சிவ ஞான போதம் ..........”*

*(சிவஞானபோதம், சிறப்புப்பாயிரம்)*

**அருள்நந்தியின் இருநூல்கள்**

மெய்கண்டாரின்சீடர் அருள்நந்தி சிவாசாரியர்; இவர் சிவஞான சித்தியார், இருபா இருபஃது என்ற இரு நூல்களை இயற்றியுள்ளார்.

*“சிவத்திற்குமேல் தெய்வமில்லை*
*சித்திக்குமேல் நூல் இல்லை”*
*“பார்விரித்த நூல்எல்லாம பார்த்தறியின் சித்தியிலே*
*ஓர் விருத்தப் பாதி போதும்”*

என்பர். இந்நூல் சிவஞானபோதத்தின் வழிநூலாகும்; இந்நூல் பரபக்கம்,சுபக்கம் என இரு பிரிவுகளை உடையது. பரபக்கம் 301 திருவிருத்தங்களை உடையது. வேற்றுச் சமயக் கருத்துக்களைக் கூறிப் பின் மறுக்கிறது.

பரபக்கத்தில் தொடர்ச்சியாகச் சுபக்கம் இருக்கிறது.

**சுபக்கம்**

சைவசித்தாந்தக் கொள்கைகளைக் கூறுகிறது. சித்தியார் சிவஞானபோதத்துக்குச் செய்யுள் வடிவிலமைந்த ஓர் உரையாக அமைந்தாலும், அதன் வழிநூலாகவே சைவமரபு ஏற்றுக் கொண்டது; எனினும், அதில் ஒரு தனித்தன்மையும் சுயேச்சையான கட்டமைப்பும் உண்டு. 328 திருவிருத்தங்களை உடையது.

**சிவன் ஆறு சமயங்களின் தலைவன் ஆறு**

சிவன், ஒவ்வொரு சமயத்திற்கும் தனித்தனியே உண்மைப் பொருளானவன்; வேத ஆகமங்களுக்கு அப்பாற்பட்டவன்; அறிவின் ஊற்றுக்கண்; அம்மையும் அப்பனுமாய் எங்கும் நிறைந்தவன். (பாயிரம்,1)

**இந்நூலுக்கு அதிகாரிகள்**

உயிர்களைச், சாமுசித்தர், வைநயிகர், பிராகிருதர் என்ற மூன்று பிரிவாகப் பிரித்து, சாமுசித்தர் முற்செய்தவத்தாலும், இறைவனுடன்

ஒன்றிய யோக நிலையாலும் ஞானம் பெற்று இறைவனை உள்ளுணர்ந்து அவனை அடைவர் என்றும்; பிராகிருதர், பிரகிருதியின் காரியமான மாயா உலகில் மயங்கி அவற்றிலேயே உழல்வர் என்றும்; இடையில் உள்ள வைநயிகர் வீடுபேற்றில் ஆர்வங் கொண்டு இறைச் சித்தம் கொண்டு இருப்பர், அவர்களுக்கே இந்நூல் உரியது என்றும் கூறுவர் அருள்நந்தி சிவாசாரியர்.

## இருபா இருபஃது

அருள்நந்தி சிவத்தின் இந்நூல் 20 செய்யுட்களை உடையது. ஒற்றைப் படை எண்ணுள்ளவை வெண்பா யாப்பிலும், இரட்டைப்படை எண்ணுள்ளவை ஆசிரியப்பாவில் அந்தாதித் தொடையிலும் அமைந்துள்ளன. தம்மை ஆட்கொண்டருளிய மெய்கண்டார்பால் தமக்குத் தோன்றிய ஐயங்களை விண்ணப்பிப்பது போலப் பல்வகை வினாக்களையும் எழுப்பிக் குறிப்பால் அவற்றிற்குரிய விடைகளையும் தெரிவித்து அருளுதல் இந்நூலின் சிறப்பாகும்.

## குருவே சிவம்

இந்நூலில் தமது குருவைச் சிவபெருமானாகவே பாவித்துச் சிவனுடைய பெருமைகளையும் செயல்களையும் அவர்மீது ஏற்றிப் பாடுகிறார். கடவுளே வந்து அருள்வதனாலும், குரு கடவுளுக்குச் சமம் என்பதாலும் அவ்வாறு பாடுகிறார்.

"சிவபெருமானே தனது நெற்றிக் கண்ணையும், திருநீல கண்டத்தினையும் மறைத்து, திருவெண்ணெய் நல்லூரில் மெய்கண்ட தேவர் எனும் பெயரும் திருவுருவும் தாங்கி, எழுந்தருளி வந்தார். உலக மக்களின் மலமாசுகளைப் போக்கியருள்கிறார்" (செ.1) என்பர்.

## இறைவன் உயிரோடு கொண்டுள்ள இயைபு

உலகியலில் இருந்து வேறுபட்டவர்களோடு இறைவன் ஒன்றாயிருக்கிறான். உலகியலில் ஆழ்ந்து விட்டவர்களிடமிருந்து விலகி இருக்கிறான். அவன். தானே வந்து உயிரோடு கலந்து,

*"ஒன்றாகாமல் இரண்டாகாமல்*
*ஒன்றும் இரண்டும் இன்றாகாமல்"*

இருக்கிறான்.

**உண்மை விளக்கம்**

மெய்கண்டாரின் மாணவரான திருவதிகை மனவாசகங்கடந்தாரால் இயற்றப்பட்ட இந்நூல். சிவாகமப்பொருளை உரைப்பது. இந்நூலாசிரியர், தான் மெய்கண்டாரிடம் வினா கேட்பது போலவும், மெய்கண்டார் அதற்கு விடை அளிப்பது போலவும் நூலை அமைத்துள்ளா ர் (காலம் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு).

இந் நூலில், உயிர்களுக்கு உடம்பாகவும் உலகமாகவும் அமைகின்ற 36 தத்துவங்கள், ஆணவம், கன்மம், மாயை, இறைவனின் திருநடனம், ஐந்தெழுந்து, முத்திநிலை, குருலிங்க சங்கம வழிபாடு போன்றவற்றை ஆசிரியர் விளக்குகிறார்.

• மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கனுள் எட்டு நூல்கள் உமாபதி சிவாசாரியார் இயற்றியவை. அவை பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| 1. சிவப் பிரகாசம் | 2. திருவருட்பயன் | கி.பி. 14ஆம் நூற்றாண்டு |
| 3. வினாவெண்பா | 4. போற்றிப் பஃறொடை | |
| 5. கொடிக்கவி | 6. நெஞ்சுவிடு தூது | |
| 7. உண்மை நெறிவிளக்கம் | 8. சங்கற்ப நிராகரணம் | |

**1.சிவப்பிரகாசம்**

இந்நூல் சிவஞானபோதத்தின் சார்பு நூல்; 100 விருத்தப் பாடல்கள்; பொது அதிகாரம் 50 பாடல்கள்; உண்மை அதிகாரம் 50 பாடல்கள். விநாயகர் மீது காப்புச் செய்யுளும், நடராசர், சிவகாமி அம்மை, முருகக் கடவுள் மீது போற்றியும் பாடுகிறார். மறைஞான சம்பந்தருக்குக் குருவணக்கமும், திருக்கயிலாய பரம்பரை குருவரலாறும் உள்ளது.

**வேதாந்தத் தெளிவே சைவ சித்தாந்தம்**

"புறச் சமயத்தவர்க்கு இருள்போல விளங்காத தன்மையும் அகச் சமயத்தவருக்கு ஒளிபோன்று அறிவு வடிவமாகவும்; அளவை நெறியில் தேர்ந்த சமயமாக விளங்குவது சைவம்" எனப் போற்றுகின்றார் ஆசிரியர்.

**அத்துவிதத் தொடர்பு**

இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பைப் பலர் பலவிதமாகக்

கருதுகின்றனர்.

'பொன்னுக்கும் அணிகலனுக்கும் உள்ள தொடர்புபோல் அபேதம்' என்பர் சங்கரர்.

'இருளும் ஒளியும் போல் பேதமானது' என்பர் மத்துவர்.

'சொல்லும் பொருளும் போலப் பேதாபேதத் தொடர்பு' என்பர் இராமானுசர்.

இம் மூன்று விளக்கங்களையும் மறுத்து, இறைவன் உயிரோடு, உடலும் உயிரும் போல ஒன்றாகவும்; கண்ணொளியும் சூரிய ஒளியும் போல வேறாகவும்; உயிரறிவும் கண்ணொளியும் போல உடனாகவும் உள்ளான் என்பர் உமாபதி சிவாசாரியர்.

ஆன்மாக்களின் வினைப்பயன்கள், ஆன்மாக்களை வந்து சேரும் வாயில்கள் மூன்று;

**1.ஆதி பௌதிகம்**

இயற்கைச் சீற்றங்களால் வருவது.

**2. ஆதிதைவிகம்**

கடவுள், பேய், பிசாசுகளால் வரும் துன்பம்.

**3. ஆதி ஆன்மிகம்**

தம்மாலும் பிறராலும் வரும் துன்பம்; இவற்றையும், 3 தத்துவங்களின் தோற்றத்தையும், ஒடுக்கத்தையும், விவரிக்கிறார். மூவகை உயிர்களையும், அவற்றிற்கு இறைவன் அருளும் முறையையும் கூறுகிறார்.

## 2. திருவருட் பயன்

சைவ சித்தாந்தத்தை முதலில் பயில விரும்புபவர்க்கு வாயிலாக, எளிமையான யாப்பு அமைப்பில் அமைந்து இருப்பது இந்நூல். 100 குறள் வெண்பாக்களை உடையது. விநாயகர் மீது காப்புச் செய்யுள். இறையருளின் சிறப்பு, அதன் இன்றியமையாமை, திருவருளால் உயிர்பெறும் ஆன்ம விடுதலை இவற்றையும் கூறுகிறது. பதிமுது நிலை, உயிரவைநிலை, இருள்மலநிலை, அருளது நிலை, அருளுரு நிலை, அறியும் நெறி, உயிர் விளக்கம், இன்புறு நிலை, ஐந்தெழுத்து அருள்நிலை, அணைந்தோர்

தன்மை எனப் பத்து அதிகாரங்கள், பத்துப் பத்து குறள்களை உடையதாக உள்ளன.

### 3. வினா வெண்பா

வெண்பா யாப்பு வடிவில் ஆனது. தமது குருவாகிய மறைஞான சம்பந்தரை வினவுவதாக வினாக்கள் அமைத்து அதற்கு விடையளிக்கிறார். சைவ சித்தாந்த நெறியில் காணப்படும் சில சிக்கல்கள், முரண்பாடுகள் ஆகியன வினாவடிவில் தொகுக்கப்பட்டு, அம் முரண்பாடுகளை நீக்கும் வகையும் கூறப்படுகிறது.

### 4. போற்றிப் பஃறொடை

95 கண்ணிகளால் ஆன இந்நூல் 'சாத்திரங்களில் தோத்திரம்' எனப்படுவது. பஃறொடை வெண்பாவால்ஆயது. இறைவன், உயிர்களுக்குச் செய்யும் கருணையைப் போற்றி, போற்றி என 14 முறை சொல்வதாலும் 'போற்றிப் பஃறொடை' எனப்படுகிறது.

சிவன், அருள் காரணமாக ஐந்தொழில்களை இயற்றுகிறார். உயிர்கள் பாசத்திலிருந்துவிடுபடுவதற்கு, இறையருள், இன்பதுன்ப அனுபவங்களுக்காக வேண்டிய சூழ்நிலைகளை அமைத்துத் தருகின்றது. உயிர், அனுபவம் பெற்று, முதிர்ச்சி அடைகின்றபோது, உயிரின் உள்ளிருந்து திருவருளானது, குருவடிவில் வெளிப்படுகின்றது. குரு இறைவனே ஆவர். போற்றிப் பஃறொடை, வினா வெண்பா இரண்டிலுமே, சிவனின் செயல்கள் மறைஞான சம்பந்தர்மேல் ஏற்றிச் சொல்லப்படுகின்றன.

திருமால், பிரமன் அடிமுடி தேடியது, மும்மல இயல்பு, உயிர்களின் ஐந்தவத்தைகள் பற்றியும் விளக்குகிறது.

### 5. கொடிக் கவி

திருக்கோயிலில் கொடியேற்றுவதன் தத்துவத்தைக் குறிக்கும். இந்நூல், தில்லையில் கொடியேறுவதன் பொருட்டுப் பாடப் பெற்றது.

கொடிமரம் – சிவவடிவம்

கொடிச்சீலை – மறைப்புச் சக்தி

வரையப்பட்ட இடபம் –உயிர்

கொடிக்கயிறு – அருள்

அதனோடு இயைந்த தருப்பைக் கயிறு – பாசம்

தருப்பைக் கயிறான பாசத்தோடு இணைந்துள்ள கொடிச் சீலையில் இணைப்புண்டு கிடக்கின்ற உயிரானது கொடிக்கயிறான அருளின் துணை கொண்டு, கொடி மரம் ஆகிய சிவத்தைச் சேர வேண்டுமென்று கூறுகிறது.

ஐந்தெழுத்தைப் பலவிதமாக விவரித்துக் கூறுகிறது.

அஞ்செழுத்து – சிவாயநம

எட்டெழுத்து – ஓம் ஆம் ஔம் சிவாயநம

ஆறெழுத்து – ஓம் நமசிவாய

பிஞ்செழுத்து – 'வ' (சிவத்தைச் சார்ந்திருப்பதால்; ஏனெனில் திருவருள் தனித்துச் செயல்பட முடியாது)

பெருவெழுத்து – 'சி' – இறுதியாக ஆன்மா அடைய வேண்டியது;

பேசும் எழுத்து – 'வ' (தனு ஆதிகளைத் தருவது; உடல். கருவி, கரணங்கள் முதலியவற்றைத் தருவது)

பேசாஎழுத்து – 'சி' (சிவத்தின் சொரூப நிலையான உண்மையான நிலை)

## 6. நெஞ்சுவிடுதூது

அகப் பொருட்சுவைமிக்க இந்நூல், தமிழில் முதல் தூது நூல் எனும் பெருமை உடையது. தம்மைத் தலைவி ஆகவும், தன் ஞானாசிரியரைத் தலைவனாகவும் பாவித்து, அவர் அருளைப் பெற்றதன் அடையாளமாக, அவரிடமிருந்து ஒரு மாலையை வாங்கி வரும்படித் தம் நெஞ்சைத் தூதாக அனுப்பும் முறையில் இந்நூல் அமைந்திருப்பதால் நெஞ்சுவிடுதூது எனப்படுகிறது. இந்நூல் இறைவனுக்குத் 'தசாங்கம்' கூறுகிறது.

1. நற்குணமே குணக் **குன்று**
2. இன்பமே **ஆறு**
3. ஆகமங்கள் எட்ட முடியாத **நாடு**

4. சிவஞானமே **ஊர்**

5. அருளே **மாலை**

6. சத்தியே **குதிரை**

7. ஞானமே **யானை** (நான்கு மறைகளைத் தன் கொம்புகளாக உடைய ஞானம்)

8. ஆறு சமயங்களும் அடைய முடியாதது அதன் **கொடி.**

உயிர்களின் துன்பத்தை நீக்கும் உயர்த்தப்பட்ட விடைக்கொடி

9. முரசு – அன்பர் உள்ளத்தில் முழங்கும் **முரசு**

10. **ஆணை** : எல்லா உலகங்களிலும் ஊடுருவி அவற்றுக்கு அப்பாலும் கடந்து நிற்கும் அவனது **ஆணை.**

## 7. உண்மை நெறி விளக்கம்

இறைவனை அடைவதற்குரிய ஞானப் பாதையைப் பத்துப் படிநிலைகளாகக் கூறுகிறது.

**ஞானப்பாதையின் 10 படி நிலைகள் [தசகாரியம்]**

| | |
|---|---|
| 1. தத்துவ ரூபம் | 2. தத்துவ தரிசனம் |
| 3. தத்துவ சுத்தி | 4. ஆன்ம ரூபம் |
| 5. ஆன்ம தரிசனம் | 6. ஆன்ம சுத்தி |
| 7. சிவரூபம் | 8. சிவ தரிசனம் |
| 9. சிவயோகம் | 10. சிவ போகம் |

## 8. சங்கற்ப நிராகரணம்

ஒன்பது சமயங்களின் வாதமும் மறுதலையும் மாறி மாறி வருகின்றன. 9 சமயத்தவரின் கொள்கைகள், அம்மதத்தவரால் கூறப்பட்டு, அடுத்துவரும் சமயத்தவரால் மறுக்கப்படுகின்றன.

மறுக்கப்படும் சமயங்கள்

மாயாவாதம் (புறச்சமயம்)

ஐக்கிய வாதம் (அகப் புறச்சமயம்)

மற்றவை :

பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சங்கிராந்தவாதம், ஈசுவர அவிகார வாதம், நிமித்த காரண பரிணாம வாதம், சைவ வாதம் முதலியனவாகும்.

சங்கரருடைய மாயாவாதம், சிவஞான சித்தியார் பரபக்கத்திலும் மறுக்கப்பட்டு, சங்கற்ப நிராகரணத்திலும் மறுக்கப்படக் காரணம், அருள் நந்தி சிவாசாரியரின் காலத்தில் ஓங்கியிருந்த மாயாவாதம், உமாபதி சிவாசாரியாரின் காலத்திலும் ஓங்கியிருந்ததே ஆகும்.

## முடிவுரை

மெய்கண்ட சாத்திரங்கள், சைவ சித்தாந்தம் கூறும் பதிபசுபாசமாகிய முப்பொருள் உண்மையையும், அவற்றின் இயல்புகளையும், அளவைமுறையில் தெளிவுற விளக்குகிறது தமிழர்தம் மெய்யியல் நூல்களான இவற்றைக் கண்ணுற்ற டாக்டர் ஜி.யு. போப் அவர்கள், "சைவசித்தாந்தம் தமிழர்தம் பேரறிவின் பெரும்பயன்" என்று போற்றுகின்றார்.

## 23. தேவாரம்-தொகுப்பும் வரலாறும்

### முன்னுரை

சிவபெருமான் புகழ்பாடும் பன்னிரு திருமுறைகளும் பாடுவோரையும், பாடக் கேட்போரையும் இறையுணர்வில் ஈடுபடுத்தி, பெறற்கரிய திருவருட் செல்வத்தைப் பெற வழிகாட்டும் திசைகாட்டியாக விளங்குகின்றன. மேலும் தமிழ் நாட்டின் சமயத்திற்கும் இலக்கியத்திற்கும் உயிர் நாடியாக விளங்கி, தமிழ்நாட்டின் வரலாற்றை மாற்றி அமைத்து இருக்கின்றன.[1]

### திருமுறை: சொற்பொருள்

'திரு' என்ற சொல், திருவை அடையச் செய்யும் நூலுக்குப் பெயராயிற்று. திரு–சிவம்:

"சிவமே பெறும் திரு எய்திற்றிலேன்" என்பர் மணிவாசகர். அவர் சிவத்தைத் 'திரு' என்று குறிக்கின்றார்.

'திரு' என்ற சொல்லுக்கு, உண்மை, அறிவு, ஆனந்தம் என்ற மூன்று பொருள்களும் உண்டு. 'கண்டவரால் விரும்பப்படும் தன்மை, நோக்கம்' என்று திருக்கோவையாருக்கு உரைகண்ட பேராசிரியர் குறிக்கின்றார்.

பரம்பொருளை அடைய வழி கூறும் நூலே திருமுறை எனப்படும். எனவே தெய்வத்தைப் பற்றிப் பாடப் பெற்ற பாடல்கள் கொண்ட நூல்களின் தொகுப்பு திருமுறைகளாகும்.

முதல் 7 திருமுறைகளின் தொகுப்பு 'தேவாரம்' எனப்படுகிறது.

### தேவாரம்: சொற்பொருள்

தே+ஆரம்–தெய்வத்திற்கு மாலை போன்றது; மலரை இணைத்து மாலையாகச் சூட்டுவது போல, சொற்களை இணைத்துச் சொல்மாலையால் புகழே மணமாக இறைவனுக்குச் சூட்டப்படும் மாலை.[2]

தே+வாரம்; தே–தெய்வம்; வாரம்–அன்பு; தெய்வத்திடம் அன்பை

விளைவிப்பது.

*"வாரமாய் வணங்குவார் வல்வினைகள் மாயுமே"*
என்பர் திருஞானசம்பந்தர்.

வாரம்–உரிமை; இறைவனுக்கும் உயிர்கட்கும் உள்ள தொடர்பை உரிமை உள்ளவாறு தெளிவித்து உயிர்கள் பயன் பெற உதவும் பாடல்கள் கொண்ட நூல்.

தேவாரம் என்ற சொல், வழிபாடு என்ற பொருளிலும் வழங்கியுள்ளது. எனவே, வழிபாட்டுக்குரிய இனிய இசைப் பாடல்கள் என்பதே தேவாரம் என்பதன் பொருள் (அடியார்க்கு நல்லார் உரை)

தேவாரம் என்ற பெயர் வழக்கு, இரட்டைப் புலவர்கள் பாடியுள்ள ஏகாம்பர நாதர் உலாவில் தான் முதன்முதலில் இலக்கியத்தில் காணப்படுகிறது.

*"மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்*
*தேவாரம் செய்த திருப்பாட்டும்"*

என்பது அத்தொடர்.

இயலிசையில் வல்லவராகிய தேவார மூவர் அருளிய திருப்பதிகங்கள் முழுவதும் 'தேவாரம்' என்ற பெயரால் ஒருங்கே தொகுக்கப் பெற்று 'பண்முறை' 'தலமுறை' என இருவகையில் வரிசைப்படுத்தப் பெற்றுத் திகழ்கின்றன.

இவற்றுள் 'பண்முறை' என்பது, திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்னும் மூவரருளிய பதிகங்களில் அமைந்துள்ள பண்களை வரிசைப்படுத்தி, வகைப்படுத்தி ஒவ்வொரு பண்ணுக்கும் உரிய பதிகங்களைக் கட்டளை விகற்பத்திற்கு இயைய வரிசைப் படத்தொகுத்து, ஏழு திருமுறைகளாக ஆக்கிய பழைய முறையாகும்.

தலமுறையென்பது, 'கோயில்', 'திருவேட்களம்' முதலாகத் திருப்பதிக் கோவையிற் குறித்த முறையை ஒட்டி, தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களையெல்லாம் தில்லைப் பெருங்கோயில் முதலாக வரிசைப்படுத்தி அந்தந்தத் தலங்களுக்குரிய தேவாரப் பதிகங்களை முற்குறித்த ஏழுதிருமுறைப் பாகுபாட்டிற்கேற்ப முறைப்படச் சேர்த்து அமைத்த முறையாகும்.

இவ்விருவகையினுள் பண்முறையமைப்பே பழைய ஏட்டுச் சுவடிகளில் இடம் பெற்றுள்ளது. மூவர் தேவாரத்தை ஏழுதிருமுறைகளாகப் பகுத்து வழங்கும் திருமுறைப் பகுப்புக்கு அடிப்படையாக அமைந்தது இப்பண்முறை அமைப்பே ஆகும்.

தேவாரத் தலமுறையில் அமைத்துப் பயிலுகின்ற வழக்கம் பிற்காலத்தில் தோன்றியது. மூர்த்தி, தலம், தீர்த்தம் இவற்றை முறையே கண்டு வழிபடும் விருப்பமுள்ள இறையன்பர்கள், தாம் பாராயணம் செய்வதற்கு ஏற்றவண்ணம் முறைப்படுத்தப் பெற்றது, சிதம்பரம் கோயிலை முதன்மைத் தி'ருத்தலமாகக் கொண்டு அமைந்துள்ளது. இத்தலம், எல்லாச் சிவத்தலங்களுள்ளும் முதன்மையாக வைத்துப் போற்றப் பெறும் சிறப்புடையது.

1300 ஆண்டுகளுக்கு முன் மூவேந்தர் ஆட்சித்திறம் குன்றித் தமிழ்ச் சங்கங்கள் மறைந்து, களப்பிரர் பல்லவர் ஆகியோர் ஆட்சியும் ஆதிக்கமும் மேலோங்கி, தமிழ் மக்கள் பல வகைகளில் நலிந்திருந்த வேளையில், தமிழ் உணர்வையும் பற்றையும் மக்களிடையே தோற்றுவித்து, சமுதாயத்தில் ஒரு பெரும் எழுச்சியையும், மறுமலர்ச்சியையும் ஏற்படுத்துதற்கு முனைந்து முயன்று பெரும் தொண்டு ஆற்றியவர் தமிழ் ஞானசம்பந்தப் பெருந்தகை ஆவர்.[3]

தோணிபுர இறைவன், அம்மையப்பராக வந்து அளித்த ஞானப்பாலை அருந்தி, திருஞானசம்பந்தர் பாடிய 'தோடுடைய செவியன்' என்ற திருப்பதிகம் முதல்திருமுறையில் முதல் பதிகமாக வைக்கப்பட்டது. இதற்குரிய பண் 'நட்டபாடை' என இன்று வழங்கும் 'நைவளம்' ஆகும். இப்பண்ணில் ஞானசம்பந்தர் பாடிய பதிகங்கள் யாவும் 'தோடுடைய செவியன்' எனும் இப்பதிகத்தை ஒட்டி முதல் திருமுறையில் வைக்கப்பெற்றன. பிறகு, ஞானசம்பந்தர், இறைவனிடம் பொற்றாளம் பெற்றபோது திருக்கோலக்காவில் பாடிய 'மடையில் வாளை' என்ற பதிகம் 'தக்கராகம்' என்ற பண்ணில் அமைந்தது; இப்பண் அமைந்த பதிகங்கள் அடுத்து வைக்கப் பெற்றன; பின் பழந்தக்கராகம், தக்கேசி, குறிஞ்சி, வியாழக் குறிஞ்சி, மேகராகக்குறிஞ்சி முதலிய பண்ணுக்குரிய பதிகங்கள் முறைப்படுத்தப் பெற்றன. யாழிசைக்கு அடங்காத 'யாழ் மூரி' என்ற பதிகம் இதனையடுத்து வைக்கப் பெற்றது. இவ்வாறு 136 பதிகங்கள் முதல்

திருமுறையில் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் அற்புதங்கள் இடம் பெற்றுள்ள பதிகங்கள் பலவாகும்.

இரண்டாம் திருமுறையில் இந்தளம், சீகாமரம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், நட்டராகம் 'செவ்வழி எனும் ஆறுபண்களால் அடங்கிய 122 திருப்பதிகங்கள் முறைப்படுத்தப்பட்டு உள்ளன. இவற்றுள்ளும் அற்புதப் பதிகங்கள் பல உள்ளன.

மூன்றாம் திருமுறை, காந்தாரம், பஞ்சமம், கொல்லி, கொல்லிக் கௌவாணம், கௌசிகம், சாதாரி, பழம்,பஞ்சுரம்; புறநீர்மை, அந்தாளிக் குறிஞ்சி எனும் ஒன்பது பண்களுக்குரிய 125 பதிகங்கள் இடம் பெற்றுள்ளன.

திருநாவுக்கரசரின் திருப்பதிகங்கள், பண் அமைந்த பதிகங்களாகத் திருநேரிசை, திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் என முறையே 4,5,6 என மூன்று திருமுறைகளாக அமைந்துள்ளன.

திருநாவுக்கரசர், சூலை நோய்த் துன்பத்தால் சமண் சமயத்தைத் துறந்து, தமது தமக்கையார் திலகவதியாரிடம் பணிந்து, திருவதிகை வீராட்டான இறைவன் திருநீற்றையணிந்து பாடிய 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்ற திருப்பதிகம் முதலாவதாக அமைந்துள்ளது.

சுந்தரர் அருளிய அருட்பதிகங்கள் ஏழாம் திருமுறை எனப்படுகிறது. இதனுள், சுந்தரரை இறைவன் தடுத்தாட் கொண்டபோது சுந்தரர் பாடிய முதற் பதிகம் 'பித்தா பிறைசூடீ' முதலாக, சுந்தரர் வெள்ளையானையில் திருக்கயிலாயம் சென்ற போது பாடிய, 'தான் எனைமுன் படைத்தான்' எனும் திருப்பதிகம் முடிய 100 பதிகங்கள் உள்ளன; இந்தளம், தக்கராகம், முதலிய 17 பண்களுக்குரிய பதிகங்கள் தொகுக்கப்பட்டு உள்ளன.

**திருமுறை கண்ட வரலாறு**

சந்தானாசாரியார் உமாபதிசிவம் அருளிய திருமுறை கண்ட புராணம், திருமுறை தொகுக்கப்பட்ட வரலாற்றை விளக்குகிறது.

திருநாரையூரில், பொல்லாப் பிள்ளையாருக்குப் பூசனை புரியும் ஆதிசைவக் குடும்பத்தில், சைவ சமயம் வாழ நம்பியாண்டார் நம்பி தோன்றினார். பொல்லாப் பிள்ளையாரின் அருள் பெற்ற நம்பியாண்டார் நம்பியின் பெருமையைக் கேட்டு வியந்து, இராசராச மன்னன் நம்பியிடம்

சென்று, சமய குரவர் மூவர் அருளிச் செய்த தேவாரத் திருமுறைளும் திருத்தொண்டார் வரலாறும் இந்நிலவுலகத்தில் விளக்கம் பெற வேண்டும் என வேண்டினான்.[4]

மன்னனின் அன்பை உணர்ந்த நம்பி, பொல்லாப் பிள்ளையாரை இறைஞ்சி நிற்க[5] பிள்ளையாரும் நம்பியின் வேண்டுகோளுக்கிணங்கி,

*"தில்லையில் கூத்தப் பெருமான் திருநடஞ் செய்யும் பொன்னம்பலத்தின் அருகிலே தேவார ஆசிரியர்கள் மூவருடைய அழகிய கைகளின் அடையாளமுள்ள அறையினுள்ளே தேவாரத் திருமுறைகள் வைத்துப் பூட்டப் பெற்றுள்ளன".*

எனக் கூறித் திருத்தொண்டர் வரலாறுகளையும் திருவாய் மலர்ந்து அருளினார்[6].

விநாயகரின் அருளுரை கேட்டு, நம்பியும் மன்னனும் தில்லை சென்று இறைவனை வணங்கினர். சிற்றம்பலத்தின் மேற்கிலுள்ள அறையிலே தேவாரத் திருமுறைகள் இருப்பதைத் தில்லைவாழ் அந்தணர்களிடம் தெரிவித்து, அவ்வறையைத் திறக்கும்படி வேண்டினான் மன்னன்[7].

"தேவார மூவர் வந்தால்தான் அறை திறக்கும்" என அவர்கள் கூற, சோழன், கூத்தப் பெருமானுக்குச் சிறப்புப் பூசைகள் புரிந்து, தேவார மூவருக்குரிய திருவுருவங்களுக்கும் வழிபாடு இயற்றி, அத்திருவுருவங்களைத் திருப்பதிகங்கள் சேமித்து வைக்கப்பட்ட அறையின் முன் நிறுத்தி,

*"மூவரும் வந்தனர்; அறையினைத் திறந்திடுங்கள்"*

என்று பணித்தான்[8].

அரசனது ஆணையால் அறைதிறக்கப்பட்டது. தேவார ஏடுகள் கரையான்புற்றால் மூடப்பெற்றுச் சிதைந்த நிலையில் இருந்ததைக் கண்ட சோழன் அளவற்ற துயரம் அடைந்தான்[9]. அப்பொழுது,

*"தேவாரப் பதிகங்களிலே, இக்காலத்துக்கு, வேண்டுவனவற்றை மட்டும் வைத்துவிட்டு மற்றவற்றைச் செல்லரிக்கச் செய்தோம்"*[10]

என அசரீரி எழுந்தது.

மன்னனும், மற்றவரும் ஆறுதல் அடைந்தனர்; எஞ்சிய பதிகங்களை முன்போல் தொகுத்துத் தரும்படி நம்பியாண்டார் நம்பியை வேண்டினான் மன்னன்[11].

நம்பியும் மன்னன் வேண்டியதற்கிணங்கத் திருஞானசம்பந்தர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்களை முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசரின் திருப்பதிகங்களை 4,5,6 திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்தி அருளிய திருப்பதிகங்களை ஏழாம் திருமுறையாகவும் தொகுத்து அருளினார்.

*"மன்னுதமிழ் விரகர் எங்கள் காழிவேந்தர் வகுத்து*
*அருளால் அமைத்த திருமுறையோர் மூன்றும்*
*அன்னவகை வாகீசர் முறையோர் மூன்றும்; ஆரூரர்*
*உரைத்ததிருமுறையது ஒன்றும்*
*"துன்னுவகை ஏழாகத் தொகுத்துச் செய்தான்......"*[12]

என்று உமாபதி சிவாசாரியார் கூறுவர்.

மேலும், 11 திருமுறைகளையும் நம்பியே தொகுத்துத் தாம் பாடிய நூல்களையும் 11ஆம் திருமுறையில் சேர்த்தார் என உமாபதிசிவம் கூறுகிறார்[13].

**பண்ணமைதி தருதல்**

தேவாரப் பாடல்களுக்குப் பண் அமைக்க ஆர்வங்கொண்ட சோழன், நம்பியுடன் திருநீலகண்டயாழ்ப்பாணர் பிறந்த ஊரான திருஎருக்கத்தம் புலியூரை அடைந்து, இறைவனை வணங்கி நின்று,

*"இறைவனே! தேவாரப் பதிகங்களுக்கான இசையினை உணர்த்தியருளல் வேண்டும்"*

என்று இறைஞ்சி நிற்க, அப்பொழுது,

*"திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபிலே வந்த பெண் ஒருத்திக்கு இசைத்திறனை அளித்துள்ளோம்"*

என அசரீரி ஒலித்தது. அது கேட்டு, அம்மையாரை அழைத்து வந்தனர். மீண்டும் அசரீரியானது,

*"இவரைத் தில்லையம்பலத்திற்கு அழைத்துச் சென்று, அங்குத்*

*தேவாரப் பதிகங்களுக்குப் பண்ணடைவு வகுக்கக்கடவீர்"*

என ஒலித்தது.

*"ஆங்கு அவளை அம்பலத்துள் ஆடுவார் திருமுன்பே*
*பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில் பாடல்*
*ஓங்கு அருளான் முறை பணித்தற்கு ஒக்கும் என ஓரோசை*
*நீங்கரிய வானின்கண் நிகழ அரசன் கேட்டான்"*[14]

அவ்வாறே அப்பெண்ணைக் கொண்டு, தேவாரப் பதிகங்களுக்குப் பண் வகுக்கச் செய்தனர். அவ்வண்ணமே, தேவாரப் பண்களுக்குரிய கட்டளைகள் வரையறுக்கப் பெற்றன. அம்மையார் வகுத்த இசைமரபே, தேவாரப் பதிகங்களுக்குப் பொருந்திய தெய்வஇசையாகத் தென்னாட்டிற் சிறப்புற்றுத் திகழ்ந்தது[15].

திருஞானசம்பந்தருடைய திருப்பதிகங்கள் மொத்தம் 1600; ஆனால் கிடைத்தவை 384; திருநாவுக்கரசரது மொத்தப் பதிகங்கள் 4900; கிடைத்தவை 313; சுந்தரர் அருளிய மொத்தப் பதிகங்கள் 3800; கிடைத்தவை 100.

திருஞானசம்பந்தர் தேவாரம் 'திருக்கடைக்காப்பு' என அழைக்கப்படுகிறது; திருநாவுக்கரசர் தேவாரம், 'தேவாரம்' என்றே அழைக்கப்படுகிறது. சுந்தரர் தேவாரம் 'திருப்பாட்டு' என அழைக்கப்படுகிறது.

இவ்வகையில் நம்பியாண்டார் நம்பியின் துணை கொண்டு தேவாரத் திருமுறைகளைத் தொகுத்த சோழமன்னன், திருவாரூர்த் தியாகேசப் பெருமானை வணங்கி வழிபட்டு ஆட்சி புரிந்தவன் என்றும், இராசராசன் அபயகுலசேகரன் என்னும் பெயர்களை உடையவன் என்றும் உமாபதி சிவாசாரியார் கூறுவர்.[16]

11 திருமுறைகளையும் தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பி என்று கருதி, அவரை வேதத்தை நான்காக வகுத்த வேத வியாசருக்கு ஒப்பாகப் போற்றுவர்.

### இராசராசனும் திருமுறைகளும்

"இவன், திருநாரையூர் நம்பியாண்டார் நம்பியைக் கொண்டு,

தில்லையில் அடக்கம் செய்யப்பட்டிருந்த முதல் ஏழு திருமுறைகளைத் தொகுப்பித்தவன்; இவன் 'சிவபாத சேகரன்' என்று பெயர் பெற்றான். இவன் காலமுதல்' திருமுறைகள் நாடெங்கும் பரவின" என்பர் மா. இராசமாணிக்கனார்.[17]

### நம்பியாண்டார் நம்பி பாடிய சோழன்

நம்பி, தம் திருத்தொண்டர் திருவந்தாதியில் புகழ்ச் சோழர், இடங்கழியார், கோச்செங்கட்சோழன் ஆகிய அடியார்களைப் பற்றிய பாடல்களில், தம் காலத்துச் சோழமன்னன் ஒருவனைக் குறிப்பிட்டு உள்ளார். புலவர்கள் தம்மை அன்புடன் ஆதரித்த அரசர், வள்ளல் ஆகியோரை அவர்கள் பெயர்கள் என்றும் நின்று நிலவுமாறு அவர்களைத் தம் நூல்களில் புகழ்ந்து போற்றுதல் வழக்கமாகும். நம்பியும், தம்மை அன்புடன் ஆதரித்த ஆதித்தன் என்ற சோழ மன்னன் ஒருவனைத் தாம் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியில் மூன்று பாடல்களில் போற்றியுள்ளார்; அதில் ஒரு பாடல்:

*"சிங்கத்து உருவனைச் செற்றவன் சிற்றம்பல முகடு*
*கொங்கிற் கனகம் அணிந்த ஆதித்தன் குல முதலோன்*
*திங்கட் சடையர் தமரது என் செல்வம் எனப் பறை போக்கு*
*எங்கட்கு இறைவன் இருக்கு வேளூர் மன் இடங்கழியே" (65)*

நம்பியாண்டார் நம்பி குறித்த ஆதித்தன் என்பான், விசயாலயசோழன் புதல்வனும், முதல் பராந்தக சோழன் தந்தையுமாகிய முதல் ஆதித்த சோழன் ஆவன்; இவன் கி.பி. 870 முதல் 907 வரை சோழ மண்டலத்தை ஆட்சி புரிந்த பெருவேந்தனாவன். இவன் பல்லவ அரசன் அபராசிதவர்மனைப் போரில் வென்று, தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றின காரணம் பற்றித் "தொண்டை நாடு பரவின சோழன் பல்யானைக் கோக்கண்டனாயின ராச கேசரிவர்மன்"[18] என்று வழங்கப் பெற்றுள்ளான்.

இவன் சோழ நாட்டை உயர்நிலைக்குக் கொண்டு வந்ததுடன் கொங்கு நாட்டிற்குப் படையெடுத்துச் சென்று தலைக்காடு என்ற நகரையும் கைப்பற்றினான்"[19]

எனவே, முதல் ஆதித்த மன்னனே, கொங்கு நாட்டைக் கைப்பற்றி, அந்நாட்டிலிருந்து பொன் கொண்டு வந்து, தில்லைச் சிற்றம்பலத்தைப்

பொன்வேய்ந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. இவன் காவிரியாற்றின் இரு மருங்கும் பல சிவ ஆலயங்களைக் கற்றளியாக அமைத்த சிவபக்தன் என்று அன்பிற் செப்பேடுகள் கூறுகின்றன.[20]

ஆதித்தன் மகன் பராந்தக சோழனும், அவன்வழி வந்தவர்களும் தில்லைக் கோயிலுக்குப் பொன் வேய்ந்ததை வரலாறு கூறுகிறது. முதன்முதலில் பொன்வேய்ந்தவன் ஆதித்த சோழன் என்பதை நம்பியாண்டார் நம்பியின் பாடலால் அறிய முடிகிறது.

எனவே, நம்பியாண்டார் நம்பி, ஆதித்தன் ஆட்சிக் காலமாகிய கி.பி. 9ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், வாழ்ந்திருக்க வேண்டும். மேலும் திருத்தொண்டர் திருவந்தாதியின் 82வது பாடலில் ஆதித்த சோழன் சிவன் திருவடியை அடைந்த செய்தியையும் குறிப்பிடுகின்றார். எனவே, அவனுக்குப் பின் கி.பி. 907ல் பட்டம் பெற்ற அவன் மகன் முதற்பராந்தக சோழன் ஆட்சியின் முதற்பகுதியிலும் சில ஆண்டுகள் வரையில் நம்பி உயிர் வாழ்ந்திருக்க வேண்டும்.

மேலும், ஆதித்தன் சிங்கள நாட்டுக்குப் படை எடுத்தது, வென்றது இவற்றைத் தம் திருத்தொண்டர் திருவந்தாதியில் (65) குறிக்கின்றார்.

நம்பியாண்டார் நம்பி, முதலாம் இராசராச சோழனைத் தாம் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியில் எங்கும் குறிப்பிடவில்லை. எனவே, நம்பி, இராசராசன் காலத்தவர் அல்லர்.

மேலும், இராசராசன் காலத்திற்கு முன்பே, அவன் முன்னோர்களான முதல் ஆதித்தன், முதல் பராந்தகன், உத்தமசோழன் ஆகிய சோழ மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் கோயில்களில் மூவர் தேவாரத்தை நாள்தோறும் பாடுவதற்கு நிவந்தங்கள் அளிக்கப்பட்டு இருந்தன. முதல் ஆதித்த சோழன் ஆட்சியில் கி.பி. 8273ல் திருவெறும்பியூரிலும்,[21]. கி.பி.876 பழுவூரிலும்,[22]; முதற் பராந்தக சோழன் ஆட்சியில் கி.பி.911ல் அல்லூரிலும்,[23]; கி.பி. 944 ல் திருத்தவத் துறையிலும்,[24]; உத்தமசோழன் ஆட்சியில் கி.பி. 977ல் கோனேரி இராசபுரம் என்னும் திருநல்லத்திலும்[25]; கி.பி.984ல் அந்துவ நல்லூரிலும்,[26]; திருப்பதிகங்கள் பாடிவர நிவந்தங்கள் வழங்கப்பட்டிருந்தன.

பல்லவர் ஆட்சியில் நந்திவர்ம பல்லவன் 17ஆம் ஆட்சி ஆண்டாகிய கி.பி.750இல் திருவல்லம் கோயில் கல்வெட்டில்,

*"திருப்பள்ளித்தாமம் பறிப்பார்க்கும்,*
*திருப்பதிகங்கள் ஓதுவார் உள்ளிட்ட*
*பல பணிகள் செய்வார்க்கும் நெல்லு*
*நானூற்றுக் காடியும்"*

என்று குறிக்கப்படுகிறது. இதனைக் காணும் போது, ஆதித்த சோழனுக்கு முன்பே பல்லவர் ஆட்சியிலேயே திருமுறைகளைக் கோயில்களில் ஓதுவதற்கு நிவந்தங்கள் அளித்த உண்மை தெளிவாகிறது.

எனவே, இராசராசன் காலத்திற்கு முன்பே (கி.பி.985–1014) கோயில்களில் சமயகுரவர் மூவருடைய திருப்பதிகங்கள் பாடப் பெற்று வழக்கில் இருந்து வந்தன என்பது தெளிவு.

எனவே, நம்பியாண்டார் நம்பி, இராசராசன் காலத்தில் வாழ்ந்தவர் அல்லர்; முதல் ஆதித்த சோழன் ஆட்சிக் காலத்திலும், அவன் மகன் முதல் பராந்தக சோழன் ஆட்சியின் முற்பகுதியிலும் இருந்தவர் ஆவர் என்பதும் வரலாறு ஆகும் என்பது ஆராய்ச்சிப் பேரறிஞர் டி..வி. சதாசிவ பண்டாரத்தார் ஆராய்ந்து கண்ட முடிபாகும்.[27]

நம்பியாண்டார் நம்பி, முதல் 7 திருமுறைகளை மட்டும் தொகுத்தார் எனவும், 8 முதல் 11 வரை நம்பி காலத்திற்குப்பின் வந்த சான்றோர்கள் தொகுத்தனர் என்றும் இந்நூலில் கூறப்படுகிறது.

### திருமுறைகளை வணங்கி வழிபடுதல்

தேவாரத் திருமுறைகள் திருக்கோயிலில் வைத்து வழிபடப் பெற்று வந்தன. அவ்வாறு பாதுகாப்பாக வைத்துப் பூசித்தற்கு இடமாக விளங்கிய மண்டபம் 'திருக்கைக் கோட்டி' எனப்பட்டது. சீகாழிக் கோயிலில் உள்ள திருக்கைக் கோட்டியில் 'தேவாரத் திருமுறைகள், வைத்து வழிபாடு செய்யப் பெற்றுவந்தன என்பதும், அவை பழுதுபடும்போது, சரிசெய்யத் தமிழ் விரகர் ஒருவர் இருந்தார் என்பதும், அவ்வூர்ச் சபையார் அவற்றை வழிபடுவதற்கு 'இறையிலி நிலம்' அளித்துப் போற்றினர் என்பதும், சீகாழியில் திருஞானசம்பந்தர் திருக்கோயில் கருப்ப இல்லின் தென்புறம் அமைந்துள்ள கல்வெட்டில் காணப்படும் செய்தி.

இறைவனால் தடுத்தாட் கொள்ளப்பட்ட சுந்தரர், தமக்கு முன்தோன்றிய திருஞானசம்பந்தர் பாடல்களைப் பாடி இறைவனை வணங்கினார் என்று சேக்கிழார் கூறுவர்.[28]

மேலும், சேரமன்னர் சேரமான் பெருமாள் நாயனார், இறைவனை ஞானத்தால் உணர்ந்து போற்றுவதற்குத் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் திருப்பதிகங்களை மனம்கசிந்து ஓதினார் என்று கூறுவர்.[29]

முதல் இராசராச சோழன், கங்கை கொண்ட சோழன் முதலிய சோழ மன்னர்கள், தேவாரப் பதிகங்களைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க ஓதி இறைவனை வழிபட்டவர்கள் ஆவர். அவ்வாறு பதிகப் பெருவழியில் தாம் வணங்கிய திருவுருவினைத் 'தேவாரத் தேவர்' என்றும், திருப்பதிகம் ஓதி வழிபாடு செய்த இடத்தைத் 'தேவாரச் சுற்றுக் கல்லூரி' என்றும், தாம் வழிபாடு செய்யும் போது தேவாரம் இசைத்தவர்களைத் 'தேவார நாயகம்' என்றும் கல்வெட்டுக்களில் குறித்துள்ளனர்.[30]

வழிபாட்டிற்கும், தெய்வப் பாடல்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததைப் பின்வரும் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன:

"நம் தேவாரத்துத் திருப்பதியம் பாடும் பெரியான் மறைதேடும் பொருளான அகளங்கப்பிரியனுக்கும்........."

"உறையூர்க் கூற்றத்துத் திருவடகுடி மகாதேவர் ஸ்தான மடம் தேவாரத்துக்குத் திருப்பதியம் விண்ணப்பம் செய்யும் அம்பலத்தாடி திருநாவுக்கரையனுக்கும்..."

இராசராசன் கட்டிய தஞ்சைப் பெரிய கோயிலில் திருப்பதிகம் ஓத 48 பேர் பல கோயில்களிலிருந்து வரவழைக்கப்பட்டனர். திருப்பதிகங்களைப் தேவரடியார், பிடாரர் (ஓதுவார்) ஓதினர். திருப்பதிகம் ஓதுவார் பெற்ற காணி 'திருப்பதியக்காணி' எனப்பட்டது.

தில்லையில் மாசித்திங்கள் விழாவில் 'திருத்தொண்டத் தொகை' ஓதப்பட்டது. நரலோகவீரன், மூவர் திருமுறைகளைச் செப்போடுகளில் எழுதிவைத்தான். சம்பந்தர் தேவாரத்தை ஓதத் தனி மண்டபம் கட்டுவித்தான். திருமுறைகளை அடிப்படையாகக் கொண்டு பெரியபுராணம் செய்யப்பட்ட பிறகு, நாயன்மார் வரலாறு நன்கு

மக்களிடையே பரவியதால் மிகுதியான மக்கள் திருமுறைகளைப் போற்றினர். திருமுறைகள் படி எடுத்து வைக்கப்பெற்று கோயில் குகைகளில் பாதுகாக்கப்பட்டன. அவற்றுள் குறுக்கை–ஞான சம்பந்தன் குகை, தோணிபுரத்து–தேவாரச் செல்வன் குகை போன்றன குறிக்கத்தக்கன.

முதற்குலோத்துங்கன் (கி.பி.1070–1120) படைத் தலைவர் காரள் ஒருவனான மணவிற் கூத்தன் காளிங்கராயன் என்பவன், மூவர் தேவாரத்தைச் செல்லரிக்காவண்ணம் செப்பேடுகளில் எழுதுவித்துத் திருக்கோவில்களில் பாதுகாப்பாக வைத்தான் என்று தில்லைக்கோயில் கல்வெட்டுக் கூறுகிறது.

**அதுபற்றிய வெண்பா**

*"முத்திறத்தார் ஈசன் முதற்திறத்தைப் பாடியவாறு*
*ஒத்தமைத்த செப்பேட்டினுள் எழுதி–இத்தலத்தின்*
*எல்லைக்கிரிவாய் இசை எழுதினான் கூத்தன்*
*தில்லைச் சிற்றம்பலமே சென்று"*

என்பதாகும்.திருவாரூரிலும் திருமுறைகள் செப்பேடு செய்யப்பட்டிருந்தமை, அதிலிருந்து படி எடுக்கப்பட்ட தருமை ஆதீன ஓலைச் சுவடியால் தெரிய வருகிறது.

தன் முன்னோர்களைக் காட்டிலும் இராசராசன் செய்த திருமுறைத் தொண்டுகள் மிகுதிப்பட இருந்தமையால்,

*"சேய திருமுறை கண்ட ராசராசதேவர்"*

என்று சேக்கிழார் புராணமுடையார் இராசராசனைச் சிறப்பித்துப் போற்றுகிறார்.

**முதலில் தேவாரம் பாடியவர்**

முதலாம் மகேந்திர வர்ம பல்லவன் ஆட்சிக் காலத்தில்தான் (கி.பி. 615–630) திருநாவுக்கரசர் சமணத்திலிருந்து சைவம் சார்ந்தார். முதன்முதலில் 'கூற்றாயினவாறு' பதிகம்பாடி அருளினார்; சமணர் கூட்டுறவால் மகேந்திரவர்மன் விளைவித்த துன்பங்களையெல்லாம் சிவனருளால் வென்றார். மகேந்திர பல்லவனும் மனம்மாறிச் சைவம் சார்ந்து திருவதிகையில் குணபர ஈச்சரம் 'எனும் சிவன் கோயில் கட்டினான். திருச்சிராப்பள்ளியிலும் மலைமீது குடைவரைக் கோயில் அமைத்தான்.

அவன் சமணசமயத்தைச் சார்ந்திருந்ததும், நாவுக்கரசரால் சைவன் ஆனதும் அக்குடைவரைக் கோயில் கல்வெட்டுச் செய்திகள் கூறும்.

மகேந்திர பல்லவன் மகன் முதலாம் நரசிம்மன் ஆட்சிக்காலம் கி.பி. 630–668; திருஞானசம்பந்தர் அவதாரமே கி.பி.638 என்று நரசிம்ம பல்லவன் காலமாகக் கணக்கிடுகின்றனர் வரலாற்று ஆய்வாளர்கள்.

கி.பி. 642ல் நரசிம்மவர்ம பல்லவன் பரஞ்சோதியாரைப் படைத்தலைவராகக் கொண்டு, வாதாபியை வென்று, பின்பு அவர் சிவனடியார் என்று அறிந்து சிறப்புக்கள் பல செய்து, மிகுதியான பொருள் கொடுத்து, சிவத்தொண்டு செய்யுமாறு விடுத்தான். கி.பி.642ல் திருச்செங்காட்டங்குடி சேர்ந்து திருவெண்காட்டு நங்கையை மணந்து, சீராள தேவரைப் பெற்று மூன்று ஆண்டு ஆகும்போது பள்ளியில் சேர்ந்தார் சிறுத்தொண்டர். அந்நிலையில் திருச்செங்காட்டங்குடிக்கு எழுந்தருளிய ஞானசம்பந்தர் இறைவனைத் தரிசித்து, சிறுத்தொண்டரையும் சீராள தேவரையும் "பைங்கோட்டு மலர்ப்புன்னை" திருப்பதிகத்துள் பாடியுள்ளார்.

எனவே மகேந்திரவர்மன் காலத்திலேயே வாழ்ந்து அற்புதங்கள் நிகழ்த்திய அப்பரே முதலில் தேவாரம் பாடியவராவார்.

எனினும் திருஞானசம்பந்தருக்கே இறைவன், முத்துக்குடை, திருச்சின்னம், சிவிகை, முத்துவிதானம் முதலிய ஆசாரியருக்கு உரிய அங்கங்களை எல்லாம் தந்துள்ளதால், அவர் அவதாரத்திற்குப் பதினாறு காரணங்கள் குறிப்பிடும் சேக்கிழார், முதன்மை ஆசாரியத்துவம் திருஞானசம்பந்தருக்கே வழங்கி உள்ளார். மேலும் திருஞானசம்பந்தர் முத்தி எய்திய ஆச்சாள்புரம் 'ஆச்சாரியபுரம்' என்று வழங்கப்பட்டமையும் அதனைத் தெளிவாக்கும்.

**திருமுறைப் பதிப்பு**

சில நூற்றாண்டுகளுக்கு முன் தஞ்சை மாவட்டம் வேதாரண்யத்திலும், திருநெல்வேலியிலும் வாழ்ந்த சிவநேசச் செல்வர்களாகிய தேசிகர்கள் பலர், தேவாரப் பதிகங்கள் முழுவதையும் பனைஓலைச்சுவடிகளில் எழுதி, மக்கள் பலருக்கும் தந்து, அதனால் ஊதியம் பெற்று வாழ்ந்தனர். அவர்கள் வரைந்த ஓலைச்சுவடிகளே யாழ்ப்பாணத்திலும், தமிழகத்திலும் கிடைக்கின்றன. இவற்றை முதன் முதலில் அச்சுவடிவில் கொணர்ந்தவர்

திருமயிலை சுப்பராய ஞானியார் ஆவர்[32]; இவரே சபாபதி முதலியார் உதவியுடன் 'ருத்ரோத்காரி' ஆண்டு ஐப்பசித் திங்கள் (கி.பி. 1844) தேவாரத்தைப் பதிப்பித்தார். பண்முறையில் கி.பி. 1864–1866 வரை மூவர் தேவாரத்தையும் தனித்தனியே அச்சில் இவர் கொணர்ந்தார்.

கி.பி. 1881ல் விஷு ஆண்டு மார்கழித் திங்களில், தலமுறைத் தேவாரம் சென்னை கலாரத்னா அச்சுக்கூடத்தில் முதன்முறையாகப் புதிப்பிக்கப்பட்டது.

பின், திருமயிலை செந்தில்வேல் முதலியாரால் கி.பி. 1894இலும், 1905இலும் தலமுறைத் தேவாரம் அடங்கன் முறையாக வெளிவந்தது. பின் 3ஆம் பதிப்பு, கி.பி. 1898ல் பண்முறைத் தேவாரம் மக்களுக்கு எளிமையாகக் கிடைக்கும் வண்ணமாக வெளி வந்தது.

கி.பி. 1906ல் திருமுறை வரலாறு, மூவர் சரித்திரக் குறிப்புரை இவற்றுடன் வெளிவந்தது. பின், கி.பி. 1907, 1917இல் தேவாரப் பதிப்புக்கள் வெளிவந்தன.

யாழ்ப்பாணத்து வண்ணை நகர்ச் சுவாமிநாத பண்டிதரால் பாடபேதங்கள், புதிய செய்திகள் இவற்றுடன் கி.பி. 1911 ஆம் ஆண்டு, தலமுறை மூவர் தேவார அடங்கன்முறை வெளியிடப்பட்டது. மக்கள் பொருள் உணர்ந்து தேவாரத்தைப் பயிலும் பொருட்டுக் காஞ்சிபுரம், மகாவித்துவான் 'ஸ்ரீமத் இராமானந்த யோகிகள் பண்முறையில் பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, விசேடவுரை இவற்றோடு கி.பி. 1913ல் வழங்கினார்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் உதவியோடு, மூவர் தேவாரத்தை முறையே கி.பி. 1927, 1928, 1929ல் பண்முறையில் அச்சிட்டு வெளியிட்டது. மேலும், பண்முறைத் தேவாரம் சைவசித்தாந்த சமாசத்தினரால் அரும்பொருள் அகராதியுடன் கி.பி. 1929–1931ல், மூன்று தொகுப்புக்களாக வெளியிடப்பட்டது. பல மெய்யன்பர்கள் விருப்பத்திற்கிணங்க இன்றுவரை தேவாரப் பதிப்புக்கள் வந்துகொண்டிருக்கின்றன.

**முடிவுரை**

திருமுறைகள், பல அற்புதசக்திகளை உள்ளடக்கி, நிலையான அருட்செல்வத்தை மக்கள் எளிதாக அடைவதற்கு வழிகாட்டும்

சாதனமாகத் திகழ்கின்றன இன்றும் உலகமுழுவதும் வாழும் தமிழ் மக்களின் நம்பிக்கைக்கு உரியனவாகத்திகழ்ந்து, மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்து இறைபேரின்பத்தை அடைவதற்குத் திறவு கோலாகப் பயன்படுகின்றன.

சான்றெண்விளக்கம்

1. அணிந்துரை, பன்னிருதிருமுறை வரலாறு முதல் தொகுதி, ப.1
2. திருஞானசம்பந்தர் தேவாரம், முதல்திருமுறை, ப.25
3. ந.ரா. முருகவேள், சைவசித்தாந்தம், ப.154.
4. திருமுறைகண்ட புராணம், செ.8.
5. மேலது, செ.10
6. மேலது, செ. 11
7. மேலது, செ.18
8. மேலது, செ.19
9. மேலது, செ.21
10. மேலது, செ.22
11. மேலது, செ.23
12. மேலது, செ.24
13. மேலது, செ.26–29
14. மேலது, செ.33
15. மேலது, செ.34
16. மேலது, செ.1
17. மா. இராசமாணிக்கனார், சைவசமய வளர்ச்சி. பக். 165–166.
18. South Indian Inscription, Vol. III, No.89.
19. செந்தமிழ், தொகுதி, 16, ப.394
20. க. வெள்ளைவாரணனார், பன்னிருதிருமுறை வரலாறு, முதல்தொகுதி, ப.17
21. ins, 129 of 1914.
22. ins, 349 of 1918.
23. S.I.I Vol .VIII, No. 687
24. ins 99 of 1929
25. S.I.I Vol III No.151, A

26. மேலது.

27. செந்தமிழ், தொகுதி 45, பக். 7–18 (ஆதாரம்; க. வெள்ளை வாரணனார், பன்னிருதிருமுறை வரலாறு, முதற் பகுதி, ப.20

28. ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம், செ.44.

29. கழறிற்றறிவார் நாயனார் புராணம் செ.9

30. க. வெள்ளை வாரணனார், பன்னிருதிருமுறை வரலாறு, முதல்தொகுதி, ப.33.

31. தென்னிந்தியக் கல்வெட்டுக் தொகுதி, VIII, எண் 260, மேற்படி எண் 675

32. திருஞானசம்பந்தர் தேவாரம், முதல் திருமுறை, ப. 44.

## 24. திருஞானசம்பந்தரும் சாத்திரங்களும்

### முன்னுரை

புறச்சமயங்கள் செல்வாக்குப் பெற்றிருந்த கி.பி. 7ஆம் நூற்றாண்டில், புறச்சமயங்களை நீறாக்கி, சிவம் பெருக்கும் விடிவெள்ளியாகத் திருஞானசம்பந்தர் தோன்றினார். இவர்தம் அவதாரச் சிறப்பை விளக்கும்போது, சேக்கிழார்,

"வேதநெறிதழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கப்" பிள்ளையார் தோன்றியதாகப் பெருமையுடன் பேசுவார். நம்பியாண்டார் நம்பியும், "வையம் வாழ யாம்வாழ" ஞானசம்பந்தர் தோன்றியதாக அருளிச் செய்கின்றார்; சுந்தரர். "கொன்றையான் அடியலாற்பேணா எம்பிரான் சம்பந்தன்" என்று போற்றுவர்.

### சம்பந்தர் பதிகங்களில் சைவசித்தாந்தம்

பரசமயக்கோளரியான சம்பந்தர், சைவசமயத் தத்துவங்களைத் தம் பாடல்களில் அமைத்துப் பாடுகின்றார். 'இறை, உயிர், தளை' ஆகிய முப்பொருள்களும் தோற்றமும், முடிவும் இல்லாத என்றுமுள்ள நித்தியப்பொருள்கள் என்று சைவசித்தாந்தம் கூறுகின்றது. இக்கருத்தை முப்பொருள்களின் இயல்புகளைத் தமது பாடல்களில் அமைத்துவப் பாடுகின்றார் சம்பந்தர்.

### அத்துவிதத் தொடர்பு

சைவசித்தாந்தக் கருத்துக்களில் தலையாயது என்று சிறப்பிக்கப்படுவது இறைவனுக்கும், உயிர்களுக்கும் உள்ள தொடர்பே; இத்தொடர்பு, இறைத் திருவருள் கருணையை எடுத்துக் காட்டுகிறது.

'அத்துவிதம்' என்ற சொல், வேற்றுமையின்மை; அஃதாவது, 'இருபொருள்கள் இரண்டு எனப்படாது ஒரே தன்மையாய் இயைந்து நிற்கும்' நிலையைக் குறிக்கும்.

இறைவனும் உயிரும் இருபொருள்கள் என அறியவாராது ஒரே தன்மையாய் இயைந்து ஒற்றுமைப்பட்டு நிற்கும் தன்மையைக் குறிப்பதே 'அத்துவிதம்' என்ற சொல். இந்த அத்துவிதக் கலப்பை 'ஒன்றாதல், வேறாதல், உடனாதல்' என மூன்று விதமாய் சாத்திரங்கள் கூறுகின்றன. அருள்நந்திசிவம் தமது சிவஞானசித்தியார் சுபக்கத்தில் கூறுவது வருமாறு:

*"உலகெலாம் ஆகி, வேறுஆய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி*
*அலகிலாஉயிர்கள் கன்மத்து 'ஆணையின் அமர்ந்து செல்லத்*
*தலைவனாய் இவற்றின்தன்மை தனக்கு எய்தலின்றித் தானே*
*நிலவுசீர் அமலனாகி நின்றனன் நீங்காது எங்கும்"*

என்று உரைப்பர். மேலும் இருபா இருபஃது நூலிலும், இவ்அத்துவித்த தொடர்பை,

*"ஒன்றாகாமல் இரண்டாகாமல் ஒன்றும் இரண்டும் இன்றாகாமல்"*
என்று கூறுகிறார்.

சைவசித்தாந்தச் சாத்திர நூல்களுள் ஒன்றாகிய சிவப்பிரகாசமும்,

*"புறச்சமயத்தவர்க்கு இருளாய் அகச் சமயத்து ஒளியாய்ப்*
*புகல் அளவைக்கு அளவாகிப் பொற்பணிபோல் அபேதப்*
*பிறப்புஇலதாய் இருள்வெளிபோல் பேதமும் சொற்பொருள்போல்*
*பேதாபேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன*
*அறத்திறனால் விளைவதாய் உடல்உயிர் கண்அருக்கன்*
*அறிவுஒளிபோல் பிறிவரும் அத்துவிதமாகும்*
*சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத்*
*திறன்................"*

என்று பகரும்.

இறைவன்,உயிர்களிடத்தில், உடலில் உயிர்கலந்து, தான்வேறாகத் தெரியாது, ஒன்றாக நிற்றல்போல ஒன்றாகவும்; சூரியன் கண்ணுக்கு உலகப் பொருள்களை விளக்கிதான் வேறாக நிற்றல்போல, இறைவன் உயிர்களுக்கு உலகப் பொருள்களை விளக்கித் தான் வேறாக நின்றும்; உயிரின் அறிவு கண்ணொளியோடு இணைந்து உடனாய் நின்று உலகப் பொருள்களைக் காண வைப்பதுபோல, இறைவனும் உயிரறிவுக்கு உடனாய் நின்று உலகப் பொருள்களை அறியச் செய்தும் உயிர்களுக்கு அருந்துணையாய் விளங்குகின்றான். இம்மூவகைத் தொடர்புகளும்

உயிர்கள் நிலைபேறு அடையவும், அறிவைப் பெறவும் இயங்கவும் உதவுகின்றன.

திருஞானசம்பந்தப் பிள்ளையார், இவ்அத்துவிதத் தொடர்பை,

*"பூவினில் வாசம் புனலிற் பொற்புப்*
*புதுவிரைச் சாந்தினில் நாற்றத்தோடு*
*நாவினில் பாட நள்ளாறுடைய*
*நம்பெருமானே"*

எனப் போற்றுவர்.

"இறைவன், பூவினில் நறுமணமும், நீரின் பொலிவும், சந்தனத்தின் மணமும் நாவினால் பாடுதலும் ஆகிய ஐம்பொறிகளுக்கும் சார்வாய் நள்ளாற்றில் வீற்றிருப்பவன்" என்பது பொருள்.

மெய்கண்டாரும் இத்தன்மையைப் பின்வருமாறு கூறுவர்:

*"பண்ணையும் ஓசையும்போலப் பழமதுவும்*
*எண்ணும் சுவையும்போல எங்குமாம்–அண்ணல்தாள்*
*அத்துவிதமாதல்....."*

மேலும், இருபொருள்கள், வேற்றுமையின்றி, ஒன்றாய் இயைந்திருக்கும் தன்மைக்கு உப்பும் நீரும் ஆகிய இருபொருள்கள் ஒரே பொருளாய்க் காட்சிப்படும் தன்மையை உவமிக்கிறார் மெய்கண்டார்.

*"அப்பு அணைந்த உப்பின் உளம் அணைந்து சேடமாம்*
*கப்பு இன்றாம் ஈசன் கழல்"*

உயிர், உடலோடு கலந்து, தன் இருப்பைக் காட்டிக் கொள்ளாதபடி உடலோடு ஒன்றி ஒன்றாக உள்ளது. திருஞானசம்பந்தர் இத்தன்மையை,

*"பண்ணும் பதம் ஏழும் பல ஓசைத்தமிழ் அவையும்*
*உள்நின்றதொர் சுவையும் உறுதாளத்து ஒலி பலவும்*
*மண்ணும் புனல் உயிரும் வருகாற்றும் சுடர்மூன்றும்*
*விண்ணும் முழுது ஆனான் இடம்வீழிம் மிழலையே"*

என்று கூறி விளக்குகின்றார்.

நாவரசரும், இறைவன் உயிரில் கலந்து ஒன்றாய் இருக்கும் இத்தன்மையை,

*"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி*
*இயமானனாய் எறியும் காற்றுமாகி*
*அருநிலையத் திங்களாய் ஞாயிறாகி*
*ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி...."*

என்று இயம்புவர்.

சுந்தரரும்,

*"ஊனாய் உயிரானாய் உடலானாய் உலகானாய்"*

என்று போற்றுவர்.

சாத்திர ஆசிரியர்களுள் ஒருவரான மனவாசகம் கடந்தார், இந்நிலையை,

*"ஆன்மாவில் ஆய்ந்தறியும் ஐம்பொறிகள்*
*இன்றி அறியாஇவை என்ன–நின்றதுபோல்*
*ஓவாமல் உன்னை உணர்த்துவோம் உன் அறிவில்*
*மேவாமல் மேவி நாமே"*

என்கின்றார்.

'சத்துசித்து ஆனந்தமாய்' இருக்கும் முதல்வன். எண்ணற்ற உயிர்களுக்கு உயிராகிநிற்கும் தன்மையைச் சிவப்பிரகாசமும்,

*"நின்மலமாய் ஏகமாய் நித்தமாகி*
*அலகில் உயிர்க்கு உணர்வாகி அசலமாகி*
*அகண்டிதமாய் ஆநந்த உருவாய்"*

என்று போற்றும்,

காய்ச்சிய நீரில் வெப்பம், நீரில் பொருந்தி, அதனோடு ஒன்றாய்க் கலந்து நிற்கிறது; பார்ப்பதற்கு நீர்ஒன்றே உள்ளது எனும்படியான நிலையே அங்கு உள்ளது. ஆனாலும், நீரைத்தொட்டால், நீருக்குவேறாக வெப்பம் இருப்பதை அறிய முடிகிறது. வெப்பம் நீரோடு ஒன்றாய் நின்றாலும்,அது நீருக்கு வேறாகி நிற்பது புலனாகிறது. அதுபோல, இறைவனும் உயிர்க்கு உயிராகநின்று இயக்கினாலும் தன்தன்மையால் உயிருக்கு வேறாகி நிற்கின்றான்.

கண்ணுக்கு வேறாகி நின்று காட்டும் சூரிய ஒளி போல் இறைவன்,

உயிருக்கு வேறாகி நின்று அறிவிக்கின்றான். இந்நிலையைத் திருவருட்பயன்,

*"எங்கும் எவையும் எரியுறுநீர் போல் ஏகம்*
*தங்கும் அவன் தானே தனி"*
*என்று உரைக்கும்*

திருஞானசம்பந்தர், இறைவன் தன் தன்மையால் வேறாகிநிற்றலை,

*"........................பல்கதிரோன் மதியார்*
*எற்றுநீர் தீக்காலு மேலை விண் இயமானனோடு*
*மற்று மாதோர் பல்லுயிராய் மாலயனும் மறைகள்*
*முற்றுமாகி வேறும் ஆனான்..........."*

என்று குறிப்பர்.

திருவதிகை மனவாசகங் கடந்தார், இந்நிலையை,

*"..................... இன்று அருக்கன்*
*கண்ணுக்குக் காட்டுமாப்போலே உனது அறிவில்*
*நண்ணி அறிவித்திடுவோம் நாம்......"*

என்று கூறுவர்.

இறைவன் தன்தன்மையில் தானேயாய் நிற்றல் என்பது,

வெந்நீரில் உள்ள அழுக்கானது நீரையே பற்றுகிறது. நீரில் உள்ள வெப்பத்தைப் பற்றுவதில்லை. வெப்பம் தன் தன்மையில் மாறாதிருக்கிறது. அதுபோல, இறைவனும் உலகோடு உயிர்களோடு பொருந்தி நின்றாலும், உலகக் குற்றங்கள் பற்றப்படாது தன் இயல்பில் திரியாது, மாற்றமடையாது, என்றும் ஒரு தன்மையனாய் நிற்கின்றான் என்பதையே குறிக்கும். இந்நிலையில் அவன் 'செம்பொருள்' எனப்படுகிறான். 'சிவசத்து' என்பதும் அத்தன்மையதே ஆகும்.

இந்நிலை, இறைவன் இயல்பாகவே பாசத்திற்படாத தூய தன்மையன் என்பதையும்,உலகப் பொருள்களில் தோய்வின்றி நிற்பவன் என்பதையும் காட்டும்.

இறைவன் எல்லாப் பொருள்களிலும் கலந்து, எங்கும் செறிந்திருப்பினும், அப்பொருள்களின் தன்மையை அவன் சாரமாட்டான்; அவற்றில் தோயமாட்டான் என்பதையே மணிவாசகரும்,

*"சேர்ந்தறியாக் கையானை"*

என்பர். இறைவன் உயிரறிவுக்கு உடனாய் நிற்கும் தன்மையை ஞானசம்பந்தர்,

*"உயிருக்கு உயிராய் அங்கங்கே நின்றான்"*

என்பதால் சுட்டுவர்.

இறைவன் அறிவுப் பொருள்களாகிய உயிர்களோடு உடனாய் நின்று அவற்றின் அறிவை விளங்கச் செய்கிறான். எவ்வாறு எழுத்துக்களின் இயக்கத்திற்கு 'அகரம்' இன்றியமையாததாக உள்ளதோ, அதுபோலச் சித்தும் சடமுமாகிய உலகத்தின் இயக்கத்திற்கு இறைவன் இன்றியமையாதவன் ஆகின்றான். மணவாசகங்கடந்தாரும் இக்கருணையை,

*"அக்கரங்கட்கு எல்லாம் அகரவுயிர் நின்றாற்போல்*
*மிக்க உயிர்க்கு உயிராய் மேவினோம் – எக்கண்ணும்*
*நில்லாஇடத்து உயிர்க்குநில்லாது அறிவு என்று*
*நல்ஆகமம் ஓதும்"*

என்பர்.

எனவே, இறைவன் எப்பொருளின் இயக்கத்திற்கும் முதலாய் நிற்கின்றான் என்னும் திருஞானசம்பந்தரின் கருத்தைச் சாத்திர நூல்களும் வழிமொழிகின்றன எனும் உண்மை போதரும். உயிர்களின் அறிவிற்கு எட்டா இறைவன், எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கி நிற்கின்ற பெரிய பொருளாகவும் எல்லாப் பொருள்களிலும் ஊடுருவிக் கலந்து நிற்கின்ற நுண்ணிய பொருளாகவும் இருந்து, உயிர்களிடத்துக் கொண்ட பெருங்கருணையினால் ஐந்தொழில்களைச் செய்து அவற்றை ஆட்கொள்கிறான். இதனைத் திருஞானசம்பந்தர்,

*"காணுமாறு அரிய பெருமானாகிக்*
*காலமாய்க் குணங்கள் மூன்றாய்ப்*
*பேணுமூன்று உருவாகிப் பேருலகம்*
*படைத்தளிக்கும் பெருமான்"*

என்று கூறுவது கொண்டு அறியலாம்.

இவ்வகையில் ஆராய்ந்தால், திருஞானசம்பந்தரின் தேவாரப் பதிகங்களில் சைவசித்தாந்தக் கருத்துக்கள் பல மிளிர்வன காணலாம். இக்கருத்துக்களைப் பின்னர்த் தோன்றிய மெய்கண்டார் முதலான சாத்திர ஆசிரியர்கள் வடித்துத் தந்துள்ளனர் எனலாம்.

## 25. தாயுமானவர் பாடல்களில் இறையியல்பு

### முன்னுரை

மன்னுயிர்களின் அறியாமை இருள் நீக்க அவதரித்த அருளாளருள் தாயுமானவ சுவாமிகளும் ஒருவர். அவருடைய அருட்பாடல்கள், சைவ சித்தாந் தத்துவச் சிறப்புக்களை விளக்குகின்ற அருள் ஞானக் கருவூலங்களாகத் திகழ்கின்றன.

### இறையியல்பு

'பதிபசுபாசம்' ஆகிய முப்பொருள்களுள் தலைமைப் பொருளாகிய பதியின் (இறை) உண்மைநிலையை யாராலும் கண்டறிய இயலாது. இன்னதென்று அறிய இயலாத இந்நிலை, உயிர்களின் வாக்கு மனத்தைக் கடந்த நிலையாகும்.

*"வாக்கு மனம் அணுகாத பூரணப் பொருள்"*
*"தெரிவதற்கு அரிய பிரமமே"*

என்று தாயுமானவர் போற்றுகின்றார்.

பதி, தன் உண்மை நிலையில், சத்து, சித்து, ஆனந்தமாய் நிற்கும் நிலையைத் தாயுமானவரும்,

*'சச்சிதானந்த பிரமமே' (சத்:சித்: ஆனந்தம்)*

என்று விளிக்கின்றார்.

**சத்து** : என்றும் மாறாமல் உள்ள பொருள்.

**சித்து** : தானே அனைத்தையும் ஒருங்கே அறியக் கூடிய அறிவுப்பொருள்.

**ஆனந்தம்** : பெருந்துன்பமான பிறப்பு இறப்புக்களில் அழுந்தி, தினையளவு சிறிய இன்பங்களுக்காக அலமரும் உயிர்களை

அத்துன்பங்களினின்றும் விடுவித்து, நிலைத்த பேரின்பமாகிய முத்தி இன்பத்தைத் தருபவன்.

*"தண்நிறைந்த பேரமுதாய்ச் சதானந்தம் ஆன பெருந்தகை"*
*"கன்னலுடன் முக்கனியும் கல்கண்டும் சீனியுமாய்*
*மன்னும் இன்ப ஆரமுது"*

என்று இறைவன் தனக்கு அமுதச் சுவையாய் இனிக்குமாற்றைப் போற்றுவர் தாயுமானவர்.

"அரூபம் ஆதி குறிகுணம் இறந்து வளர்வஸ்து" என்பர். 'குணம் இறந்து' என்ற தொடர், இறைவன் சத்துவம், இராசதம், தாமதம் போன்ற மாயையின் முக்குணங்கள் இல்லாதவன் என்பதைக் குறித்தது. மேலும் தடத்த நிலையில் இறைவன் பல உருவாகித் திகழும் தன்மையைத்

*"தடஸ்தமாய் நின்று ஒளிர் நிரஞ்சனநிராமயம்"*

என்றும்,

*"ஒன்றே பலவே உருவே அருவே"*

என்றும் குறிக்கின்றார்.

**பேரருள் வடிவினன்**

தன் அருளே உருவாகக் கொண்டு அதனின் பிரிப்பு இன்றி இருக்கும் இறைவனைப்

*"பிரியாத தண்ணருள் சிவஞானி"*

என்றும், அவனருளை,

*"பிரியாத பேரொளி பிறக்கின்ற அருள்"*

என்றும் ஏத்துகின்றார்.

*"எண்ணில் பலகோடி உயிர் எத்தனையோ அத்தனைக்கும்*
*கண்ணில் கலந்த அருள்"*
*"அறிவு இலாமைமயமாய் இருக்கும் எனைஅருளினால்*
*அளவு இலாத தனுகரணம் ஆதியை அளித்த போது"*

என்று அறியாமையில் அமிழ்ந்திருந்த உயிருக்கு அறிவுதந்த இறைப் பெருங் கருணையைப் போற்றுவர்.

**இறைவியாபகம்**

உயிரறிவினால். சுட்டியறியப்படாதவனாய் எல்லை கடந்து நிற்கும் இறைவன், தன் பெருவியாபகத்தில் உயிர், உலகுகளை அடக்கியுள்ளான்.

> *"விண்ணாதி பூதமெல்லாம் தன்அகத்தில் அடக்கி வெறுவெளியாய்..."*
> *".....தன் அருள் வெளிக்குளே அகிலாண்டகோடி எல்லாம் தங்கும்படிக்கு இச்சைவைத்து உயிர்க்குயிராய்த் தழைத்தது"*

**நித்தியப்பொருள்**

முற்றுச் சங்கார காலத்தில் (முற்றழிப்புக் காலம்) அண்டசராசரங்கள் அனைத்தையும் அழித்துத் தான் ஒரு பொருளே எஞ்சியிருக்கும் தன்னுடைய,

> *"விரிவாய பூதங்கள் ஒன்றோடு ஒன்றாய் அழியும் மேல் கொண்ட சோரம்....."*

என்றும்,

> *"சாசுவதம்"*

என்றும் கூறுகின்றார் தாயுமானவர்.

**குறைவில்லா நிறைவு**

முதல்வனின் சொரூப இலக்கணத்தில், தனக்கென்று ஒரு உருவம் அற்ற தன்மையைத் தாயுமானவர் 'நிஷ்களம்' (உருவமற்ற நிலை) என்று குறிக்கின்றார். திருவுந்தியாரும் இதனை,

> *'அகளமாய் யாரும் அறிவரிது அப்பொருள்'*

என்கின்றது.

மேலும், தாயுமானவர் இறைத் தன்மையை விளக்கும்போது, உயிரறிவுக்குப் புலப்படாத தன்னையே 'நிர்விஷயம்' (புலப்படாதது) என்றும், குறைவிலா நிறைவாகப் பூரணப் பொருளாய் இருக்கும் நிலையைப் 'புஷ்கலம்' (நிறைவு) என்றும், நிராமயம் (குறைவின்மை) என்றும் குறிப்பிடுவர். மேலும்,

> *"பார்க்குமிடமெங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரி பூரணானந்தமே"*

என்றும் குறிப்பர்.

### இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன்

• இயல்பாகவே இறைவன் பாசங்களினின்றும் நீங்கிய தன்மையைத் தாயுமானவர், 'நிர்மலம்' (அழுக்கற்றது) என்ற சொல்லால் குறிக்கின்றார்.

### இறைவன் நிர்விகாரி

இறைவன், உயிர்கள் பொருட்டு, படைத்தல் முதலிய ஐந்தொழில்கள் புரிந்தாலும், தன் நிலையில் மாற்றமடைவதில்லை. சூரியன் தன் நிலையில் நின்றபடியே நிற்கத் தாமரை மலர்கிறது. சூரிய காந்தக் கல் நெருப்பை உமிழ்கிறது. நீர் நிலைகள் வற்றுகின்றன. அதுபோலவே, இறைவன் ஐந்தொழில்கள் புரியினும் தன் நிலையினின்றும் மாற்றமடைய மாட்டான்.

*"நிர்விகாரத்தைத் தடஸ்தமாய் நின்று ஒளிர்*
*நிரஞ்சன நிராமயம் ....."*

என்று தாயுமானவர் அருளிச் செய்கின்றார்.

'நிரஞ்சனம்' என்ற சொல் 'குற்றமற்ற பொருள்' என்ற பொருளைக் குறித்தது.

### எங்கணும் பரவிநிற்கும் பெரிய பொருள்

இறைவன், தன்னுடைய தண்கருணைத் திருவருள் கொண்டு, உலகுஉயிர்களோடு பிரிப்பற இரண்டறக் கலந்து அவற்றை இயக்கி அருளுகின்றான். இறைக்கலப்பின்றி உயிர்களுக்கு நிலைபேறு இல்லை. இறைவனும் உயிரும் இரண்டெனப்படாது, ஒரு தன்மைப்பட்டு ஒற்றுமைப்பட்ட நிலையே அத்துவிதத் தொடர்பு எனப்படும். துவிதம்– இரண்டு; அத்துவிதம்–இரண்டற்ற தன்மை; இதற்கு உப்பும் நீரும் ஆகிய இருபொருள்கள் கலந்து ஒரே தன்மையாய் நிற்றலைக் கூறுவர்.

உடலும் உயிரும்போல இறைவன் உயிர்களோடு ஒன்றாய்க் கலந்திருக்கிறான். இருப்பினும் உயிர், தன் தன்மையினால், உடலினின்றும் வேறுபட்டு நிற்பதுபோல, இறைவனும் தன்தன்மையினால் உயிரினின்றும் வேறுபட்டு உள்ளான்; மேலும் உயிர் உடலுடன் இயைந்த நிற்பதுபோல இறைவன் உயிருடன் உடனாகிநின்று உயிரோடுதானும் உலகப் பொருள்களை நுகர்கின்றான். இந்நிலையைத் தாயுமானவரும்

*"கருதரிய மலரின் மணம் எள்ளில் எண்ணெய்*
*உடல் உயிர்போல் கலந்து எந்நாளும்*
*துரியநடு ஊடுஇருந்த பெரிய பொருள்...."*

என்று போற்றுகின்றார்.

**முடிவுரை**

தாயுமானவர் பாடல்களை ஆழ்ந்து நோக்கினால், இறைவனாம் முழுமுதற் பரம்பொருளின் இயல்புகள் பலவற்றைக் கண்டு சைவ சித்தாந்தத்தோடு ஒப்பிட்டு மகிழலாம்.

## 26. அண்ணாமலையாரும் ஆளுடை அடிகளும்

### முன்னுரை

உயிர்வளர்க்கும் மருந்தாகவும், அன்புநெறிக்கு அருந்துணையாகவும் விளங்கும் திருவாசகத்தைக் கூறி, பேரா இன்பப் பெருவெளியில் உண்டான ஆராஇன்ப அமுதவாரிதியில் அமிழ்ந்த மணிவாசகர், பஞ்ச பூதத் தலங்களில் நெருப்புத்தலமாகிய திருவண்ணாமலையில் அருளிய வாசகங்கள் திருவெம்பாவை, திருஅம்மானை முதலியனவாம்.

### திருவெம்பாவை

ஆன்மா, ஆணவமலத்தினின்றும் நீங்கி, கருணைக் கனி ஆகிய இறைத்திருவருளைப் பெறும் பொருட்டு, திருவெம்பாவை எழுந்தது என்று போற்றுகிறது, திருப்பெருந்துறைப் புராணம். இளமங்கையர், நல்கணவனைப் பெறவும், வான்மழை பெய்து நாடு செழிக்கவும் இறைவனைப் போற்றுவதாக மணிவாசகர் பாடுகிறார்.

பெண், உயிர்களின் பிரதிநிதி; ஆண்—தலைவன்; கற்புடைய பெண்கள், தம் நாயகனைச் சேரவிரும்புவதே வாழ்க்கையின் குறிக்கோள். இதன்மூலம் உயிர்கள் தம் தலைவனாகிய இறைவனைச் சேர விரும்புவதை உருவகமாகக் கூறுகின்றார் மணிவாசகர்.

### பிறவியின் பயன்

உயிர்களின் அறிவை மறைக்கும் மூலமலம் ஆகிய ஆணவத்தை நீக்கும் பொருட்டு, இறைவன், மாயையின் காரியமாகி, உடல், கருவி, உலகபோகங்களைப் படைத்துத் தருகின்றான். தோற்றமும் ஈறும் இல்லாத இறைவனின் காட்சியைக் கண்டு, அதனைப் பிறவிப் பயனாகக் கொள்வதே நம் கண்களில் ஒளிபொருந்தியிருப்பதன் பயனாகும். செவிகளின் பயன், அவன் திருநாமங்களின் ஒலியைக் கேட்டு இன்புறுவதே.

*"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்*
*சோதியை யாம்பாடக் கேட்டேயும்வாள் தடங்கண்*
*மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்"*

*(திருவெம்பாவை, 1)*

தேவர்களும் தொடுவதற்கு அஞ்சும் அவன் மலர்ப் பாதங்களை நாம் போற்றுதற்கென்றே வாய் படைக்கப்பட்டுள்ளது. (திருவெம்பாவை,2)

திருநாவுக்கரசரும் தமது திருவங்கமாலையில் இறைவழிபாட்டுக்கே நமது உடலின் ஒவ்வொரு அங்கமும் பயன்பட வேண்டும் என்று உரைக்கின்றார்.

## திருமாலினாலும் பிரமனாலும் அறியப்பட முடியாதவன்

திருமாலினாலும், பிரமனாலும் அறியப்பட முடியாதவன் உயிர்களின் வாக்குமனத்தைக் கடந்து நிற்கின்ற இறைவன். அவனே, தன் அடியவர்க்கு எளியவனாகி நிற்கிறான்.

*"ஆனா அறிவாய் அகலான் அடியவர்க்கு*
*வான் நாடர் காணாத மன்" (7)*

என்று திருவருட்பயனும் கூறும்.

திருமாலும் பிரமனும் இறைவனைக் காண முடியவில்லை என்பது, செல்வத்தாலும் கல்வியாலும் இறைவனை அடைய முடியாது என்பதன் உருவகமாகும். இறைவன் நெருப்புமலையாக ஓங்கியமை, ஒளிவடிவாக உயிர்களின் அகஇருளான ஆணவத்தை நீக்கும் தன்மைத்து ஆகும். ஒளிவடிவம் இறைவனின் அருவுருவ வடிவமாகிய இலிங்கத் தத்துவத்தைக் குறிக்கும்.

*"மால்அறியா நான்முகனும் காணாமலை"*
*"ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்" (திருவெம்பாவை,5)*

ஆன்மாக்கள், தம்முள் நின்று தம்மை இயக்கும் இறைவனை அறியாத தன்மையை,

*"...................................................... சிவனே சிவனே என்று*
*ஓலம் இடினும் உணராய்......." (திருவெம்பாவை, 5)*

என்று சுட்டுவர்.

## எல்லையற்ற பரம்பொருள்

அடியும் முடியும் காணப்பட முடியாமல் எல்லைஅற்று விளங்கும் அவன் பாதங்கள் ஏழுபாதாள உலகங்களுக்கும் கீழேயும், கொன்றையணிந்த

செஞ்சடை எல்லாப் பொருள்களுக்கும் முடிவாகவும் உள்ளது.

*"பாதாளம் ஏழினும் சொற்கழிவு பாதமலர்*
*போதார் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே"*
*(திருவெம்பாவை 10)"*

மேலும், குயில்பத்தில்,

*"................................ எங்கள் பெருமான்*
*பாதம் இரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக்கப்பால்*
*சோதி மணிமுடி சொல்லில் சொல்லிறந்து நின்ற தொன்மை" (1)*

என்று கூறுவதும் காணலாம்.

**திருஅம்மானை**

மணிவாசகர் இறைவன்பால் வைத்துள்ள அளவற்ற நேசத்தால், அவனிடத்தில் இரண்டறக் கலத்தற் பொருட்டுத் திருஅம்மானைத் திருப்பாடல்களைப் பாடுகிறார்.

உலக வாழ்க்கையில், அம்மானை ஆடுவோர் தங்களுக்கு நல்ல கணவன் வாய்க்கவேண்டி, அக்கணவனின் சிறப்புக்களைக் கிளந்தெடுத்து வரிப்பாட்டாகிப் பாடுவர். அதுபோல, இறைத் திருவடிஇன்பப் பேற்றியலில் உயிர், தன்னைப் பெண்ணாகப் பாவித்து, தலைவனான இறைவனின் திருவடிகளைப் போற்றிப் பேணும் முறைமையாக மணிவாசகர் இதனைப் பாடுகின்றார்.

மணிவாசகர் திருவண்ணாமலையில் எழுந்தருளி இருக்கும்காலத்து, கன்னிப் பெண்கள் தெருமுற்றத்தில் அம்மானை ஆடுதலைக் காண்கிறார். அவர்கள் கூற்றாக அண்ணாமலையார் புகழை அமைத்துத் திருஅம்மானை அருளுகின்றார்.

**தன்னாணையாம் கருணையுடையவன்**

செங்கண் நெடுமால், வராகமாய் மண்ணை அகழ்ந்தும் காண முடியாத திருவடிகளை உடையவன், உயிர்களின் பெருந்துன்பப் பிறப்பினை அறுத்திட்டு, வலிய வந்து தன் திருவடிப் பேறாகிய வீட்டின்பத்தை அளிப்பவன்.

*"செங்கண் நெடுமாலும் சென்றிடந்தும் காண்பரிய*
*பொங்குமலர்ப் பாதம் பூதலத்தே போந்தருளி*
*எங்கள் பிறப்பு அறுத்திட்டு எந்தரமும் ஆட்கொண்டு"*

*(திருஅம்மானை,1)*

உமாபதிசிவம், இறைவனை மன்னுபவம் தீர்க்கும் மருந்து என்றும், பிறப்பறுப்பவன் என்றும் போற்றுவதும் காணலாம்.

மேலும் இறைவன் உயிர்களின் மும்மலப் பிணிப்பை அறுத்து அருள்பவன் என்பதை மாணிக்கவாசகர்,

*"பந்தம் பறியப்பரிமேற் கொண்டான்"*

*(திருஅம்மானை,3)*

என்றும்,

உயிர்களின் பிறப்பிற்கு வித்தாகிய இருவினைகளைத் தொலைத்து பிறப்பறுத்த அந்தணன் அவன் என்பதை,

*"வினைகடிந்த வேதியன்" (திருஅம்மானை 5)*
*"கருவெந்துவீழக் கடைக் கணித்து*
*என் உள்ளம் புகுந்தே*
*திருவந்தவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ"*

*(திருத்தெள்ளேணம், 5)*

என்று போற்றுவதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

**எளியவர்க்கு இரங்கும் கோமான்**

தன்னை நினையாதார்க்குச் சேயனாகவும், தன்னை இடையறாது நினைப்பவர் உள்ளத் தாமரையில் வீற்று இருப்பவனுமாகிய இறைவன், இருள் நிலையில் துன்பத்துள் உழன்று கொண்டிருக்கும் ஆன்மாவைத் தாய்போல் வந்து தயை செய்து ஆண்டு அருள்பவன்.

*"நாயான நந்தம்மை ஆட்கொண்ட நாயகனைத்*
*தாயான தத்துவனை...."*

*(திருஅம்மானை 7)*

எளியவள் வந்தியின் பொருட்டுக் கூலியாளாக வந்து பிரம்படிபட்டுத் தம் துன்பத்தைத் துடைத்த பெருங்கருணையையும் குறிப்பிடுகின்றார்.

*"கண்சுமந்த நெற்றிக்கடவுள் கலிமதுரை*
*மண் சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு*
*புண் சுமந்த பொன்மேனி"*

*(திருஅம்மானை8)*

## அந்தமிலா ஆனந்தம் தருபவன்

பிறவிப் பெருந்துன்பத்தினின்றும் தூக்கிக் காத்து, சிவன் தனக்குப் பேரானந்தம் தந்து ஆண்டருளிய பெற்றியை நூல் முழுவதும் போற்றுகிறார். தெளிந்த தேறல், ஆராவமுது எனப் பலபடியாகப் போற்றும் மணிவாசகர், தன்னை மறந்து இறைப்பேரின்பத்தில் தான் அழுந்திய தன்மையை விவரிக்கின்றார். கடினத் தவத்தோர்க்கும் தோன்றாத கடவுள், தானே வலிந்து வந்து, நாய்போன்ற தனக்குத் தாயாக –ஆசானாக எழுந்தருளித் தன்னை ஆண்டு கொண்டதாக உரைக்கின்றார்.

*"வான் வந்த தேவர்களும் மாலயனோடு இந்திரனும்*
*கான்நின்று வற்றியும் புற்றெழுந்தும் காண்பரிய*
*தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்டு*
*ஊன்வந்து உரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து*
*தேன் வந்தமுதின் தெளிவின் ஒளிவந்த*
*வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானை"*

*(திருஅம்மானை,4)*

*"அன்பன் அமுதளித்து ஊறும் ஆனந்தன்"*

*(குயிற்பத்து,6)*

## தன் அடியவனாய் ஏற்றான்

பல்வேறுபிறப்பு இறப்புக்கள் பிறந்து இறந்து இளைப்புற்றிருக்கும் தன்னை, இறைவன் தனது அடியவனாக ஏற்று, ஊனையும் உருக்கித் தேன், பால், கருப்பஞ்சாறு போல் உள்நின்று தித்திக்கின்றான் என்பதை,

*"ஆனையாய்க் கீடமாய் மானுடமாய்த் தேவராய்*
*ஏனைப் பிறவாய்ப் பிறந்திறந்து எய்த்தேனை*
*ஊனையும் நின்றுருக்கி என்வினையை ஒட்டுகந்து*
*தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்தினிய*
*கோனவன்போல் வந்தென்னைத் தன் தொழும்பில் கொண்டருளும்*
*வானவன்.........."*

*(திருஅம்மானை,14)*

திருப்பூவல்லியில், சிவன், தன்பந்தம் அறுத்து ஆண்டுகொண்ட பெருமையைப் போற்றுவர்.

*"எந்தையெந்தாய் சுற்றம் மற்றும் எல்லாம் என்னுடைய*
*பந்தம் அறுத்து என்னை ஆண்டுகொண்ட*
*பாண்டிப்பிரான்......."*

*(திருப்பூவல்லி,2)*

*"......................அம்பலத்தே ஆடுகின்ற*
*புணையாலின்"*

*(திருப்பூவல்லி,1)*

என்று சிவன், பிறவிப் பெருங்கடலைக் கடக்கத் தனக்குப் புணையாக இருந்த தன்மையை விவரிக்கின்றார்.

## தாயினும் பெருமைமிக்க தயாபரன்

ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தாயன்பை, இறையருளுக்கு உவமிக்கின்றார் மணிவாசகர்; பல இடங்களில், தாயைவிடச் சிறந்ததாக இறையன்பைப் போற்றுவர்

*"தாயான தத்துவனை"* *(திருஅம்மானை,7)*

*"நாயிற்கடைப்பட்ட நம்மையும் ஓர் பொருட்படுத்துத்*
*தாயிற் பெரிதும் தயாஉடைய தம் பெருமான்...."*

*(திருப்பூவல்லி,3)*

என்பர்.

## முடிவுரை

அண்ணாமலை இறைவனே தனக்கு அனைத்தும் ஆகி நின்றான் என்பதை இவ்வாறு மணிவாசகர் விவரிக்கின்றார்.

## 27. சுந்தரர்தேவாரமும் திருவருளும்

### முன்னுரை

சுந்தரர், தம் முதல் பாடலிலேயே 'பித்தா' என்று இறைவனை விளிக்கின்றார். 'பித்தன்' என்ற சொல்லுக்குப் பேரருளாளன், "பெருங்கருணையாளன்" போன்ற பொருள்களைக் குறிக்கின்றனர் அறிஞர்.

*"பெத்த மனம் பித்து; பிள்ளைமனம் கல்லு"*

என்ற தொடரே இதற்குச் சான்று.

### பேரருளாளன்

*"மானிடவாழ்வில் மயங்கத்தலைப்படும்போது எனைத்*
*தடுத்தாட் கொண்டருள வேண்டும்"*

என்று சுந்தரர் வேண்டிக் கொண்டதை ஏற்று, சிறிதும் பிசகாமல் இறைவன் அவரைத் தடுத்தாட்கொள்ள வருகிறான். இறைவன் கொடுத்த ஓலையைச் சுந்தரர் கிழித்து எறிகிறார். மேலும், 'பித்தன்" என்று பலவாறு பேசி அவரை அவமதிக்கிறார். இருப்பினும், அதனைப் பொருட்படுத்தாது, இறைவன் தன் பெருங்கருணையினால் சுந்தரரைத் தடுத்தாட் கொள்கிறான்.

'பித்தா' என முதலில் அழைத்தாலும், பின் 'அத்தா, அருளாளா' எனப் போற்றுகிறார்.

### தன்வயத்தன்

'பித்தா' எனும் சொல், 'தன்வயத்தன்' என்ற பொருளையும் குறிக்கிறது. அஃதாவது சுதந்திரம் உடையவன்; இறைவன் ஒருவனே சுதந்திரம் உடையவனாகவும், உயிர்கள் அவனுடைய அடிமைகள் ஆகவும் இருக்கின்றன. 'தன்வயத்தன்' என்பது இறைவனுடைய எண்குணங்களுள் ஒன்று.

### இறுதி அடைக்கலம்

அடுத்துப் 'பிறைசூடி' என்று இறைவனை அழைக்கின்றார். இச்சொல்,

சந்திரனுக்கு அடைக்கலம் தந்து பேரருள் புரிவதைக் குறிக்கும். இறைவனே உயிர்களுக்கு இறுதி அடைக்கலம் என்பதை உமாபதிசிவனார்,

*"ஆக்கிளவையும் அளித்து ஆகுலடன் அடங்கப்*
*போக்கும் அவன் போகாப்புகல்"*

என்று கூறுவர்.

**இறைத்திருவருள்**

இறைச் சத்தியே 'திருவருள்' எனப்படுவது; இறைப் பேரருளாகிய சிவசத்தியே சிவமாம் தன்மையை, உயிர்கள் சாருமாறு செய்து, சிவத்தோடு பிரிப்பின்றி இருப்பது.

*"மாதினை மதித்து அங் கார்பால் கொண்டமணி"*

என்று உசுந்தரர் கூறுகிறார். உமாதேவியை இடப்பாகத்தில் வைத்தவன்; தன் உடலில் பாதியை உமைக்குக் கொடுத்தவன்; சத்தியோடு பிரிப்பின்றி இயைந்து இருப்பவன் என்பது இதன் பொருள்.

அருள்நந்தி சிவனாரும்,

*"எத்திறம் நின்றான் ஈசன்; சுத்தியும் அவளும் நிற்பள்"*

என்பர்.

*" 'அத்தா' உனக்காளாய் இனி அல்லேன் எனலாமே!"*

என்பது சுந்தரர் கூற்று.

அனைத்துயிர்களும் இறைவனுக்கு அடிமையாகவும், உலகங்கள் அனைத்தும் இறைவனுக்கு உடைமையாகவும் திகழ்கின்றன. இந்நிலையை உயிர்கள் உணராத போது, 'யான், எனது' என்ற அகப்பற்றும், புறப்பற்றும், தனக்குத்தானே பொய்த்தலைமை கற்பித்துக் கொள்ளும் தன் முனைப்பும் உயிர்களிடத்தில் குடிகொள்கின்றன. தன்னுள் உள்ள இறைவனை உணர்ந்தபோது, திருவருளில் அழுந்திநின்ற நிலையில், தனக்கென ஒருசெயலும் இல்லை, முழுமுதலான இறைவனே 'தனக்கு முதல்வன்' என உணரத் தொடங்குகிறது.

ஊஞ்சலில் ஏறி நின்று ஆடுபவன், தான் ஏறி நின்று ஆடும் ஊஞ்சலுக்குத் தரைதான் ஆதாரம் என்று உணர்வது இல்லை.

ஊஞ்சல்கயிறு அற்று, ஊஞ்சல் கீழே விழுந்தவுடன், உடனே அவனை நிலம் தாங்கிக் கொள்கிறது. ஊஞ்சல்போன்றது உலகவாழ்வு; நிலம்தான் திருவருள்; மனித வாழ்வின் எல்லா நிலைகளிலும் திருவருள்; ஆதாரமாக இருந்தாலும் கூட, மனிதன் உலகப் பற்று அற்று திருவருளைப் பற்றும்போதுதான், அதனை முழுமையாக உணர்கிறான். எனவே, உலக வாழ்விலும் திருவருளே ஆதாரம்; உலகப்பற்றை விட வேண்டுமெனில், பற்றற்ற இறைவனைப் பற்ற வேண்டும்.

*"மற்றுப் பற்றெனக்கு இன்றிநின் திருப்பாதமே மனம் பாவித்தேன்*
*பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாத தன்மை வந்து எய்தினேன்"*

என்று திருவருளில் அழுந்திய நிலையில் கூறுகின்றார் சுந்தரர்.

**பெறற்கரிய திருவருள்**

இறைத் திருவருள் கிடைத்தற்கரியது. அதனை முழுமையாகப் பெற உகந்த பிறவி மனிதப் பிறவி. அதனால்தான் நாவுக்கரசரும் 'மனித்தப்பிறவியும் வேண்டுவதுதே இந்த மாநிலத்தே' என்று மனிதப் பிறவியின் முக்கியத்துவத்தை வலியுறுத்துகிறார்; சுந்தரரும்,

*"பெறலாகா அருள் பெற்றேன்"*

என்கின்றார். 'பல்லூழிக்காலம் பயின்று அரனை அர்ச்சிக்கில் நல்லறிவு சற்றே நகும்' என்பது ஆன்றோர் வாக்கு. எனவே இப்பிறவியின் பயன் திருவருளைப் பெற்று அதில் அழுந்தி இருத்தலாகும்.

**இறைவன் ஆயன்**

பசுக்களை வழிநடத்தி மேய்ப்பவன் ஆயன்; இறைவனும் உயிர்களாகிய பசுக்களுக்குத் தலைவன் எனவே,

*"ஆயா, உனக்காளாய் இனி அல்லேன் எனலாமே"*

என்று இறைவனே தன்னுடைய தலைவன் என்று உணர்ந்த அந்நிலையில் பரடுகின்றார்.

**எங்கும் எதிலும் இறைவனைக் காணல்**

திருவருளை உணர்ந்தோர் எப்பொருளிலும் இறைவனைக் காண்பர். காரைக்காலம்மையார், நாளின் ஒவ்வொருபொழுதிலும் இறைவனைக் காண்கிறார். இறைவன் ஐம்பூதங்களையும், சூரிய சந்திரரையும், உயிரையும் தன் வடிவாகக் கொண்டு விளங்கும் தன்மையைச் சுந்தரரும்,

*"ஊனாய் உயிரானாய் உடல் ஆனாய் உலகானாய்*

*வானாய் நிலன் ஆனாய் கடல் ஆனாய் மலை ஆனாய்"*

என்று போற்றுகின்றார்.

மணிவாசகரும்,

*"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி*
*ஊனாகி உயிராகி"*

என்று இறைவன் அனைத்திலும் நின்ற தன்மையை வாழ்த்துவது, ஈண்டு எண்ணற்குரியது.

**உயிரைப் பிணிக்கும் வல்வினைகள்**

உயிர்கள் தம் அறிவை மறைக்கும் ஆணவத்தால் இருவினைகளைச் செய்து, பிறவிக்கடலில் வீழ்ந்து அலமருகின்றன.

*"இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்*
*வருபவக்கடலில் வீழ்மாக்கள்............"*

என்று இத்துன்பநிலையைச் சேக்கிழாரும் உரைப்பர்.

திருவள்ளுவர், 'இருள்சேர் இருவினை' என்றும், 'பிறவிப் பெருங்கடல்' என்றும் கூறுவர். பிறவியாகிய பெருங்கடலை இறைவனது திருவருளாகிய புணையைக் கொண்டே கடக்க முடியும். எனவே, சுந்தரரும், உயிரைப் பிறவிக் கடலில் பிணிக்கின்ற கொடிய வினைகளை இறைவன் ஒருவனாலேயே நீக்க முடியும் என்கின்றார்.

*"பிணிவண்ணத்த வல்வினை தீர்த்து அருளீர்"*

சுந்தரர் வல்வினை என்று கூறுவது, முன்புசெய்த சஞ்சித வினைகளின் தொகுதியைக் குறிக்கும்.

மணிவாசகரும்,

*'முந்தை வல்வினை, தொல்லை வினை' என்று குறிப்பர்.*
*"தனித்துணை நீ நிற்க, யான் தருக்கித் தலையால் நடந்த*
*வினைத் துணையேனை விடுதிகண்டாய்"*

என்று தன்னையே ஏசிக் கொள்வதும் நினையத்தக்கது.

**நிலையாமையை உணரும் மனநிலை**

வாழ்வு, நீரில் எழுத்து, நிகழ்கனவு, பேய்த்தேர், நீர்க் குமிழி போன்ற நிலையாமையை உடையது.

*"நெருநல் உளனொருவன் இன்றுஇல்லை எனும்*
*பெருமை உடைத்துஇவ் வுலகு"*

என்பர் திருவள்ளுவர்.

மேலும், நிலையில்லாத உலகப் பொருள்களை நிலையென்று கருதுவது சிறுமை என்பதை,

*"நில்லாதவற்றை நிலையின என்று உணரும்*
*புல்லறிவாண்மை கடை"*

என்கிறார். ஆன்மா, திருவருளைப் பற்றும்போது, உலகப் பொருள்களில் பற்று நீங்குகிறது. சுந்தரர்,

"வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்" என்று கூறி, "தாழாது அறம் செய்ம்மின்" என்று வலியுறுத்துகின்றார். சான்றோரும்,

*"நாளைச் செய்குவம் அறம் எனின் இன்றே*
*கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்"*

என்று நம்மை எச்சரிக்கின்றனர்.

**தில்லைக்காட்சி**

சுந்தரர், கோயில் எனப்போற்றப்படும் தில்லையில் நடராசப் பெருமானுடைய திருநடனக்காட்சியில் இலயித்து நிற்கிறார். சேக்கிழார் இதனை வருணிக்கும்போது,

*"ஐந்தபேரறிவும் கண்களே கொள்ள*
*அளப்பரும் கரணங்கள் நான்கும்*
*சிந்தையே ஆகக்குணம் ஒரு மூன்றும்*
*திருந்து சாத்துவிகமே ஆக*
*இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த*
*எல்லையில் தனிப்பெருங் கூத்தின்*
*வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து*
*மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்"*

என்பர்.

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புலன்களின் வழியாக வரக்கூடிய அறிவு அனைத்தையும் கண்களே கொள்ள, கண்களால் இறைத் திருவுருவ அழகை அள்ளிப் பருகுகின்றார். மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்ற அகக்கருவிகள் நான்கனுள், சித்தம் ஒன்றே மேலாங்கி நிற்கிறது; இறைநினைப்பு ஒன்றே அவரது சிந்தனையில் நிறைந்து நிற்கின்றது. இராசதம், தாமதம், சாத்துவிகம் என்ற முக்குணங்களுள் ஞானவடிவான சத்துவகுணமே மேலோங்கி நிற்க, இறைத் தோற்றத்தில் ஆழ்ந்து, மெய்ம்மறந்து பேரானந்தமாகிய திருவருள் வெள்ளத்தில் திளைத்தார்.

**முடிவுரை**

இவ்வாறு, மண்ணுலக வாழ்வில், கருவிகளை நீக்கித் திருவருள் வெள்ளத்தில் திளைத்த சுந்தரர், பின், சேர நாட்டுத் திருவஞ்சைக் களத்தில் இருந்து, வெள்ளையானையின் மீது அமர்ந்து கயிலாயம் சென்றார்; தம் இறைத் தொண்டைத் தொடர்ந்தார்.

## 28. அருணகிரிநாதரும் அனுபூதியும்

### முன்னுரை

பதினைந்தாம் நூற்றாண்டில் தோன்றிய அருளாளருள் குறிப்பிடத் தகுந்தவர் அருணகிரிநாதர். சிவஞானபானுவான இவர் அருளிச் செய்த நூல்களுள் 'கந்தர் அனுபூதியும்' ஒன்று; இந்நூல் இன்றும், சைவச் சான்றோர்களால் மந்திரம் என மதிக்கப்பட்டு வருகின்றது. பாராயணம் செய்து முருகனின் தண்ணருள் பெற, உகந்த வழிபாட்டு நூலாகவும் திகழ்கின்றது.

### கந்தர் அனுபூதி-சொற்பொருள்

கந்தன்–கந்து அன், கந்து –பற்றுக்கோடு; யானை கட்டும் தறி; ஆன்மாக்களுக்குப் பற்றுக் கோடாகத் திகழ்பவன். அனு–உடன்; பூதிஆதல்; ஆன்மா இறைவனுடன் ஒன்றாவது;

அனுபூதி – ஒன்றாவதால் உண்டாகும் அனுபவ ஞானம். ஆகவே, ஆன்மா, கந்தனுடன் ஒன்றுபட்டு அத்துவிதமாகி அதனால் விளையும் மெய்யுணர்வைக் கூறும் நூல் கந்தர் அனுபூதி ஆகும்.

### இறையருள் சித்திக்கும் நிலை

உலகப்பொருள்களில் மனைவி மக்களிடத்து வைக்கும் புறப்பற்றும், 'யான்' என்ற அகப்பற்றும் அறவே அற்ற இடத்தில் பேரின்ப நலமாகிய இறையின்பம் வெளிப்பட்டு நிலைத்து நிற்கும். முதலில் புறப்பற்றும், பின் அகப்பற்றும் நீங்கும். சிறந்த பொருளாகிய சிவத்தால் பெறும் பேரின்பமே உயிர் பெறுதற்குரிய தலையாய இன்பமாகும். எனவே, உயிர் தன்னுள் ததும்பி நிற்கும் இறைவனின் நிறைவில் தன்னைப் பறிகொடுத்து விழைவும் வெறுப்புமற்றுத் திளைத்து நிற்கும். இந்நிலையை அருணகிரிநாதர்,

*"எல்லாமற என்னையிழந்த நலம்" (க.அ.2–3)*

என்று குறிப்பிடுகின்றார்.

இந்நிலையில், உறங்கியவன் கையில் பிடித்திருந்த பொருள் தானே நெகிழ்ந்து விழுவதுபோலப் பிற உலகியல் பொருள்களில் உயிருக்கு ஈடுபாடு இல்லாதுபோகும்.

> *"ஒண்பொருள் கண்ணுற்றார்க்கு உறுபயனே அல்லாத*
> *கண்படுப்போர் கைப்பொருள் போல் காண்" (திருவருட்பயன், 78)*

என்பர் உமாபதிசிவனார்.

### உண்மைப் பொருள் விளங்கி நிற்கும் இடம்

நிலைத்த சத்துப் பொருளாகிய இறைவன் விளங்கி நிற்கும் இடம், அறிபவன் (இன்பம் நுகரும் ஆன்மா); நுகர்வதாகிய அறிவு! அறியப்படும் பொருளாகிய இறைவன் (நுகரப்படும் பொருள்) என்ற 'திரிபுடிஞானம்' நீங்கப் பெற்று அறியப்படும் பொருளாகிய இறைத்திருவருளே மேம்பட்டு நிற்கும் நிலையாகும்.

'திரிபுடிஞானம்' நீங்கப் பெறாதவர்கள் நன்முத்தியைக் காண இயலாதவர்கள் ஆவர்.

> *"காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை*
> *காண்பார்கள் நன்முத்தி காணார்கள்–காண்பானும்*
> *காட்டுவதும் காண்பதுவும் தன்கடந்தைச் சம்பந்தன்*
> *வாட்டுநெறி வாரா தவர்"*
>
> *(வினாவெண்பா.11)*

இவ்வருள்நிலை இறைவனே வந்து தன்னையாண்ட இடம் என்று வருணிக்கின்றார் அருணகிரிநாதர். மேலும்,

> *"யானாகிய என்னை விழுங்கி வெறுந்*
> *தானாய் நிலைநின்றது தற்பரமே"*
>
> *(க.அ.28; 3–4)*

என்று போற்றுவர்.

### வாக்குமனம் எட்டாத நிலை

இறைப்பேரின்பத்தை வருணிக்க வார்த்தைகளே இல்லை. சொல்லிறந்த பூரணநிலையாகிய இதனை, இத்தன்மைத்து என விளக்க இயலாத நிலையில், தருமையாதீன குருமுதல்வர் குருஞானசம்பந்தரும்,

*"உரை இறந்த பேரின்ப உல்லாசவீடு"*

*(சொக்கநாத வெண்பா,54)*

என்று போற்றுவர்.

இந்நிலையை,

*"பேச்சற்ற சுவாநுபூதி நிலை"*

எனக்கூறும் அருணகிரிநாதர்,

*"அவ்வாறு அறிவார் அறிகின்றதலால்*
*எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பதுவே" (க.அ.30,3–4)*

என்றும் கூறுகிறார்.

திருவுந்தியார்,

*"இங்ஙன் இருந்தது என்று எவ்வண்ணம் சொல்லுகேன்*
*அங்ஙன் இருந்தது என்று உந்தீபற;*
*அறியும் அறிவு அது அன்று என்று உந்தீபற"*

என்று உரைப்பதும் இங்கு எண்ணத்தகும்.

**வினையில் விழுந்து அழுந்தும் உயிர்**

அரிய மானிடப் பிறவியின் பயனாகிய இறைப் பேரின்பத்தை உயிர் அடையவொட்டாது, உயிரைக்கட்டுவது 'தளை'. அருணகிரிநாதர் பாசம் நீங்கப்பெற்ற அடியவராயினும், உலக மக்களின் நிலையைத் தன்மீது ஏற்றிக் கூறுகிறார்.

*"வளைப்பட்ட கைம்மாதொடு மக்களெனும்*
*தளைப்பட்டு அழியத்தகுமோ தகுமோ" (க.அ.4:1–2)*

என்றும்,

*"மனைமக்கள் சுற்றமெனு மாயா*
*வலையைக் கடக்க அறியாதே*
*வினையிற் செருக்கி அடி நாயேன்*
*விழலுக்கு இறைத்து விடலாமோ" (திருப்புகழ்)*

என்றும் வருந்துகிறார்.

"திருவடிப்பேற்றை விரும்பாது, உலகோர், மனைவிமக்கள் என்ற உயிர்ப்பற்றும், பொன் முதலிய பொருட்பற்றும் கொண்டு துன்பத்தில் உழல்கின்றனரே"; என்று மனம் நோகின்றார் திருநாவுக்கரசர்.

*"மனைவி தாய்தந்தை மக்கள் மேற்றுள சுற்றமென்னும்*
*வினையுளே விழுந்து அழுந்தி வேதனைக்கிடம் ஆகாதே*
*கனையுமாகடல் சூழ் நாகை மன்னு காரோணத்தானை*
*நினையுமா வல்லீராகில் உய்யலாம் நெஞ்சினீரே"*

என்று உலகமக்களை இறையருள் பெற்று உய்யும் பொருட்டு அழைக்கிறார், திருநாவுக்கரசர்.

## திருவருளை அவாவிநிற்கும் உயிர்

உயிர்கள், தவநெறியான இறைநெறியை மேற்கொள்ளாது அவநெறியைப் பற்றி அலைகின்றன. இந்த அவலநிலைமாற இறைத்திருவடிகளைப் பற்றும்படி தன் மனத்தை வேண்டுகின்றார் அருணகிரிநாதர்.

*"கெடுவாய் மனனே கதிகேள் கரவா*
*திருவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்*
*சுடுவாய் நெடுவேதனை தூள்படவே*
*விடுவாய் விடுவாய் வினையாவையுமே" (க.அ.7)*

மணிவாசகரும், தன்நெஞ்சை முன்னிலைப்படுத்தி அறிவுறுத்தும் பாடல் பின்வருமாறு:

*"வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே! வல்வினைப்பட்டு*
*ஆழ்கின்றாய் ஆழாமல் காப்பானை ஏத்தாதே*
*சூழ்கின்றாய் கேடு உனக்குச் சொல்கின்றேன் பலகாலும்*
*வீழ்கின்றாய் நீஅவலக் கடலாய வெள்ளத்தே"*

*(திருவாசகம்–அறிவுறுத்தல், 20)*

## ஒன்றுவிட்டு ஒன்றுபற்றும் நெஞ்சம்

ஊஞ்சல்கயிறு, இங்குமங்கும் அலைவதுபோல, உயிர்கள், உலகப் பொருள்களை ஒன்றுவிட்டு ஒன்றுபற்றி, இருவினைகளைச் செய்து, இன்பதுன்பங்களுள் அழுந்துகின்றன. ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் ஆகிய ஐம்மலங்களாகிய கயிறுகளால் கட்டுண்டு உயிர்கள்

சொர்க்கம், நரகம், பூவுலகம் என்ற உலகங்களில் உழன்று திரிகின்றன.

ஊஞ்சலில் ஆடும் ஒருவன் ஊஞ்சல் கயிறு அற்று விழும்போது, நிலத்தை வந்து அடைவதுபோல, ஐந்துகட்டுகளும் அறுந்தபோது, உயிர், இறைத்திருவடியை வந்து அடைகிறது. மெய்கண்டாரும்,

*"இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறாவான்*
*காணலே தமது முதல் சீபாதத்தை அணையும்—என்றது"*
*"ஊஞ்சல்கயிறு அற்றால் தாய் தரையேயாம் துணையான்"*
***(சிவஞானபோதம் நூற்பா,8, நான்காம் அதிகரணம், மேற்கோள், ஏது)***

என்று கூறுவர்.

இவ்வருள் நிலையைத் தாம் அடைய இறைவனை வேண்டுகிறார், அருணகிரிநாதர்:

*"மட்டூர் குழல்மங்கையர் மையல்வலைப்*
*பட்டூசல் படும்பரிசு என்று ஒழிவேன்"*
*(க.அ.9:1–2)*

நாவரசரும்,

*"உறுகயிறு ஊசல்போல ஒன்றுவிட்டு ஒன்றுபற்றி*
*மறுகயிறு ஊசல் போலவந்து வந்துஉலவு நெஞ்சம்*
*பெறுகயிறு ஊசல் போலப் பிறைபுல்கு சடையான் பாதத்து*
*அறுகயிறு ஊசலானேன் அதிகை வீரட்டனீரே"*

என்று உலகப்பற்றுக்கள் அற்றநிலையில், திருவருளைப் பெற்ற தன்மையைக் கூறுகிறார்.

## தன்முனைப்பு அற்ற இடமே திருவடி

இறைத்திருவடி என்பது; 'நான், எனது' என்ற அகங்காரம், மமகாரம் அற்ற இடமாகும்.

*"யான்எனது என்று அற்ற இடமே திருவடியா"*
*(கந்தர் கலிவெண்பா, கண்ணி,34)*

என்றுரைப்பர் குமரகுருபரர். எனவே முருகன் திருவடியை அடையத் தடையாய் நிற்கும் அவாமுதலிய குற்றங்களை அறுக்குமாறு அறிவுறுத்துகின்றார் அருணகிரியார்.

*"கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்*
*றுய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்*
*மெய்வாய் விழிநாசி யொடும் செவியாம்*
*ஐவாய் வழிசெல்லும் அவாவினையே"*

*(க.அ.14)*

### இறைத்திருவடிகளைத் தன் தலையில் சூடுதல்

இறைவனுடைய திருவடிகள் எனப்படுவன, அவனது ஞானசத்தியும், கிரியா சத்தியுமாகும். அத்திருவடிகளைச் சூடிக் கொள்ளுதல், தலைமேற் பொருந்த வைத்தல் என்பது முதல்வனுடைய ஞானசத்தி கிரியாசத்திகளில், உயிரானது, தனது ஞானசத்தியையும், கிரியாசத்தியையும், அடங்கச் செய்தலாகும். அஃதாவது, தன்முனைப்பு என்ற செருக்கு அற்று, தன்செயலற்று, இறைத்திருவருள் வழியே அடங்கி நிற்றலாகும்.

*"சாடுந் தனிவேல் முருகன் சரணம்*
*சூடும்படி தந்தது சொல்லுமதோ"*

*(க.அ.44:1–2)*

பாசத்தை அழித்து, தனது ஞானத்திருவடியைத் தன் தலையில் சூட்டிக் கொள்ளுமாறு தந்தருளிய அப்பரம் பொருளின் கருணைத்திறத்தைச் சொல்ல வார்த்தையில்லை என்று போற்றுகின்றார் அருணகிரிநாதர். முருகன் திருவடிபட்டதால், தன்தலையில் பிரமன் எழுதிய எழுத்து அழிந்து விட்டதாகக் கூறி மகிழ்கின்றார்.

*"சேல்பட்டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்*
*மால்பட்டழிந்தது பூங்கொடியார்மனம் மாமயிலோன்*
*வேல் பட்டழிந்தது வேலையுஞ் சூரனும் வெற்பும் இவன்*
*கால் பட்டழிந்தது இங்கு என்தலைமேல் அயன் கையெழுத்தே"*

*(கந்தரலங்காரம், 40)*

தாயுமானவரும், தனக்கு இறைவன் அளித்த திருவடித் தீட்சையைக் கூறுகின்றார்:

*"................................... அருட்குருநாதன்*
*தன்பாதம் சென்னியில் வைத்தான்–என்னைத்*
*தானறிந்தேன் மனந்தானிறந்தேனே"*

அந்தக் கருணைத் திறத்தின் காரணமாக, தன் செயல் ஒன்றுமின்றி, இறைத்திருவருளில் தான் அடங்கிநின்ற நிலையைக் குறிப்பிடுகின்றார்.

**பேசா அனுபூதி பிறந்தநிலை**

உயிரின் ஆணவம் நீங்கும் பொருட்டு, இறைவன் 'மண்' முதல் 'நாதம்' முடிய 36 தத்துவங்களைக் கொண்டு உயிர்களுக்கு, உடல்களையும், உலகங்களையும் அளிக்கின்றான். இவற்றுக்கு அப்பாற்பட்டு, தத்துவங்களைக் கடந்த நிலையே சாயுச்சிய பேரானந்த முத்தி என்பதை அருணகிரிநாதர்,

*"ஆறாறையு நீத்ததன் மேல்நிலை"*

என்ற தொடரால் குறிக்கின்றார்.

ஆணவமாகிய அறியாமையின் காரணமாக, நிலையற்ற புறப்பொருள்களின் மேல் மட்டற்ற ஆசைகள் பிறக்கின்றன. அவை சங்கிலி வளையல்களாகி, உயிரறிவில் விலங்கை இடுகின்றன; உயிர், இறைவனோடு இரண்டறக் கலந்து நிற்கும் 'பேசா அனுபூதி' நிலைக்குத் தடையாக அமைகின்றன. எனவே, இறையருளால் ஆசையை அறுத்துவிட்டால், இறைவனுடன் கூடும் 'பேசா அனுபூதி' நிலையை எளிதில் எய்தலாம்.

*"..................... முருகா! நினதன்பருளால்*
*ஆசாநிகளம் துகளாயினபின்*
*பேசா அனுபூதி பிறந்ததுவே"*

*(க.அ.43;2–4)*

என்பது அருணகிரிநாதரின் வாக்கு! குருஞானசம்பந்தரும்,

*"பேசா அனுபூதி பிறக்க எனதுளத்தில்*
*ஆசா பசாசை அகற்றுவாய்–தேசாரும்*
*சிற்பரானந்தா! திருவாலவாயுறையும்*
*தற்பரா! சொக்கநா தா"*

*(சொக்கநாத வெண்பா,9)*

என்று மதுராபுரிச் சொக்கநாதரை வேண்டுகிறார்.

**முடிவுரை**

தீயைத் தொட்டவரே தீயின் வெம்மையை உணர்ந்தாராவர். அந்நிலையை வார்த்தைகளால் பிறருக்கு உணர்த்த இயலாது. அதுபோல,

இறைத்திருவருளால் விளையும் அனுபூதிநிலை இத்தகையது என்பதை உணர, அதனுள் அழுந்தி இன்புறும் இறையன்பர்களாலேயே இயலும்! பாசத்தால் கட்டப்பட்டு உலகியல் இன்பதுன்பங்களில் தடுமாறும் உயிர்களால் உணர இயலாது.

## 29. சைவசித்தாந்தம் கூறும் உயிர் உண்மை

### முன்னுரை

உயிரின் இருப்புப்பற்றி இந்திய தரிசனங்கள் பலவும் பலவகைகளில் கருத்துக்களைக் கூறுகின்றன. 'சித்தாந்தசைவம்' அக்கருத்துக்களுக்கு விளக்கம் கூறிப் பொருந்தாத கொள்கைகளை விலக்கி இவற்றிற்கப்பாற்பட்ட சிறந்த ஆராய்ச்சி அறிவு நெறிக்கு இணங்கப் பொருத்தமான வகையில் உயிருண்மையை நிலை நிறுத்துகின்றது.

### சிவஞான போதம்

சிவஞானபோதம் மூன்றாம், நான்காம் நூற்பாக்கள் உயிர் உண்மை பற்றிக் கூறுகின்றன. இவற்றுக்குச் சிவஞானமுனிவர் தம் முன்னுரையில் பின்வருமாறு விளக்கம் தருகின்றார்:

> *"உலகத் தோற்றத்திற்குத் துணைக் காரணமாகிய 'வினை' முதலியன உண்டென்று மேலைச் சூத்திரத்தாற்கூறி மூன்றாம் சூத்திரத்தில், உலகப்பயனை அனுபவிக்கும் உயிர் உண்டென்று அனுமானப் பிரமாணத்தால் கூறுகின்றார்"*

### மூன்றாம் சூத்திரக்கருத்து

ஆன்மப்பிரகாசம் உணர்த்துதல், உயிர் என்று ஒருபொருள் உள்ளது என்று விளக்கி நிறுவுதல்.

> *"உளது இலது என்றலின் எனது உடல் என்றலின்*
> *ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்*
> *உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின்*
> *மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா"*

என்பது நூற்பா.

இந்நூற்பாவின் இறுதியிலுள்ள 'ஆன்மா' என்ற சொல்லோடு, முதலில்

நிற்கும் 'உளது' என்ற சொல்லைப் 'பூட்டுவிற்பொருள்கோள்' முறையில் கூட்டி உரைத்தால் 'ஆன்மா உளது' என்ற சொற்றொடர் கிடைக்கும். உயிரின் இருப்புக்கு விளக்கமாக இந்நூற்பா அமைகிறது.

உயிரின் இருப்பைப் பற்றி மாறுபட்ட கருத்துக்களைக் கூறுகின்ற சமயத்தினர் எட்டு வகையிகர் ஆவர்.

1. சூனியான்ம வாதிகள் (பௌத்தருள் மாத்துமிகர்)
2. தூலதேகான்ம வாதிகள்
3. இந்திரியான்ம வாதிகள்
4. அந்தக்கரணான்ம வாதிகள்
5. சூக்கும தேகான்ம வாதிகள்
6. பிராணான்ம வாதிகள்

(1–6: உலகாயதர்)

7. விஞ்ஞானான்ம வாதிகள்– ஏகான்ம வாதிகள்
8. சமூகான்ம வாதிகள் (பௌத்தருள் சௌத்திராந்திகரும், வைபாடிகரும்)

இவ் எண் வகைச் சமயவாதிகளுள், அந்தக்கரணான்மவாதிகளைத் தவிர, மீதி எழுவரின் வாதங்கள் மூன்றாம் நூற்பாவிலும், அந்தக் கரணான்ம வாதிகளை நான்காம் நூற்பாவிலும் மறுக்கின்றார் மெய்கண்டார்.

### 1. 'இலது' என்றலின் 'உளது'

> *"உடல் பொறிபுலன்கள் என எல்லாவற்றையும் பகுத்து ஆராய்ந்தபொழுது ஆன்மா இன்னது என்று அறிய இயலாமையால் சூனியமே ஆன்மா"*

என்பர் சூனியான்ம வாதிகள்.

### மெய்கண்டாரின் மறுப்பு

> *"அவ்வாறு 'ஆன்மாச் சூனியம்' என்று அறிகின்ற அறிவைச் 'சூனியம்' எனக் கூற இயலாது. அவ்வறிவே ஆன்மா. எனவே சூனியத்தின் வேறாக ஆன்மா உள்ளது"*

என்பர் மெய்கண்டார்.

உடல், ஐம்பொறிகள் ஆகிய அனைத்தையும் இது நான் அன்று; இது

நான் அன்று என்று கண்டு அவற்றினின்றும் நீங்கியபின்னும் சூக்கும பஞ்சாக்கரத்தையே தனது வடிவமாகக் கொண்டு எல்லாவற்றையும் அறிந்துவந்த அறிவு ஒன்று நீங்காது உள்ளது. மாயையின் காரியமாகிய தத்துவங்கள் யாவும் இந்தச்சால நிலையில் உயிருடன் பொருந்தி நின்று உயிரறிவை விளக்கி நிற்குமேயன்றி, அவையே அறிவன அல்ல; கண்ணின் பார்வையை விளக்கும் கண்ணாடி கண்ணாகாது; அதுபோல், ஆன்மா மாயையாகாது; மாயையில் கட்டுண்டு அதனால் அறிவைப் பெறும் ஆன்மா, அந்த மாயைக்கு அப்பாற்பட்ட சிவமும் ஆகாது; இவ்விருபொருளினும் வேறுபட்ட ஒருதனிப் பொருளாகும்.

### ௨. எனது உடல் என்றலின் ஆன்மா உள்ளது

உலகாயதர் காட்சி ஒன்றையே அளவையாகக் கொள்வதால், காட்சிக்குத் தென்படும் உடலே ஆன்மா; உடலுக்கு வேறாக ஆன்மா இல்லை என்பர். சூன்யத்தை அறியும் அறிவு உடம்பிலேயே நிகழ்கிறது. "நான் மெலிந்தேன்; பருத்தேன்" என்று உடம்பையே சொல்லுகிறோம். எனவே, உடம்பே ஆன்மா என்பர் தூல தேகான்ம வாதிகள்.

இக்கருத்துக்கு மெய்கண்டார் பின்வருமாறு மறுப்புக் கூறுகிறார்.

> *"நான் பருத்தேன், மெலிந்தேன் நான் மனிதன் என, பருத்தல் முதலிய உடம்பின் குணவிசேடங்கள் உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கப்பட்டு வருகின்றன. 'யான் உடம்பு', 'யான்கை' என வழங்குவதில்லை. 'என் உடல்' என வேற்றுமைப்படவே வழங்குகின்றோம். இராகுவை, இராகுவின் தலை; என்பது போல, அதாஃவது இராகுவே இராகுவின் தலை அதற்குப் பிறிதானது அன்று என்று சிறுபான்மை வழக்குப் போல, உடலே உயிர் என்று பொருள் கொள்ளக் கூடாது எனவே உடலின் வேறாய் உயிர் உள்ளது"*

### 3. ஐம்பொறிகளுக்கு வேறாய் ஆன்மா உள்ளது

> *"சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலஉணர்வுகளையும் வாய் முதலிய ஐந்து பொறிகளே அறிகின்றன. எனவே அப்பொறிகள்*

*உடல்போல் சடப்பொருள்கள் அல்ல. மேலும், வாய் முதலியவற்றின் தொழில்களை 'நான் உண்டேன், கேட்டேன்' என்று கூறுவதும் உலகியலில் ண்கிறோம் எனவே ஐம்பொறிகள் தாம் உயிர்"*

என்பர் இந்திரியான்ம வாதிகள்

**மெய்கண்டார் இதனை மறுக்கும்போது,**

*"ஐம்பொறிகள் ஒவ்வொன்றும் ஒருபுலனை மட்டுமே அறியும்; ஏனைய புலனையறியாது; மேலும், யான் இப்புலனையறிகிறேன் என்று தமது இயல்பையும் அவை அறியா; ஐம்புலன்களையும் ஒருசேர அறிவது ஆன்மாவே; எனவே ஐம்பொறிகளுக்கு வேறாக ஆன்மா உள்ளது"*

என்று விளக்குகிறார்.

**4. நுண்உடலுக்கு வேறாக ஆன்மா உள்ளது**

(நுண்உடலாகிய சூக்குமதேகம் என்பது, சூக்கும பூதங்களாகிய தன்மாத்திரைகள் ஐந்தும், மனம், அகங்காரம், புத்தி ஆகிய அகக்கருவிகள் மூன்றும் சேர்ந்தது—புரி அட்டக சரீரம் எனவும் கூறப்படும்)

*"சூக்கும தேகம் அகத்தில் நின்றே இந்திரியங்களைச் செலுத்திப் புறப்பொருள்களை அறியும். அதனால் சூக்குமதேகமே ஆன்மா"*

என்று சூக்கும தேகான்ம வாதிகள் வாதிடுவர்.

**மெய்கண்டாரின் மறுப்பு**

*"உயிர், தூக்கத்தில் தான் கண்ட கனவை, நனவின் கண் மயங்கி அறிகிறது. சூக்கும உடலோடு நின்று கனவில் கனவைத் தெளிவாக அறிவதும், பின் அதனின்றும் தூலஉடம்பை அடைந்து நனவில் கனவை மயங்கி அறிவதும் ஆகிய ஆன்மா சூக்கும தேகத்திற்கு வேறாக உள்ளது"*

## 5. பிராண வாயுவுக்கு வேறாக ஆன்மா உள்ளது

*"சூக்கும தேகம் கனவில்மட்டும் செயல்பட்டு மற்றநிலைகளான சுழுத்தி, துரியம் இவற்றில் செயல்படாது நிற்கிறது. பிராணவாயு அங்ஙனமின்றி எல்லா நிலைகளிலும் செயல்படுகிறது. எனவே, பிராணவாயுவே, உள்ளே சென்று ஒடுங்கியும், வெளிவந்து இயங்கியும் நிற்கின்ற ஆன்மாவாகும்"*

என்பர் பிராணான்ம வாதிகள்

### மெய்கண்டாரின் மறுப்பு :

*"தூக்கத்தில் பிராணவாயு செயல்பட்டாலும் புறக்கருவிகள் செயல்படாது ஒடுங்கிக்கிடப்பதால் விழிப்பு நிலையில் அக்கருவிகள் இயங்குமாறு இயக்கி, தூக்கத்தில் அவற்றை இயக்காது ஒடுக்கி நிற்கும் ஆன்மா, பிராணவாயுவுக்கு வேறாக உள்ளது"*

ஆன்மா விழிப்பு நிலையில் கருவிகளை இயக்கித்தானும் இயங்குகிறது உறக்க நிலையில் கருவிகளை ஒடுக்கித் தானும் ஒடுங்கியிருக்கிறது.

## 6. பிரமத்திற்கு வேறாக ஆன்மா உள்ளது

*"தூலசரீரம் முதல் பிராண வாயு முதலாகக் கூறப்பட்டவையனைத்தும் சடப்பொருட்கள். எனவே அவற்றுள் ஒவ்வொன்றை ஆன்மா எனக் கூறுதல் பொருந்தாது. பிரமம்–மேற்கூறியனபோல் அன்றிச் சித்துப் பொருளாயிருப்பதால் அதுவே ஆன்மா ஆகும்"*

என்று வாதிடுவர் விஞ்ஞானான்ம வாதிகள்

### மெய்கண்டாரின் மறுப்பு

*"பிரம்மமாகிய இறைப்பொருள் எல்லாவற்றையும் தானே ஒருங்கே இயல்பாக அறிந்தாங்கு அறிவதாகும். ஆனால், ஆன்மாவோ கருவிகளோடு கூடியே உலகப் பொருள்களை அறியும். அந்நிலையிலும் தன்னியல்பைக் கருவிகளால் அறியஇயலாது. ஞானாசிரியர் அறிவுறுத்தவே அறிவதும், கருவிகளால்*

*பொருள்களை அறியுமிடத்தும், எல்லாவற்றையும் ஒருங்கே அறிய இல்லாமல், ஒவ்வொன்றாகவே அறிவதும், அறிந்ததையும் மறந்து பின்பு அறிவதும், ஒன்றையறியும் பொழுதும் இடைவிடாமல் அறியமாட்டாது விட்டுவிட்டே அறியும் இயல்புகளை உடையது; பிரமம், தானே அறியும் சூக்கும சித்து; ஆன்மாவோ அறிவிக்க அறியும் தூலசித்து. எனவே, ஆன்மா பிரமத்திற்கு வேறாக உள்ளது"*

**7. கருவிகளின் கூட்டத்திற்க வேறாக ஆன்மா உள்ளது**

*"கருவிகள் தனித்தனியே நிற்பினும், அவற்றுள் ஒன்றையொழித்து மற்றவையெல்லாம் கூடிநிற்பினும் அறிவு நிகழாது. கருவிகள்அனைத்தும் குறைவின்றி ஒருங்கு கூடிய வழியே அறிவு நிகழும். எனவே அனைத்துக் கருவிகளின் கூட்டமே ஆன்மா ஆகும்".*

என்று கூறுவர் சமூகான்ம வாதிகள். இவர்கள், பௌத்தருள் சௌத்திராந்திகரும், வைபாடிகரும் ஆவர்.

**மெய்கண்டாரின் மறுப்பு**

*"கருவிகள் பலவற்றுள் ஒன்றேனும் ஆன்மா என்னும் பெயருக்கு உரியதாகவில்லை. மேலும் அக்கருவிகளின் கூட்டமும் உடம்பு என்றே பெயர் பெறுவதன்றி ஆன்மா என்று பெயர் பெறுதல் இல்லை" எனவே கருவிகளும் கருவிக் கூட்டமும் கண்ணுக்குப் பார்வையை விளக்குகின்றன. விளக்குப்போல ஆன்மாவுக்கு அறிவை விளக்குவனவன்றி அவை தாமே அறிவு ஆகா; ஆதலால், அறிவுப் பொருளாகிய ஆன்மா, சடமாகிய கருவிக் கூட்டத்திற்கு வேறாய் உள்ளது".*

**8. அந்தக்கரணங்களுக்கு வேறாக ஆன்மா உள்ளது**

*"மனம் முதலிய அந்தக் கரணங்கள் ஆன்மா என்ற பெயரால் கூறப்படுதலைச் சித்தாந்த நூல்களிலே காணலாம். எனவே, அகக்கருவிகள் தனித்தோ, ஒருங்கு கூடியோ ஆன்மாவாம் என்பது பொருந்தும்"*

RE-13

என்பர் அந்தக் கரணான்மவாதிகள்.

**மெய்கண்டாரின் மறுப்பு**

*"மனம், பொருளைப் பற்றி, புத்தி நிச்சயித்து, அகங்காரம் அறிவேன் என்று எழுந்து, சித்தம சிந்திக்கும் இவையும் பிறபொறிகளைப் போலவே ஒன்றனை ஒன்று அறியா; தம்மையும் அறியா; ஒன்றன் தொழிலை மற்றொன்று செய்யா; இவை பொருள் நோக்குடையவையெனினும் அறிகிறோம் என்ற தன்னோக்கு அற்றவை; அந்தக் கரணங்கள் தமக்குக் கீழ் உள்ள கருவிகளை நோக்க அறிவாய் நின்றே, தம்மை நோக்க அறிவில்லாதவையாக நிற்கும். ஆன்மா, இவ்வாறன்றி, யான் சிந்திக்கிறேன், யான் நிச்சயிக்கிறேன் என்று தன் செயலைத்தான் உணர்ந்து நிற்கும். தன்னை நோக்கவும் சித்தாக நிற்கும் ஆன்மா, மனோபுத்தி அகங்கார சித்தங்களில் ஒன்று அன்று"*

மற்ற கருவிகளை நோக்க அகக்கருவிகள் ஆன்மாவுக்கு மிக அணுக்கமான கருவிகளாய் இருத்தல்பற்றி அவையே ஆன்மா என்று உபசரித்துக் கூறப்படும். இவையும் மற்ற கருவிகளைப் போலவே, கண்ணுக்கு விளக்கு உதவுவது போல, ஆன்மாவுக்கு அறிவு விளக்கம் செய்கின்றன".

**முடிவுரை**

மெய்கண்டார், தருக்கமுறையில் உயிர் உண்மையை நிறுவும் இத்தகு கருத்துக்கள் போற்றத் தகுவன.





## முனைவர் (திருமதி) எம். தேவகி

| | | |
|---|---|---|
| பிறந்த நாள் | : | 4-6-1958 |
| கல்வித் தகுதி | : | எம்.ஏ., (தமிழ்); பிஎட்., எம்.ஃபில்., (சைவசித்தாந்தம்) பிஎச்.டி., (சைவ சித்தாந்தம்) |
| பணி | : | உதவி ஆசிரியர், சைவ சித்தாந்தத் தத்துவத்துறை, ம.கா. பல்கலைக்கழகம், மதுரை. |
| வெளிவந்த நூல்கள் | : | மூன்று |
| வெளி வந்த கட்டுரைகள் | : | உலகளாவிய இதழ்களான 'தமிழ்மாருதம்'; 'சைவ உலகம்'; 'சைவநீதி'; 'சித்தாந்தம்' முதலான இதழ்களில் சைவசமய ஆய்வுக் கட்டுரைகள் 60க்கும் மேற்பட்டவை. |
| சிறப்பு | : | தருமை ஆதீனம் நடத்திய சைவ சித்தாந்த வகுப்பில் 4 ஆண்டுகள் முறையாகப் பயின்று 'சைவசித்தாந்தப் புலவர்'; 'சைவசித்தாந்த கலாநிதி' ஆகிய பட்டங்கள் பெற்றமை; ம.கா. பல்கலைக்கழகம் சைவசித்தாந்த எம்.ஃபில்., முதல் வகுப்பில் முதல் தரத்தில் தேர்ச்சி; 'மெய்கண்ட சாத்திரங்களில் திருவருள் விளக்கம்' என்ற பொருளில் முனைவர் பட்ட ஆய்வு. சைவசித்தாந்தத் தத்துவத்துறை எம்.ஃபில்., மாணவர்கட்கு மேற்பார்வை (Guide), சமயச் சொற்பொழிவாளர் – சமய இலக்கிய மாநாடுகளில் பங்குபெற்றமை. வானொலியில் சமய, தத்துவ சொற்பொழிவுகள் ஆற்றியமை. |

Amuthachakam, Madurai. Ph.: 2382029